# கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு

(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் **(Ph.D)** பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு)


**ஆய்வாளர்**

ப. இப்ராஹிம்
(பதிவு எண் : 017)

நெறியாளர்
முனைவர் ச. முருகேசன்






அழகப்பா பல்கலைக்கழகம்,
(தேசியத் தர மதிப்பீட்டுக்குழுவின் மறுமதிப்பீட்டில் “ஏ” தகுதி பெற்றது)
காரைக்குடி – 630 003.

ஜூன் 2015

**முனைவர் ச. முருகேசன், எம்.ஏ., எம்.ஃ.பில், பிஎச்.டி.,**
**இணைப்பேராசிரியர்,**
**தமிழ் உயராய்வு மையம்,**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி,**
**காரைக்குடி – 630 003.**

**நாள் :**

# நெறியாளர் சான்றிதழ்

**'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு'** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வுரை, அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் திரு. ப. இப்ராஹிம் என்பார் காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் மேற்கொண்ட பகுதி நேர ஆய்வில் உருவாக்கப் பெற்றதாகும். இவ்வாய்வுரை அல்லது இதன் பகுதிகள் இதற்கு முன்பு வேறு எந்தப் பட்டத்திற்கோ அல்லது ஆய்வரங்கிற்கோ அளிக்கப் பெறவில்லை என்பதற்கும், இஃது ஆய்வாளர் தம் சொந்த முயற்சியினால் உருவாக்கப் பெற்றது என்பதற்கும் சான்றிதழ் வழங்குகிறேன்.

(ச. முருகேசன்)
நெறியாளர்

**காரைக்குடி**

**ப. இப்ராஹிம்,**
**பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,**
**தமிழ் உயராய்வு மையம்,**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி,**
**காரைக்குடி – 630 003.**

**நாள் :**

# ஆய்வாளர் உறுதிமொழி

**‘கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு’** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வுரை, யான் மேற்கொண்ட பகுதி நேர ஆராய்ச்சியின் பயனாக அமைந்ததாகும். இவ்வாய்வுரை இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டம், சான்றிதழ், பல்கலைக்கழக உறுப்பினர்தகுதி போன்றவற்றிற்கு அளிக்கப்பெறவில்லை என்றும், இ∴து என் சொந்த முயற்சியால் உருவாக்கப் பெற்றது என்றும் உறுதி கூறுகிறேன்.

(ப. இப்ராஹிம்)
ஆய்வாளர்

காரைக்குடி

உறுதிக்கையொப்பம்
முனைவர் ச. முருகேசன்,
இணைப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி - 630 003.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ.ப.த.ம. | - | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| கலித் | - | கலித்தொகை |
| குறுந். | - | குறுந்தொகை |
| குறள் | - | திருக்குறள் |
| செ.ப.க. | - | சென்னைப் பல்கலைக்கழகம் |
| தொ.ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நற். | - | நற்றிணை |
| நூ | - | நூற்பா |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பதி.ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| பா | - | பாடல் |
| பா.எ | - | பாடல் எண் |
| பா.ப.க. | - | பாரதிதாசன் பல்கலைக்கழகம் |
| பி.ப.ஆ | - | பிஎச்.டி பட்ட ஆய்வேடு |
| புறம். | - | புறநானூறு |
| மேலது | - | மேற்கூறிய நூல் |
| p | - | page |

# நன்றியுரை

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு' என்னும் இவ்வாய்வேடு சிறந்த முறையில் அமைவதற்கு அருள்புரிந்த இறைவனுக்கு முதற்கண் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இனிய தமிழ் ஆய்வுகள் நாளும் நடைபெற அருந்தொண்டாற்றி வரும் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வுப் பணி செய்ய வாய்ப்பளித்த காரைக்குடி அழகப்பா அரசு கலைக் கல்லூரிக்கும், கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்திற்கும், கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் நன்றி.

ஆய்வு முயற்சிகளை ஊக்குவித்து, உற்சாகப்படுத்தி, உழைக்கத் தூண்டி, அரிய ஆலோசனைகளை வழங்கி, நெறியாளராய் நெறிப்படுத்திய காரைக்குடி அழகப்பா அரசு கலைக் கல்லூரி இணைப் பேராசிரியர் முனைவர் ச. முருகேசன் அவர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு முயற்சிகளுக்கு தொடர் ஊக்கமளித்த டாக்டர் சாகிர் உசேன் கல்லூரிச்செயலர் ஜனாப் V.M ஜபருல்லாகான் அவர்களுக்கும், மேனாள் கல்லூரி முதல்வர் மேஜர் H. நௌசாத்அலி அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் முனைவர் A. அப்பாஸ் மந்திரி அவர்களுக்கும், கல்லூரி ஆட்சிக் குழுவினருக்கும் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குத் தொடர் ஊக்கமளித்த டாக்டர் சாகிர் உசேன் கல்லூரி மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் சேக்கிழார் அவர்களுக்கும், வணிகவியல் துறைப் பேராசிரியர்கள் முகம்மது ஜலீல், பீர் இஸ்மாயில் அவர்களுக்கும், தமிழ்த்துறைப் பேராசிரியர் கா.அப்துல்ரஹிம், பேராசிரியை மு. கதிஜா பீவி அவர்களுக்கும்,

அரபுத்துறைத்தலைவர் பேராசிரியர். A. அப்துல் ரவூப் அவர்களுக்கும், சக பேராசிரியர்களுக்கும், பேராசிரியர். ஜோ மார்ட்டின் ஜெயப்பிரகாஷ் அவர்களுக்கும் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்கு தேவையான நூல்களை வழங்கி உதவிய எம் கல்லூரி நூலகருக்கும், அழகப்பா அரசு கலைக் கல்லூரி நூலகத்தினருக்கும் என் நன்றி என்றும் உரியது.

என்றும் எனக்கு உறுதுணையாக இருக்கும் அன்புப் பெற்றோர் ப.பகர்தீன், இ.நபிசாபீவி ஆகியவர்களுக்கும், அன்புச் சகோதரர்களுக்கும், அன்புத் துணைவியார் கா.சமீனாபீவி, மகள் இர்பானா சப்ரின் மகன் இர்ஷாத் அகமது ஆகியோருக்கும் நன்றி.

என் உயர்வில் எப்போதும் மகிழ்ந்து, என்னுடனே, என் சிந்தனையுடன் ஒத்து இயங்கும் அன்புச் சகோதரி ம.ஜெஸீலா அவர்களுக்கும் என் இதயம் கலந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

அச்சாக்க முயற்சியில் உதவி செய்து, கணினி அச்சு செய்து தந்துள்ள AVS Graphics, Nagercoil அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ப.இப்ராஹிம்

பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

கவிஞர் வைரமுத்து மரபுக் கவிதையில் காலூன்றி, புதுக்கவிதையில் தடம் பதித்த சிந்தனையாளர். நாவலாசிரியர், காப்பியக் கவிஞர் எனத் தமிழ் கூறும் நல்லுலகம் போற்றும் பன்முகப் படைப்பாளி. திரையிசைப் பாடல்கள் மூலம் உலகமெங்கும் நன்கு அறிமுகமானவர். கவிஞர் கண்ணதாசனுக்குப் பிறகு பாமர மக்களால் நன்கு அறிமுகமான கவிஞராக விளங்குபவர். எளிமை, இனிமை, புதிய சொல்லாடல்கள், கிராமியப் பேச்சு வழக்குகள் போன்றவை இவர் படைப்பின் முதன்மைப் பண்புகளாகும். பட்டறிவும், படிப்பறிவும் இவரின் படைப்புகளில் இரண்டறக் கலந்தே வெளிப்படும். இவரின் படைப்புலகம் ஆழமானது. அகநோக்குடையது; புரட்சிகரமானது. படைப்பாளியின் உள்ளத்தில் பதிந்திருக்கும் ஒரு சில கருத்துக்கள் அவரை அறிந்தோ, அறியாமலோ அவரின் படைப்புகளில் அதிகளவு இடம் பெறுவதுண்டு. அந்த அடிப்படையில் இன்ப உணர்வுகளை இலக்கியங்களாகப் பகிர்ந்து கொள்ளும் போது, தான் வாழ்ந்த சமூகச் சூழலையும், இடப் பின்னணியையும் தொடர்புபடுத்தி இலக்கியங்களைப் படைத்துள்ளார். தான் பிறந்த மண்ணின் வாசனை வீசும் படியும், அவர்களின் வாழ்வியல் உண்மைகளையும், அவர்களின் வறுமையையும், உழைக்கும் வர்க்கத்தின் நம்பிக்கைகளையும். பண்பாட்டு, கலாச்சார, பொருளியல் சிந்தனைகளையும், அவர்களின் வட்டார வழக்குச் சொற்களில் காணப்படும் நடையழகினையும், இயற்கை நேசிப்பின் அழகியலையும் பொருளுக்கு ஏற்ற வடிவத்தைத் தேர்ந்தெடுத்து, தனது மொழி ஆளுமையைப் பதிவு செய்தவர் என்பதை நிறுவ ஆர்வம் ஏற்பட்டதாலே இவ்வாய்வுப் பொருள் தெரிவு செய்யப்பட்டது.

## ஆய்வுத் தலைப்பு

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு' என்பது ஆய்வுத் தலைப்பு ஆகும்.

## முன்னாய்வுகள்

தமிழகத்தில் சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வுகளுக்குப்பின் அதிக எண்ணிக்கையில் ஆய்வு செய்யப்படும் தனிமனிதரின் படைப்புகள் கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளாகும். தமிழகப் பல்கலைக்கழகங்கள் தாண்டியும் உலக அளவில் பல்வேறு பல்கலைக் கழகங்களிலும் கவிஞரின் படைப்புகள் தொடர்ச்சியாக ஆய்வு செய்யப்பட்டு வருகின்றது. கவிஞர் வைரமுத்துவின் படைப்புகள் குறித்து 'வைரமுத்துவின் கவிதைக்கலை' என்னும் தலைப்பில் ச. முத்துலிங்கமும், 'கருவாச்சி காவியம் ஓர் மதிப்பீடு' என்னும் தலைப்பில் த. தனலெட்சுமியும், 'கவிஞர் வைரமுத்து கவிதைகளில் சமுதாயச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில் த. பிரேம் குமாரும், 'வைரமுத்து கவிதைகளில் பொருளியல்' என்னும் தலைப்பில் ர. கணேஷ் பாபுவும், வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம் என்னும் தலைப்பில் இதயகீதனும், வைரமுத்துவின் கவிதைகளில் தேச சிந்தனைகள் என்னும் தலைப்பில் செ. சக்தி முருகனும், கள்ளிக் காட்டில் கவிப் பேரரசு என்னும் தலைப்பில் வீ. ஜோதிமணியும், 'வைரமுத்துவின் திரையிசைப் பாடல்களில் நாட்டுப்புறத்தாக்கம்' என்னும் தலைப்பில் சு. மீனலோசினியும், 'திரைக் கம்பன் வைரமுத்து' என்னும் தலைப்பில் தங்க. செந்தில்குமாரும், 'சமூகப்

பண்பாட்டியல் நோக்கில் வைரமுத்துவின் படைப்புகள்' என்னும் தலைப்பில் க. தேன்மொழியும், 'கவிஞர் வைரமுத்து படைப்புகளில் ஐம்பூதங்கள்' என்னும் தலைப்பில் க.பானுமதியும் 'வைரமுத்துவின் திரைப் பாடல்களில் காதல்' என்னும் தலைப்பில் ப. ஆனந்த கிருஷ்ணனும் ஆய்வு நிகழ்த்தியுள்ளனர். இந்த ஆய்வுகள் அனைத்தும் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப் பெற்றுள்ளன.

'வைரமுத்து படைப்புகளில் 'மனித கோட்பாடுகள்' என்னும் தலைப்பில் கே. மோகனாவும், 'வைரமுத்து படைப்புகளில் மனித உரிமை சிந்தனைகள்' என்னும் தலைப்பில் க. சரவணனும், 'வைரமுத்து படைப்புகளில் படைப்பாளுமை' என்னும் தலைப்பில் சோ. மனோன்மணியும் ஆய்வு நிகழ்த்தியுள்ளனர். இந்த ஆய்வுகள் அனைத்தும் திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப் பெற்றுள்ளன.

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் உயிரினங்கள்' என்னும் தலைப்பில் செ. சிவகாமி சுந்தரியும், 'வைரமுத்துவின் கவிதை ஆளுமைத்திறன்' என்னும் தலைப்பில் தி. கலைச் செல்வியும், 'கவிஞர் வைரமுத்துவின் கவிதை ஆளுமை' என்னும் தலைப்பில் அரங்காராஜூம், 'சிற்பி – வைரமுத்து கவிதைகளில் மனிதம்' என்னும் தலைப்பில் பெ. சாந்தியும், 'மேத்தா – வைரமுத்து கவிதைகள் ஓர் ஒப்பீடு' என்னும் தலைப்பில் சி. பிரகாச நித்திலாவதியும், 'கண்ணதாசன் - வைரமுத்து திரையிசைப் பாடல்களில் நாட்டுப்புறப் பாட்டின் தாக்கம்' என்னும் தலைப்பில் த.ரா. கலாவும் ஆய்வு

நிழ்த்தியுள்ளனர். இந்த ஆய்வுகள் அனைத்தும் திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப் பெற்றுள்ளன.

‘கவிஞர் வைரமுத்துவின் கவிதையாக்கமும் ஆளுமைத் திறனும்’ என்னும் தலைப்பில் இரா. சித்ராவும், ‘வைரமுத்து கவிதைகளில் சமுதாயச் சிந்தனைகள்’ என்னும் தலைப்பில் சி. அரங்கராசுவும், ‘வாழ்க்கை நதியோடு வைரமுத்து’ என்னும் தலைப்பில் க.ஆ. முருகேசனும், ‘கவிஞர் வைரமுத்துவின் புதினப் படைப்பாக்கத் திறன்’ என்னும் தலைப்பில் மா. சீதாலெட்சுமியும், ‘மானுடவியல் நோக்கில் கவிஞர் வைரமுத்துவின் இரட்டைக் காப்பியங்கள்’ என்னும் தலைப்பில் அருவி. தேன்மொழியும், ‘உளவியல் நோக்கில் வைரமுத்துவின் புதினங்கள்’ என்னும் தலைப்பில் அ. இந்துமதியும், ஆய்வு நிகழ்த்தியுள்ளனர். இந்த ஆய்வுகள் அனைத்தும் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப் பெற்றுள்ளன.

‘வைரமுத்து கவிதைகளில் உவமையும் இயற்கையும்’ என்னும் தலைப்பில் அ. பழமொழி பாலன் என்பார் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக ஆய்வு நிகழ்த்தியுள்ளார். ‘சமுதாயக் கடலில் வைரமுத்து’ என்னும் தலைப்பில் கொளஞ்சி என்பார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக ஆய்வு நிகழ்த்தியுள்ளார்.

## ஆய்வு நோக்கம்

கிராமங்களைவிட்டு மக்கள் நகர நாகரிகங்களை நாடுவதினால் கிராமப்புற மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், பொருளியல் சிந்தனைகள், மனித நேயப் பண்பாடுகள் பலருக்குத் தெரியாமலே போய்விடுகின்றன, இன்றைய இளைய தலைமுறைக்கு அந்த வழக்காறுகளைச் சொல்ல வேண்டும் என்பதும், இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை வாழ்பவர்கள் கிராமத்து மக்கள் என்பதையும், படிப்பவர்களின் சிந்தனையைத் தூண்ட, நிகழ்ந்த நிகழ்வுகளையும், தம் அனுபவத்தில் கண்டதையும் உள்ளடக்கமாகத் தெரிவு செய்திருப்பதைப் புலப்படுத்துவதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

கிராமப்புற மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளையும், மண் சார்ந்த சொல்லாடல்களையும், கிராமப்புற மக்களின் சமுதாய நடப்பியல் கருத்துக்களைத் தக்க வடிவத்தில் பதிவு செய்துள்ளார் என்பதை இவ்வாய்வு கருதுகோளாகக் கொள்கின்றது.

## ஆய்வு எல்லை

கவிஞர் வைரமுத்துவின் நாற்பது படைப்புகளில் வைகறை மேகங்கள், திருத்தி எழுதிய தீர்ப்புகள், இன்னொரு தேசிய கீதம், ரத்ததானம், கொடி மரத்தின் வேர்கள், இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல, தண்ணீர்தேசம், பெய்யெனப் பெய்யும் மழை, தமிழுக்கும் நிறமுண்டு, கள்ளிக்காட்டு இதிகாசம், கருவாச்சி

காவியம், இதுவரை நான், காவி நிறத்தில் ஒரு காதல், என் பழைய பனை ஓலைகள், பாற்கடல், கவிராஜன் கதை, வைரமுத்து கவிதைகள் ஆகியவை ஆய்வு எல்லைகளாக அமைகின்றன.

## சான்றாதாரங்கள்

### அ. முதன்மைச் சான்றாதாரங்கள்

கவிஞர் வைரமுத்துவின் நாற்பது படைப்புகளில் பதினேழு நூற்கள் மட்டும் முதன்மைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

### ஆ. துணைமைச் சான்றாதாரங்கள்

திறனாய்வுக் கலை, ஆய்வு அணுகுமுறைகள், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், கவிஞர் வைரமுத்துவின் படைப்புகள் தொடர்பாக வந்துள்ள பிற ஆராய்ச்சி நூல்கள், நாட்டுப்புறச் சிந்தனைகளை விளக்கும் நூல்கள், கலைக் களஞ்சியங்கள், கவிதை குறித்த ஆங்கில ஆய்வு நூல்கள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

## ஆய்வு அணுகுமுறை

கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளின் மூலம், அவரின் வாழ்வியலோடு தொடர்புடைய கருத்துக்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு, பின் அவை முறைப்படுத்தப்பட்டு விளக்கப்படுவதால் இவ்வாய்வில் விளக்க முறை ஆய்வும், கிராமியப் பண்பாட்டுக் கருத்துக்களை திறனாய்வு செய்வதில், திறனாய்வு முறையும், சமுதாயவியல் அணுகு முறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வு, ஆய்வு அறிமுகம், முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டது. அவை

1. கவிஞர் வைரமுத்துவின் வாழ்க்கை வரலாறும் படைப்புகளும் - ஓர் அறிமுகம்.

2. கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் வெளிப்படும் நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் செய்திகள்.

3. கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளிலுள்ள கிராமப்புற மக்களின் பண்பாட்டுச் சிந்தனைகள்.

4. கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் கூறப்படும் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள்.

5. கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் வட்டார வழக்காறுகள்.

என்பனவாம். 'கவிஞர் வைரமுத்துவின் வாழ்க்கை வரலாறும் படைப்புகளும் - ஓர் அறிமுகம்' என்னும் முதல் இயலில் நூலாசிரியரின் வாழ்க்கைக் குறிப்புகளும், அவரின் படைப்புகளைப் பற்றிய விளக்கமும் இடம் பெற்றுள்ளது.

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் வெளிப்படும் நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் செய்திகள்' என்னும் இரண்டாம் இயலில், கிராமப்புற மக்களின் உழைப்பு, அவர்களின் வாழ்க்கையில் உள்ள வறுமை, வறுமையிலும் செம்மையான வாழ்க்கை, மனித நேயப் பண்பு, உழவுத் தொழிலின் முறைகள்,

விவசாயம் சார்ந்த தொழில்கள், பிறதொழில்கள் மூலம் பொருளீட்டுதல், சிக்கனம், சிறுசேமிப்பு ஆகியன குறித்து ஆராய்கிறது.

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளிலுள்ள காணப்படும் கிராமப்புற மக்களின் பண்பாட்டுச் சிந்தனைகள்' என்னும் மூன்றாம் இயலில், கிராம மக்களின் பண்பாடு, கலாச்சாரம் பற்றியும், அஃறிணைகளையும் உயர்திணைகளோடு சேர்த்து மதிக்கும் கலாச்சாரம் தொடர்பான செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் கூறப்படும் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள்' என்னும் நான்காம் இயலில், கிராமப்புற மக்களின் வழிபாட்டு முறைகள், செயல்களில் காணப்படும் நம்பிக்கைகள், பிறந்த மண் மீதும், உழைப்பின் மீதும் உள்ள நம்பிக்கைகள் போன்றவற்றை ஆராய்வதாக அமைகிறது.

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் வட்டார வழக்காறுகள்' என்னும் ஐந்தாம் இயலில், வட்டார வழக்குச் சொற்கள் உருமாற்றம் அடைதல், மொழிநடை, பிறமொழிச் சொற்கள், ஒலிக் குறிப்புச் சொற்கள் விளக்கம், உவமை, உருவ நடைகள் மூலம் மொழியைக் கையாளும் திறன் பற்றி ஆராயப்பெற்றுள்ளது.

இயல்கள் தோறும் காணப்படும் ஆய்வு முடிவுகள் இறுதியில் முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பின்னிணைப்பில் துணை நூற்பட்டியல் இடம் பெற்றுள்ளது. ஆய்வுத் தலைப்புத் தொடர்பான வரைபடமும்,

படைப்பாளர் வாங்கிய விருதுகள் தொடர்பான புகைப்படங்களும் இணைக்கப் பெற்றுள்ளன.

# இயல் 1

## கவிஞர் வைரமுத்துவின் வாழ்க்கை வரலாறும் படைப்புகளும் - ஓர் அறிமுகம்.

தமிழ் இலக்கிய உலகில் தனிமுத்திரையைப் பதித்த புலவர்களும் கவிஞர்களும் பலர். மரபுக் கவிதை, புதுக்கவிதை, வசனகவிதை, திரைக் கவிதை, பயணக் கட்டுரை, நாவல் ஆகிய இலக்கியப் பணியில் தனக்கென சிறப்பானதொரு இடத்தைப் பிடித்துக் கொண்டவர் கவிஞர் வைரமுத்து ஆவார். இவர் தனது சுயசரிதையை 'இதுவரை நான்' என்னும் நூலாக வெளியிட்டுள்ளார். இந்நூல் கவிஞரின் 28-ஆம் வயதில் எழுதப்பட்டதாகும். உலகமெங்கும் இருக்கும் தமிழர்கள் அறிந்திருக்கும் பெயர் வைரமுத்து. கவியரசர் கண்ணதாசனுக்குப் பிறகு தமிழ்த் திரை உலகில் இருபத்தி ஐந்து ஆண்டுகளாக முத்திரை பதித்து வரும் கவிஞர். சிலப்பதிகாரம் - மணிமேகலைக்குப் பிறகு தமிழகத்தில் கள்ளிக்காட்டு இதிகாசம் - கருவாச்சி காவியம் என்ற இரட்டைக் காப்பியம் எழுதியவர் கவிஞர் வைரமுத்து.

காலத்தால் அழிக்க முடியாத தமிழ் மரபு தொடர்பான ஆழமான பல்வேறு படைப்புகளைப் படைத்து தமிழன்னைக்கு மணிமகுடம் சூட்டியவர். ஈராயிரமாண்டு பழமை மிக்க தமிழ் இலக்கியப் பரப்பினைப் புதிய சிந்தனைகளோடு சந்தைப் படுத்தியவர். தமிழ் இலக்கிய உலகின் அத்தனைப் பரப்புகளிலும் தடம் பதித்தவர். படைப்பாசிரியரின் வாழ்வியல் நிகழ்வுகளை அறிந்து கொள்வது அவசியம் என்பதால் இவ் இயல் ஒரு கிராமத்துத் தமிழன் கவிஞனாகி, கவிப்பேரரசராக உருமாறிய வரலாற்று நிகழ்வுகளை ஆராய்கிறது.

## கவிஞரின் பிறப்பு

தமிழ் இலக்கிய வரலாற்றில் தடம் பதித்த பல்வேறு கவிஞர்கள் தென்தமிழகத்தில் கருக்கொண்டு உருவானவர்கள். ஈராயிரமாண்டு வரலாற்றில் கவிமணி, பாரதி, வ.உ.சி. போன்ற கவிஞர்கள் தென்தமிழகத்தில் இருந்து வந்தவர்கள். அந்தப் பெரும் புலவர்களின் வரிசையில் பழைய மதுரை மாவட்டத்தைச் சார்ந்த, இன்றைய தேனி மாவட்டத்தில் ஓர் எளிய விவசாயக்குடும்பத்தில் பிறந்தவர் கவிஞர் வைரமுத்து. அன்பின் ஐந்திணையில் நெய்தல் நிலம் தவிர்த்து மலைகள், ஆறுகள், வயல்கள், காடுகள் நிறைந்த, செழித்தோங்கும் மண்ணிற்குச் சொந்தக்காரரான கவிஞர் வைரமுத்து கி.பி. 1953-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் பதின்மூன்றாம் நாள் மெட்டூரில் பிறந்தார். அவ்வூர் அறுபது வீடுகள் கொண்ட ஒரு குக்கிராமமாகும். கவிஞர் வைரமுத்து தன் ஐந்து வயது வரை பிறந்து வளர்ந்த மெட்டூர், கிராமமக்கள், ஊர் மண்ணோடு போராடிய மனிதர்களும் ஆடுமாடுகளும், பறவைகளும், ஊரைப் பல்லாண்டுகள் காவல் காத்த சீமைக் கருவை முள் மரங்களும் அடர்ந்திருந்த மெட்டூர் தற்போது வைகை அணைக் கட்டுக்குள் மூழ்கியுள்ளது. மெட்டுரோடு சேர்ந்து பதினான்கு கிராமங்கள் வைகை அணையின் நீர்த்தேக்கத்திற்குள் மண்ணொடு மண்ணாக மக்கிப் போயிருக்கிறது.

> ‘‘ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பதுகளில் வைகை அணை கட்டப் படுவதற்குத் திட்டமிடப்பட்டபோது அதைச் சுற்றியிருந்த கிராமங்கள் காலி செய்யுமாறு கட்டளையிடப்பட்டன. அந்த கிராமங்களில் ஒன்று தான் மெட்டூர் கிராமம் ஆகும்’’[1]

கவிஞரின் பெற்றோர்கள் இராமசாமித் தேவர், அங்கம்மாள் என்பவராவர். தாத்தா சின்னாங்கி உடையத் தேவர்.

## புலம்பெயர்தல்

கி.பி. 1957-இல் வைகை அணை கட்டி முடிக்கப்படும் போது தான் பிறந்த தாய்கிராமம் தண்ணீரில் மூழ்கடிக்கப்படுவதை உணர்ந்து கவிஞரின் குடும்பம் மெட்டூரிலிருந்து புலம்பெயர்ந்தது. “ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பத்தேழில் - ஒரு கண்ணீர்க் காலையில் என் முழங்கால் வரை மூழ்கடிக்கும் தண்ணீரில், அழுது கொண்டே வரும் என் அம்மா அங்கம்மாளின் கையைப் பிடித்துக் கொண்டே அந்த கிராமத்தை விட்டு நடந்து வந்தது எனக்கு ஞாபகம் இருக்கிறது”[2] என்று தனது சுயசரிதையில் பதிவு செய்கிறார் கவிஞர் வைரமுத்து.

வடுகப்பட்டியின் அருகில் இருக்கும் தாமரைக் குளத்திற்கு ஐந்து வயதுப் பாலகனாக இருந்த பொழுது புலம் பெயர்ந்தார். கவிஞர் தன் குடும்பத்தாரோடு தாத்தா உடன் வடுகப்பட்டியில் குடியேறினார்.

## ஆரம்பக்கல்வி

வைரமுத்துவின் தந்தையார் ஏழாம் வகுப்பு வரை படித்தவர். இவரது தாய்வழிப் பாட்டனாரும், கையொப்பமிட மட்டுமே தெரிந்திருந்தனர். இருப்பினும் அவர்கள் சமூகப் பொறுப்புணர்வோடு விளங்கியதால் கவிஞரை ஆரம்பக் கல்விக்காக வடுகப்பட்டிக்கு அருகாமையிலுள்ள தாமரைக்குளம் ஆரம்பப் பள்ளியில் சேர்த்தனர். ஆனால் ஒரு வருடம் முற்றுப் பெறுவதற்கு முன்பே

கவிஞரின் தந்தையார் வடுகப்பட்டிக்குப் புலம் பெயர்ந்தார். எனவே கவிஞர் வடுகப்பட்டி அரசு உயர்நிலைப் பள்ளியில் மீண்டும் முதல் வகுப்பிலேயே சேர்க்கப்பட்டார். தனது உயர்நிலைக்கல்வியையும் வடுகப்பட்டியிலேயே முடித்தார். ‘‘வடுகப்பட்டி! என்னால் மறக்க முடியாத மண்! எனது ஆறாவது வயது முதல் பதினாறாவது வயது வரை என் வேர்களுக்கு நீர் வார்த்த நிலம் அது’’[3] என்று தனது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார் கவிஞர்.

## உயர் நிலைக் கல்வி

கவிஞரின் குடும்பம் விவசாயக் குடும்பம் என்பதால் ஏர் உழுவது, விதை விதைப்பது, மாடு மேய்ப்பது போன்ற தொழில்களில் நேரடியாகப் பங்கு பெறும் சிறுவனாகவே இளமைக் காலத்தில் கவிஞர் இருந்திருக்கிறார். வயல்களின் வரப்பு ஓரங்களும், பள்ளிக்குச் செல்லும் சாலைகளும் தான், இவரின் காலடிப் பாதைகள். வடுகப்பட்டி அரசு உயர்நிலைப் பள்ளியில் சட்டாம் பிள்ளையாக இருந்திருக்கிறார். பள்ளி ஆசிரியர் நாள் தோறும் பள்ளிக் கரும்பலகையில் குறள் ஒன்றை எழுத வேண்டிய பணியைக் கவிஞருக்குத் தந்தார். அதோடு காலையில் பள்ளியில் பிரார்த்தனைக் கூட்டத்தின்போது, ‘அன்றைய தினசரி பத்திரிகையின் முக்கியச் செய்திகளை மாணவர்களுக்கு வாசித்துக் காட்டும் புதிய பொறுப்பும் கவிஞருக்கு வழங்கப்பட்டது. பள்ளிகளுக்கு இடையே பேச்சுப் போட்டிகள் நடைபெற்ற பொழுதெல்லாம் பங்கு பெற்று முதல் பரிசு பெற்றுள்ளார். வெளியூர்ப் பள்ளிகளில் பேச்சுப் போட்டிகள் நடக்கும் பொழுதெல்லாம் வகுப்பாசிரியர் உடன் கவிஞர் வைரமுத்து சென்று முதல் பரிசைப் பெற்றுத் திரும்புவது வழக்கம்.

## நூலறிவு

எட்டு வயதிலேயே கதைப்புத்தகங்களின் மேல் கவிஞருக்குத் தனிப்பட்ட விருப்பம் இருந்தது. நூலகத்தைப் பள்ளிப் பருவத்திலேயே பெரிதும் பயன்படுத்தி வந்தார். ‘‘பல நேரங்களில் நூலகத்தின் வருகைப் பதிவேட்டில் முதல் கையெழுத்திடுபவனாகவும், வெளியேறும் கடைசி உருவமாகவும் இருந்திருக்கிறேன்’’[4] என்று தம் சுய சரிதையில் கவிஞர் குறிப்பிடுகின்றார்.

பள்ளிப் பருவம் முதலே ஈசாப் நீதிக் கதைகள், அலாவுதீன் அற்புத விளக்கு, அம்புலிமாமா கதை, மற்றும் துப்பறியும் கதைகளை விரும்பிப் படித்து வந்தார். பல நூற்களையும் படித்துப் படித்துத் தன்னுடைய அறிவைக் கூர்மைப் படுத்திக் கொண்டவர் கவிஞர். பள்ளி விடுமுறை நாட்களில் தம் குடும்பத்தொழிலான வேளாண்மைத் தொழிலுக்குச் செல்லும்போதுகூட தன்னோடு புத்தகங்களையும் கொண்டு செல்வது கவிஞரின் வழக்கம். ‘‘ஏதாவதொரு சின்ன இடைவெளிகளில் கூட ஓடிச் சென்று, பூவரச மரக்கிளைகளின் இடுக்கில் பொத்தி வைத்திருக்கும் புத்தகங்களில் ஒன்றைக் கொத்திக் கொள்வேன்…….ராஜம் கிருஷ்ணன், லஷ்மி, சுரதா, முடியரசன், அநுத்தம்மா, விந்தன் இவர்களெல்லாம் நான் மாடு மேய்த்துக் கொண்டிருந்தபோது தான் எனக்கு நெருக்கமான பழக்கம்’’[5] என்னும் கவிஞரின் வரிகள் அவரது படிப்பார்வத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. வடுகப்பட்டி கிளை நூலகத்திற்குக் காலை சென்றுவிட்டால் நூலகம் அடைக்கப்படும் கடைசி நிமிடங்களில் தான் கவிஞர் வெளியேறி இருக்கிறார். அதனால் அந்த நூலகத்தின் தூரத்து நாற்காலியில் உட்கார்ந்து

கொண்டே புத்தக அடுக்கில் எந்த நூல் இல்லை என்பதை என்னால் துல்லியமாகச் சொல்லி விட முடிந்தது என்றும், ‘‘என் விரல் வரிசைகளை விடவும், புத்தகங்களின் வரிசைகளையே நான் அதிகமாக அடையாளம் தெரிந்து வைத்திருந்தேன்’’[6] எனவும் தனது சுயசரிதையில் கூறுகிறார்.

நூலகத்திலுள்ள நூற்களை வாசிப்பதில் கவிஞருக்கு ஏற்பட்ட ஈடுபாடே அவருக்கு அதிகமான சொற்களை அறிமுகப்படுத்தி வைத்தது. கவிதை எழுத வேண்டும் என்ற அவரது ஆசைக்கும் காரணமாய் அமைந்தது. எந்த நூலகம் தன்னை உயர்த்தப் பயன்பட்டதோ அதே நூலகத்தைப் பின்னாளில் சரிப்படுத்தி, புதிய கட்டிடமாக்கி, அதற்குக் ‘கண்ணதாசன் நூலகம்’ எனப் பெயரும் சூட்டியுள்ளார்.

**புலமை**

பள்ளியில் பயின்று கொண்டிருக்கும்போது, தமது பதினான்காம் வயதிலேயே கவிதையெழுதும் புலமை பெற்றிருந்தார். கவிஞரின் முதல் கவிதை ‘வீரம்’ என்ற தலைப்பில் வகுப்பறையில் முறத்தால் புலியை விரட்டிய மறத்தியின் கதையை எழுதினார்.

‘‘நல்ல
மறத்தினால்
உள்ள
உரத்தினால்
உடல்
திறத்தினால்
சிறிய
முறத்தினால்
புலியைத்

துரத்தினாள்
ஒரு தமிழ்ப்பெண்'' [7]

இது தான் கவிஞரின் முதல் கவிதை. தமது பத்தொன்பதாம் வயதில் ''வைகறை மேகங்கள்'' என்னும் மரபுக்கவிதைத் தொகுதியை வெளியிட்டார். இதுவே கவிஞரின் முதல் கவிதை நூல் ஆகும். இந்த நூலில் இடம் பெற்ற கவிதைகள், கவிஞர் தமது பதினேழாவது வயது முதல் பத்தொன்பதாம் வயது வரை எழுதிய கவிதைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவைகள். இவரின் புலமையைக் கண்ட கவியரசு கண்ணதாசன் வைகறை மேகங்களுக்கு எழுதியுள்ள அணிந்துரையில் ''…………கவிஞர் வைரமுத்துவைப் போன்று மரபுக்கவிதை எழுதுவோர் நிறையத் தோன்றிக் கொண்டேயிருப்பது தமிழுக்கு இன்னும் நல்ல காலம் இருப்பதைக் காட்டுகிறது''[8] என்று குறிப்பிட்டுள்ளார்.

அந்த நூல் சென்னையிலுள்ள ஒரு மகளிர் கல்லூரியில் துணைப்பாட நூலாக வைக்கப்பட்டிருந்தது. ''11-வது வயதில் கவிதை எழுதத் தொடங்கிய வைரமுத்து 14-வது வயதில் வெண்பா என்னும் கடினமான யாப்பு வடிவத்தில் தேர்ச்சி பெற்றார்''.[9] கவிஞர் தன்னுடைய படைப்புத் தூண்டுதலைப் பற்றிக் கூறும்போது, படைப்புத் தூண்டுதலானது ''நான் சார்ந்திருக்கும் சமுதாயச் சூழலிலிருந்து, என்னை நானே அழுத்தி வைக்கப்பட்ட வாழ்க்கையிலிருந்து என்னை நானே விடுவிக்க முயன்ற போது இயற்கையினுடைய காதலிலிருந்து வந்தது''[10] என்று குறிப்பிடுகின்றார்.

## கல்லூரிக் கல்வி

பள்ளி நிறைவுத் தேர்வில் தமிழில் முதல் மதிப்பெண் பெற்று வெள்ளிக் கோப்பையோடு வெளியில் வந்த கவிஞர் வைரமுத்து, கண் நிறையக் கனவுகளையும், மனம் முழுக்க இலட்சியங்களையும் சுமந்து கொண்டு சென்னை பச்சையப்பன் கல்லூரியில் 1970இல் சேர்ந்தார். புகுமுக அறிவியல் பிரிவில் சேர்க்கப்பட்டார். பின்பு அறிவியல் பிரிவில் இருந்து மாற்றலாகி கலைப் பிரிவில் சேர்ந்தார். கல்லூரிக்கல்வியின்போதுதான் ஏராளமான மரபுக் கவிதைகளும், புதுக்கவிதைகளும் எழுதினார். அங்கே வைரமுத்துவின் கல்வி உலகமும் இலக்கிய உலகமும் விரிவடைந்தன. 1972-இல் பி.ஏ. இரண்டாம் ஆண்டு மாணவனாக இருந்தபோது கவிஞரின் முதல் கவிதைத் தொகுப்பான ‘வைகறை மேகங்கள்’ வெளிவந்தது. 1972-76 வரை பச்சையப்பன் கல்லூரி வளாகம் கவிஞரின் தமிழ்மொழிப் பற்றையும், இலக்கிய ஆர்வத்தையும் வளர்த்தது. புதிய புதிய சிந்தனைகளைத் தூண்டியது. வைகறை மேகங்கள் கவிதைத் தொகுப்பு வெளிவந்த நாள் முதல், சென்னையில் எங்கு கவிதைப் போட்டி நடந்தாலும், அங்கு சென்று கவிதை படிப்பதும், முதல் பரிசு பெறுவதும் இவரது வாடிக்கை. சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் இலக்கியத்தில் எம்.ஏ. பட்டம் தன்னுடைய 23-வது வயதில் பெற்றார். தொடக்கக் காலங்களில் மரபுக் கவிதைகளை மட்டுமே எழுதினார்.

கல்லூரியில் முதுகலைத் தமிழ் வகுப்பில் முதல் மாணவனாகவும் வெற்றி பெற்றார். “எனது பதினேழாவது வயதிலிருந்து இருபத்தொன்றாவது வயது வரை யாப்பிற்கு நானும், எனக்கு யாப்பும் அடிமையாயிருந்ததற்கு ஆதாரங்கள் இந்த

என் பழைய பனை ஓலைகள்''[11] என்று கவிஞர் நூல் முன்னுரையில் கூறியிருப்பது இதற்குச் சான்றாகும். தமிழகம் முழுவதிலும் பல கவியரங்குகளில் வலம் வந்து வளம் அடைந்தவர். பல்வேறு திருமணக் கவியரங்குகளில் பங்கு கொண்டதை, ''கவியரங்க மண்டபங்களெல்லாம் எனக்குக் கல்யாணக் கூடங்களாக இருந்திருக்கின்றன''[12] எனக் கூறியுள்ளார். 14.11.1971 அன்று தனது 18-ஆம் அகவையில் அனைத்துக் கல்லூரி மாணவர்கள் கவிதைப் போட்டியில் அரங்கேறி முதல் பரிசு பெற்ற கவிதையே விடுதலை வீரர் நேரு. பாரதியை விடுதலை வீரனாகப் பாடிய கவிதையும் 1971-இல் பாடியதாகும். அகில இந்திய சென்னை வானொலியில் முதன் முதலில் புதுக்கவிதை பாடியதும் கவிஞர் வைரமுத்து தான். ''இளைய பாரதம் கவிக்குரல் பகுதியில் 27.08.1972 இல் ''நினைவுகளே நில்லுங்கள்'' என்னும் தலைப்பில் கவிதை வாசித்தார்.

## மனம் கவர்ந்த எழுத்தாளர்கள்

கவிஞரை முதன்முதலில் கவர்ந்த எழுத்தாளர் விக்டர் ஹியூகோ. இவர் எழுதிய 'லே-மிஸரபிள்' என்னும் நாவல் தான் கவிஞர் முதன் முதலில் படித்த நாவல் இலக்கியம். இந்த பிரெஞ்சு நாவலைத் தமிழில் ''ஏழை படும்பாடு'' என்று கவியோகி சுத்தானந்த பாரதியார் மொழி பெயர்த்துள்ளார். இந்த நாவலைக் கவிஞர் ஓர் இரவு முழுக்க லாந்தர் விளக்கு வெளிச்சத்தில் படித்து முடித்தார். தன்னை முதன் முதலில் நாவலின்பால் ஈர்த்து வந்து ஒரு புதிய உலகத்தைக் காட்டிய மாபெரும் எழுத்தாளர் விக்டர் ஹியூகோ என்று குறிப்பிட்டுள்ளார்.

விக்டர் ஹியூகோ ‘லே-மிஸரபிள்’ என்ற நாவலில் எவரும் பயன்படுத்தாத அளவுக்கு மிகப்பெரிய வாக்கியத்தைப் பயன்படுத்தியுள்ளார். “இவ்வாக்கியம் 823 வார்த்தைகளையும், 93 காற்புள்ளிகளையும், 50 அரைப்புள்ளிகளையும் கொண்டு அமைந்துள்ளது. உலகிலேயே மிகவும் நீளமான வார்த்தையைப் பயன்படுத்தியவர் ‘விக்டர் ஹியூகோ’ ஆவார்.[13]

பகுத்தறிவுத் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, கவிஞர் கண்ணதாசன் போன்ற சிந்தனையாளர்களும், மகாகவி பாரதியார், பாவேந்தர் பாரதிதாசன் போன்ற கவிஞர் பெருமக்களும், கவிஞரின் சமகாலத்தில் வாழ்ந்த உன்னதமான எழுத்தாளர்களும் இவரைப் பெரிதும் பாதித்திருக்கிறார்கள்.

## இலட்சியம்

முதுகலைத் தமிழ் இலக்கியம் பயின்று ஒரு கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிய வேண்டும் என்பதே கவிஞரின் இலட்சியமாக இருந்தது. தான் கற்ற மொழியின் அழகுகளையும், மொழிப்பற்றையும் மாணவர்களுக்கு விதைக்க வேண்டும். கலைத்துறையிலும் சில சுவடுகளைப் பதிக்க வேண்டும் என்னும் எண்ணங்கள் இவரின் எதிர்கால இலட்சியக் கனவுகளாக இருந்தன.

## மொழி பெயர்ப்பாளர் பணி

கவிஞர் தமது முதுகலைப் பட்டப்படிப்பை சென்னையில் படித்து முடித்தார். தேர்வு முடிவுகள் வெளிவந்த முப்பதாவது நாளில் தமிழ்நாடு சட்டத்துறை ஆட்சிமொழி ஆணையத்தில் மொழிபெயர்ப்புப் பிரிவில் பணியில் சேர்ந்தார்.

அந்தப் பணியில் கவிஞருக்கு அதிக விருப்பம் இல்லாதிருந்தது. அந்த அலுவலகத்தில் பணியாற்றிய நீதிபதி ஆ. சிதம்பரம், ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார், அறிஞர். கோ. முத்துப்பிள்ளை, திருக்குறள் திலகம் எஸ்.ராஜூசெட்டியார், தத்துவச் சித்தர் கா.பாலசுப்பிரமணியம், எஸ்.எஸ். ராமசாமி, கோ. சுவாமிநாதன் ஆகியோர் கவிஞரின் மீது அளவற்ற அன்பு கொண்டிருந்தனர். எனவே கவிஞருக்கு அந்த அலுவலகம் ஒரு குடும்பமாய் ஆகிவிட்டது.

## தமிழ்த் தொண்டு

கவிஞர் தமிழுக்கு ஆற்றிய தொண்டுகள் அளவிடற்கரியது. இவரது படைப்புலகம் பரந்தது. முதன்முதலில் அகில இந்திய வானொலியில் புதுக்கவிதை பாடியவர் இவரேயாவார். ‘‘கண்ணீரைச் சிரிக்க விடுவோம்’’ என்ற தலைப்பில் வாசித்த கவிதையானது ‘‘கல்வெட்டுகள்’’ என்னும் கவிஞரின் கவிதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. வால்ட் விட்மனின் தாக்கம் இவரது கவிதையில் அதிகம் புலப்படுகிறது.

தொலைக்காட்சியிலும் ‘‘கவிதை பாருங்கள்’’ என்னும் நிகழ்ச்சிக்காகக் கவிதையை ஒளியிழையாகக் காட்சிப்படுத்திய பெருமை இவருக்கு உண்டு. 1995-ஆம் ஆண்டில் இந்தியத் தொலைக்காட்சியினால் வழங்கப்படும் தேசிய விருது இவருக்குக் கிடைத்தது. ஏனெனில் கவிஞரது இம்முயற்சி இந்தியாவிலேயே முதன்முறையாகச் செய்யப்பட்டு வெற்றி கண்டதாகும்.

## இலக்கியப்பணி

கவிஞர் தமது பதினான்காம் வயதிலிருந்தே இலக்கியப் பணியைத் தொடங்கினார். புதிய சொல்லாட்சியும், புதிய சுவையும் உடைய அழியாத ஒளிமிக்க நவ கவிதைகளைப் படைத்துள்ளார். ‘‘இலக்கிய மேதா விலாசமும் நல்ல கற்பனை வளமும் அமையப் பெற்ற கவிஞர்களாலேயே கவித்துவ ஜீவன் நிரம்பிய நல்ல கவிதையைப் புனைவது என்பது சாத்தியமாகிறது. அநேக அர்த்தங்களைக் குறைந்த சொற்களில் வெளிப்படுத்திக் காட்டுகிற சாமார்த்தியமே சிறந்த கவிஞனுக்குரிய மேதாவிலாசம் ஆகும்’’[14] என்று குறிப்பிடுகின்றார் த. ராசு என்பார். இத்தகைய மேதாவிலாசம் பெற்றவர்களுள் கவிஞர் வைரமுத்துவும் ஒருவர் என்று கூறினால் அது மிகையன்று.

‘‘உலகில் காணப்படும் அத்தனைப் பொருள்களும் கவிதைப் பொருள்களே’’[15] என்று ஹெராஸ் கூறியுள்ளார். இவரது கூற்றுக்கிணங்க கவிஞர் வைரமுத்துவின் கவிதைகளில் பாடுபொருள்கள் அமைந்துள்ளன.

கவிஞர் வைரமுத்துவின் படைப்புகள் பலவும் தமிழ் அன்னையை அணி செய்வனவாக விளங்குகின்றன.

## திருமணமும் குடும்பமும்

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் முதுகலைத் தமிழ் முடித்து சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதல் வகுப்பில் எம்.ஏ. பட்டத்துடன் வெளிவந்த பிறகு 02.02.1977-இல் தாம் காதலித்த பொன்மணியை பதிவுத் திருமணம் செய்தார். குடும்ப எதிர்ப்புக்களிடையே பதிவுத் திருமணமாக

அமைந்தது. இல்லத்தரசியும் முதுகலைத் தமிழ்ப்பட்டதாரி. கல்லூரிப் பேராசிரியை. பொன்மணி வைரமுத்து மனைமாட்சியின் நன்கலமாக மதன் கார்க்கி, கபிலன் ஆகிய இரு ஆண் மக்கள் பேறாக அமைந்தனர். மதன் கார்க்கி காதல் மணம் புரிந்து அயல் நாட்டில் பணிபுரிந்து, தற்போது திரைப்படங்களுக்கு திரையிசைப் பாடல்களை எழுதி வருகிறார். கபிலன் பெற்றோருடன் சென்னையில் உள்ளார். பொறியியல், தொழில் நுட்பமென வாழ்க்கைச் சிறகைப் பரப்பிக் கொண்டனர் மக்கள். மனைவி கல்லூரிப் பணியினின்றும் ஓய்வு பெற்று வீடு திரும்பிய போது அவள் அழுகையை மாற்றப் பாசமுள்ள கணவராய் நின்று பாடிய பாடலே 'துறக்க முடியாத துறவு' என்னும் தலைப்புடையது. சென்னை மீனாட்சி மகளிர் கல்லூரியில் தமிழ்த்துறையில் 21 ஆண்டுகள் பணி புரிந்து விருப்ப ஓய்வு பெற்ற பொன்மணியார் ஒரு பெண் கவிஞர். இளைய தலைமுறையில் கவிஞர்கள் தோன்ற 'குயில் தோப்பு' என்ற கவிதை வாசிப்பு அமைப்பைக் கல்லூரியில் உருவாக்கினார். அவரது பேச்சுத்தமிழ் கல்லூரிப் பணியாக முடிந்தது. வாழ்வின் இரண்டாம் பாகம் எழுத்துப் பணியாக அமைய விரும்பிக் கவிஞர்,

''பாகம் பாகமாய்க் கழிவது வாழ்வு
முதல் பாகம் முற்றும்
இரண்டாம் பாகம் எழுது
கருமணியிற் பாவாய் உன்
கனவுகள் வெல்க
உன் கண்ணீர் துடைப்பேன்
என் கண்ணில் நீர் மல்க''[16]

என அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்'' என்று கேட்பது போலக் காதலால் கண்ணீர் மல்கும் காட்சியை அழகுற விளக்குகிறார்.

## கவிஞரின் படைப்புத்திறன்

Literature is a symbolic expression of a culture என்பது மேலைநாட்டினரின் ஒருமித்த கருத்து. அந்த அடிப்படையிலேயே சிறிய வயதில் தான் பிறந்த ஊரில் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களையும், சிறு வயதில் தனக்குள் ஏற்பட்ட கற்பனைகளையும், உணர்ச்சிகளையும் இரண்டறக் கலந்தே தன்னுடைய கவிதைகளை, கட்டுரைகளை, கதைகளை எழுதத் தொடங்கினார். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழிலக்கிய உலகில் ஏராளமான படைப்பாளிகள் இருந்தாலும், கவிஞரின் படைப்புலகம் பரந்து விரிந்தது ஆகும். தான் வாழ்ந்த கிராமத்தில் தான் நேசித்த, வாழ்ந்த வாழ்வியலின் கூரிய பார்வைகள் தான் கவிஞர் வைரமுத்துவின் படைப்புத்திறனின் உந்து சக்தியாகும். 'அரிஸ்டாட்டில் கூறிய கவிதை ஒரு போலவாக்கக் கலையே'[17] என்று குறிப்பிடுவது முக்கியமானதாகும்.

'கவிதைகளை பிறப்பிப்பது ஆக்க சக்தி; அதனை வளர்த்து வெளிப்படுத்துவது கவிஞரின் பேரனுபவம்' என்ற கவிஞர் மீனாட்சியின் கருத்துக்கு ஏற்ப படைப்புத் திறன் அமைந்து காணப்படுகிறது. கவிதை, நாவல், கட்டுரைகள், பயண இலக்கியம், மொழிபெயர்ப்புக்கள், திரையிசைப் பாடல்கள், திரை வசனங்கள் உள்பட ஏராளமான இலக்கிய வடிவங்களில் நாற்பதிற்கும் மேற்பட்ட இலக்கியப் படைப்புகளை கவிஞர் வைரமுத்து படைத்திருக்கிறார். மனித வாழ்க்கைக்கு விரோதமாக இருப்பவைகளைப் புறந்தள்ள வேண்டும். வாழ்க்கையின் சுகங்களையும்¸ வாழ்க்கையின் மர்மங்களையும், இன்னும் வாழப்படாத வாழ்க்கையையும் மனிதனுக்கு அறிமுகப்படுத்த வேண்டும் என்பதே

கவிஞர் வைரமுத்துவின் படைப்பின் நோக்கமாகும். மனித இனத்தின் ஒட்டு மொத்தமான மகிழ்ச்சியே இவரது படைப்பின் குறிக்கோளாகும்.

## கவிஞரின் கவிதை நூல்கள்

இலக்கியத்தின் தொன்மை வடிவமான மரபுக் கவிதையில் காலூன்றிய இன்றைய நூற்றாண்டின் கவிஞர்களைப் போலக் கவிஞரும் மரபில் காலூன்றியவர். பாரதியார், ச.து.சு யோகியார், ந.பிச்சமூர்த்தி, அப்துல் ரகுமான், மேத்தா, சிற்பி, ஈரோடு தமிழன்பன் முதலானோரின் வரிசையில் மரபுக் கவிதையில் கால் பதித்து, புதுக்கவிதையில் சொல் புதிதாய், பொருள் புதிதாய், வார்த்தைகளை வைரக் கடலசாக்கிய கவிஞர் வைரமுத்து வைகறை மேகங்கள் (1972). திருத்தி எழுதிய தீர்ப்புகள் (1979), இன்னொரு தேசியகீதம் (1982), கவிராஜன் கதை (1982), என் பழைய பனை ஓலைகள் (1983), கொடி மரத்தின் வேர்கள் (1984), ரத்த தானம் (1985), இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல (1991), தமிழுக்கும் நிறமுண்டு (1997) பெய்யெனப் பெய்யும் மழை (1999), கொஞ்சம் தேனீர் நிறைய வானம் (2005) ஆகிய பதினொரு நூற்களும் கவிதை நூற்களாகும். புதிய சொல்லாட்சி, புதிய கருத்தாக்கம், புதிய, புதிய சூழல்களில் புதுக் கவிதைகளை அறிமுகம் செய்து, தமிழ்க் கவிதையுலகினை ஓரங்குலம் உயர்த்திக் காட்டிய பெருமை கவிஞருக்கு உண்டு.

## புதினங்கள்

புதினம் என்பது உடைநடையில் சொல்லப்படும் நீண்ட கதை என்று கூறலாம். புதினம் என்பது ஓர் உயிர்ப்பொருள். உயிர் கொண்டிருக்கும் ஓர் உடலின் பல்வேறு பகுதிகளைப் போன்று புதினம் என்பது தனி வாழ்க்கையின்

நிகழ்வுகளைச் சுவையாகக் கூறுவதே ஆகும். கவிஞர் வைரமுத்துவும் வானம் தொட்டுவிடும் தூரம் தான் (1983), மீண்டும் என் தொட்டிலுக்கு (1986), காவி நிறத்தில் ஓர் காதல் (1991), ஒரு போர்க்களமும் இரண்டு பூக்களும் (1991). வில்லோடு வா நிலவே (1994), தண்ணீர் தேசம் (1996), கள்ளிக்காட்டு இதிகாசம் (2001), கருவாச்சி காவியம் (2006) மூன்றாம் உலகப்போர் (2011) ஆகிய ஒன்பது புதினங்களைப் படைத்துள்ளார். இதில் முதல் ஐந்து புதினங்களும் யதார்த்த வாழ்க்கையைச் சற்றுக் கற்பனை கலந்து எழுதப்பட்டவை. ‘‘தண்ணீர் தேசம்’’ புதினம், அறிவியல் புதினமாகும். கள்ளிக்காட்டு இதிகாசம், கருவாச்சி காவியம், மூன்றாம் உலகப் போர் ஆகிய மூன்றும் வட்டார வழக்குப் புதினமாகும்.

## திரைப்படப் பாடல்கள்

படிக்காத பாமர மக்களையும் கவர்ந்திழுக்கும் ஆற்றல் திரையிசைப் பாடல்களுக்கு மட்டுமேயுண்டு. கவிஞர் கண்ணதாசன், பாட்டாளிக் கவிஞர் பட்டுக்கோட்டையாருக்குப் பிறகு திரையிசைத் துறையில் சாதித்த பெருமை கவிஞருக்கு உண்டு. நிழல்கள் திரைப்படப் பாடல் தொடங்கி இன்று வரை சுமார் 7000க்கும் மேற்பட்ட திரையிசைப் பாடல்களை எழுதியுள்ளார். ஒவ்வொரு பத்து நிமிடங்களுக்கு ஒரு முறை உலக ஒலிஒளி ஊடகத் துறையில் கவிஞரின் பாடல்கள் ஒலிபரப்பாகிக் கொண்டிருக்கிறது. கவிஞர் எழுதிய தலைசிறந்த பாடல்களைத் தொகுத்து வைரமுத்து திரைப்படப் பாடல்கள் தொகுதி I (1993), வைரமுத்து திரைப்படப் பாடல்கள் தொகுதி II (1993) என இரு தொகுதியாக வெளியிட்டுள்ளார்.

## பிறதுறை நூல்கள்

ஆனந்த விகடன் வார இதழில் வாசகர் கேள்வி பதிலாக வெளிவந்ததைத் தொகுத்து பாற்கடல் (கேள்வி - பதில்) என்ற தொகுப்பாக வெளியிட்டள்ளார்.

## கவிஞரின் கட்டுரை இலக்கியம்

மேலை நாட்டினர் கட்டுரைகள் எழுதுவதையும் கூட கலை இலக்கியமாகவே வளர்த்தனர். மேலை நாட்டவர்களான அறிஞர் லாம்ப், அடிசன் ஸ்டீல் ஹாஸ்லீட் போன்றவர்களைப் பின்பற்றி தமிழகத்திலும் கட்டுரை இலக்கியம் வளர ஆரம்பித்தது. கவிஞர் வைரமுத்து அவர்களும் ஏராளமான கட்டுரை நூற்களை எழுதியுள்ளார். அவை அனைத்தும் திறமையான சொல்லாட்சியும், செழுமையான கருத்துக்களும், வளமான உரையாடல்களையும் கொண்டு காணப்படுகின்றன. கவிஞரின் கட்டுரைகள் அனைத்தும் ஒரே தலைப்பு உடையன அல்ல. ஒவ்வொரு தலைப்பும் வெவ்வேறு பொருள் குறித்தவை. கவிஞரின் ஒவ்வொரு அனுபவங்களும் ஒவ்வொரு கட்டுரை நூலாய் வெளிவந்துள்ளது. ஒவ்வொரு கட்டுரை நூலிற்கும் இனிமையான தலைப்பினை வைத்துள்ளார். ஒவ்வொரு தலைப்பும், ஒவ்வொரு கதை சொல்வதாக அமைந்துள்ளது.

கவிஞர் எழுதிய கட்டுரை நூல்கள் பொதுக் கட்டுரைகள், பயணக் கட்டுரைகள், மொழி பெயர்ப்புக் கட்டுரைகள், சுயசரிதைக் கட்டுரைகள், பல்வகைச் செய்திகளைத் தாங்கிய கட்டுரைகள் என வெளிவந்துள்ளன.

## பொதுக் கட்டுரைகள்

தமிழிலக்கியத்தின் சமுத்திரத்திலும் நதிகளின் தெளிந்த நீரோடைகளிலும் பத்து வயதிலிருந்தே மூழ்கி முத்தெடுத்த மிகப்பெரிய அனுபவத்தின் மூலம் கற்றுக் கொண்ட பாடங்களையும், உணர்வுகளையும், உணர்ச்சிகளையும், உத்திகளையும் நன்கு அனுபவித்த காரணத்தாலும், பள்ளியில் பயின்ற போது கருத்துக்கருவூலம் வாசிக்கப் புதிய கருத்துக்களைத் தொகுப்பதற்காக, ‘‘பூக்களின் மீது பறக்கும் வண்டைப்போல் புத்தகங்களின் மீது பறந்து திரிந்து, பனையோலையை அரிக்கும் கரையானைப் போலப் புத்தகங்களை அரிந்திருக்கிறேன். ஆனால் அந்தக் கஷ்டம் எனக்குக் கௌரவம் தந்தது. கருத்துக் கருவூலம் எனக்கொரு முத்துக்குளிப்பாக அமைந்தது’’[18] என்று கவிஞரே சொல்வதாலும் வாழ்க்கையை நன்கு அனுபவித்து ஆழ்ந்து கட்டுரைகள் எழுத வல்லவர் என்பதை அறியவியலுகிறது. கவிஞரின் ஒவ்வொரு கட்டுரையிலும் கவிதை ரசம் பூசப்பட்டு¸ வார்த்தைகள் மெருகூட்டப்பட்டிருக்கும்.

கவிஞர் வைரமுத்து அவர்கள் ‘‘என் ஜன்னலின் வெளியே (1984), கல்வெட்டுக்கள் (1984), மௌனத்தின் சப்தங்கள் (1984), கேள்விகளால் ஒரு வேள்வி (1984), சிற்பியே உன்னை செதுக்குகிறேன் (1985), நேற்றுப்போட்ட கோலம் (1985), இந்தக் குளத்தில் கல்லெறிந்தவர்கள் (1991), இதனால் சகலமானவர்களுக்கும் (1992) ஆகிய நூற்கள் பொதுக் கட்டுரை நூற்களாகும்.

## பயணக் கட்டுரைகள்

மேலை நாடுகளுக்குச் சென்று வந்தவர்கள், தங்களின் பயண அனுபவங்களையும், அந்தந்த நாட்டு மக்களின் பண்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும் புதிய வகை இலக்கிய நூலாக உருவாக்கித் தந்துள்ளனர். பயணவகை இலக்கிய நூல்கள் வெளிநாடுகளுக்குப் பயணிக்க இயலாதவர்களுக்கு அந்தந்த நாடுகளை அறிந்து கொள்ள உதவும் விளக்க நூலாகவும் அமைகிறது. கவிஞர் வைரமுத்து அவர்கள், அமெரிக்கா, கனடா, ரஷ்யா, இங்கிலாந்து, சீனா, ஆஸ்திரேலியா, ஜப்பான், சுவிட்சர்லாந்து, மலேசியா சிங்கப்பூர், இலங்கை, இந்தோனேசியா, பாங்காங், ஐக்கிய அரபு நாடுகள், சவுதி அரேபியா, குவைத், ஓமன் போன்ற வளைகுடா நாடுகள், மாலத்தீவுகள் ஆகிய நாடுகளுக்கு இலக்கியப் பயணம் மேற்கொண்டுள்ளார். கவிஞர் தன்னுடைய பயண அனுபவங்களை வடுகபட்டி முதல் வால்கா வரை (1989) என்ற நூலாகவும், ஒரு கிராமத்துப் பறவையும் சில கடல்களும் (2005) என்ற நூலாகவும் எழுதியுள்ளார்.

## மொழிபெயர்ப்புக் கட்டுரைகள்

இறவாத புகழுடைய நூல்கள் பல தமிழ்மொழியில் மொழிபெயர்த்திடல் வேண்டும் என்ற பாரதியின் எண்ணத்திற்கு ஏற்ப இருபதாம் நூற்றாண்டில் ஏராளமான பிறமொழிப் படைப்புக்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. கவிஞர் முதுகலைத் தமிழிலக்கியம் முடித்தவுடன் தமிழ்நாடு சட்டத்துறை ஆட்சி மொழி ஆணையத்தில் மொழி பெயர்ப்பாளர் பணியில் இருந்ததாலும் மொழிபெயர்ப்பு என்பது கவிஞருக்கு நன்கு பழகிய துறையாகி விட்டது. கவிஞர்

ரஷ்யா, ஆப்ரிக்கா, ஈரான், சீனா, அமெரிக்கா போன்ற நாடுகளில் சமகால கவிஞர்களால் எழுதப்பட்ட கவிதைகளைச் சிறந்த முறையில் மொழி பெயர்த்து எழுதியுள்ளார். 1989-ஆம் ஆண்டு இந்த மொழி பெயர்ப்புகளையெல்லாம் தொகுத்து ‘‘எல்லா நதிகளிலும் என் ஓடம்’’ என்ற கட்டுரை நூலாக வெளியிட்டார். இந்த நூல் கவிஞரின் மொழிபெயர்ப்பு ஆர்வத்தையும்¸ மேலைநாடுகளிலும், நம் நாடுகளிலும், பலதரப்பட்ட மக்களின் நாகரிகங்கள், பண்பாடுகள், கலைகள், மொழிவளங்கள், இலக்கியங்களிலுள்ள சிறப்புக்களை எல்லோரும் தெரிந்து கொள்ளும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

## சுயசரிதைக் கட்டுரை நூல்

சுயசரிதை என்னும் தன் வரலாற்று நூலையும் எழுதியுள்ளார். தனி மனிதர்களின் வாழ்க்கை அனுபவங்களையும், வாழ்வியல் நிகழ்வுகளையும் தொகுத்துக் கூறும் நூலாகும். ஆங்கில அறிஞர் டாக்டர் ஜான்சன், ‘‘ஒரு மனிதனின் வரலாறு அவனால் எழுதப்படும் அளவிற்கு முழுமையோடும் உண்மையோடும் வேறு எவராலும் எழுதப்பட முடியாது’’[19] என்றார். அந்தக் கருத்திற்கு வலுச்சேர்க்கும் வண்ணம் கவிஞர் தன்னுடைய இளமைக் காலத்து அனுபவங்களையெல்லாம் தொகுத்து வருங்கால சந்ததியினருக்கு நம்பிக்கையூட்ட, தன்னுடைய இருபத்தியெட்டாவது வயதில் ‘‘இதுவரை நான்’’ என்ற சுய சரிதை நூலை எழுதி வெளியிட்டார்.

தன்னுடைய வாழ்வியல் நிகழ்ச்சிகளும், வாழ்க்கை அனுபவங்களும், மற்றவர்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமையும் என்ற நம்பிக்கையும், சிக்கல்கள் நிறைந்த உலக வாழ்க்கையில் காலத்தின் போக்கிற்கு இணங்க மனித சமூகம்

தன்னைப் புதுப்பித்துக் கொண்டே செல்ல வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே வாழ்க்கை வரலாற்று நூல்கள் எழுதப்படுகின்றன.

## திரையிசைப்பணி

கவிஞர் வைரமுத்து 1979-இல் எழுதி வெளியிட்ட "திருத்தி எழுதிய தீர்ப்புகள்" தமிழ் இலக்கிய உலகில் மட்டுமல்ல……..திரையுலகிலும் கணிசமான தாக்கத்தை ஏற்படுத்தியது. 1980களில் திரு. பாரதிராஜா அவர்களும், இளையராஜா அவர்களும் தமிழ்த் திரையுலகின் துருப்பிடித்த கட்டுமானங்களைத் தகர்த்து, புதிய பாணியை நோக்கி அடியெடுத்து வைத்த ஆரம்பப் பொழுதுகளில், தமிழ்த் திரையிசையுலகில் இளைய தலைமுறையினரின் புதிய வருகைகளை ஆராதிக்கத் தொடங்கிய அந்த காலகட்டத்தில் தனக்கென தனி முத்திரையைப் பதித்தவர் வைரமுத்து. கவிஞர் கண்ணதாசனின் கவிதையிலிருக்கும் நளினத்தையும் உணர்ச்சியையும் கவிஞர் சுரதாவின் கவிதைகளிலிருக்கும் செறிவையும், தீர்க்கத்தையும் சரியான விகிதத்தில் கலந்து தரும் கவிஞன் தான் அடுத்த தலைமுறைக்குத் தளகர்த்தனாய் இருக்கத் தக்கவன் என்பது கவிஞர் வைரமுத்துவின் கணிப்பு. எனவே இம்முடிவைத் தமது கவிதைகளில் செயல்படுத்த முனைந்தார்.

தமிழ்த் திரைப்படத்தில், பாடல்களின் தரம் காலப்போக்கில் தரம் குறைந்து வருவதையும், அது தனது பழைய சிம்மாசனத்தை விட்டு இரண்டோர் அங்குலம் இறங்கியிருப்பதையும் கண்டு மனம் நொந்தார். தமிழ்த் திரைப்பாடல்களில் செக்குச் சிந்தனைகள் திரும்பத் திரும்ப வருவது கண்டு சோகம் கொண்டார்.

தமிழ்த் திரைப்பட உலகில் மதுரை மண் வாசனை இயக்குனர் திரு. பாரதிராஜா அவர்களை கவிஞரின் நண்பர் உபால்டு சந்திக்கச் சென்றபோது¸ தன் வாலிப வயதில் உருவாக்கி வைத்திருந்தப் பாடல்களை கொடுத்தபோது, அதன் முதல் பக்கத்தில் கவிஞர் எழுதிய,

''கவிதை
மொழிக்கு
ஆடை கட்டி விடுகிறது
இசையோ
இறக்கை கட்டி விடுகிறது!'' [20]

என்ற பாடல்வரிகள் இயக்குநருக்குள் மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. அதனால் தான் திரு. பாரதிராஜா அவர்களிடம், ''பாடல்களில் நான் கொஞ்சம் வித்தியாசமாகச் செய்ய முடியுமென்று நம்புகிறேன். உங்கள் படங்களில் பயன்படுத்திக் கொள்ள முடியுமா பாருங்கள்''[21] என்றார். திரு. பாரதிராஜா கவிஞருக்கு 1980-ஆம் ஆண்டு தன்னுடைய திரைப்படத்தில் வாய்ப்பளித்தார். கவிஞர் பாரதிராஜாவின் 'நிழல்கள்' திரைப்படத்தில் இயற்கையின் அத்தனை விலாசத்தையும் நேசிக்கும் கலாபக் காதலன் பாடும் முதல் பாடலை எழுதினார்.

''பொன்மாலைப்பொழுது! – இது ஒரு
பொன்மலைப் பொழுது
வானமகள் நாணுகிறாள்
வேறு உடை பூணுகிறாள்''[22]

என்ற வரிகளை எழுதியவுடனே இசையமைப்பாளர் இளையராஜா உள்பட அனைவரின் உள்ளத்தையும் கொள்ளை கொண்டது. கவிஞரின் பாடலை இரசித்த இயக்குநர் பாரதிராஜா இன்று முதல் உங்களுக்கொரு புதிய

எதிர்காலம் என்று வாழ்த்தினார். அன்றிலிருந்து தொடங்கிய கவிஞரின் இசைப் பயணம் தொடர்ந்து வருகிறது.

## திரைப்பட விருதுகள்

கவிஞர் கண்ணதாசனுக்குப் பிறகு தமிழ்த் திரையிசையுலகில் தரமான திரைப்படப் பாடல்களை எழுதிக் கொண்டிருப்பவர் வைரமுத்து. தமிழ் திரைப்படத் துறையின் முன்னணிப் பாடலாசிரியராக விளங்கி வருகின்றார். சிறந்த பாடலாசிரியருக்கான மாநில அரசின் விருதினை ஆறு முறை பெற்றிருக்கிறார். இந்திய திரைப்பட வரலாற்றில், இந்தியாவின் சிறந்த பாடலாசிரியர் விருதினை குடியரசுத் தலைவரிடமிருந்து ஆறு முறை பெற்றுள்ளார். அகில இந்திய சிறந்த பாடலாசிரியர் என்ற முதல் தேசிய விருதினைக் கவிஞருக்குப் பெற்றுத் தந்த படம் முதல் மரியாதை (1985) ஆகும். 1993-இல் ரோஜா திரைப்படத்திற்காகவும், 1995-இல் கருத்தம்மா திரைப்படத்திற்காகவும், 2000-ஆம் ஆண்டு சங்கமம் திரைப்படத்திற்காகவும், 2003இல் கன்னத்தில் முத்தமிட்டால் திரைப்படத்திற்காகவும், 2011இல் தென்மேற்கு பருவக்காற்று திரைப்படத்திற்காகவும் ஆறு முறை தேசிய விருது பெற்றவர். கவிஞருக்கு மத்திய அரசின் தங்கத் தாமரை விருது பெற்றுத் தந்த படம் ‘சம்சாரம் அது மின்சாரம்’ (1980) ஆகும். இவற்றோடு பல்வேறு ஃபிலிம் பேர் விருதுகளையும், தினகரன் சினிமா விருதுகளையும் பெற்றுள்ளார்.

## இலக்கிய விருதுகள்

திரைப்பட விருதுகளோடு ஏராளமான இலக்கிய விருதுகளையும் கவிஞர் பெற்றுள்ளார். தமிழ்நாடு அரசின் இயல், இசை, நாடக மன்றத்தின் கலைமாமணி

விருதையும், தமிழக அரசின் 1996-ஆம் ஆண்டின் சிறந்த கவிஞருக்கான பாவேந்தர் பாரதிதாசன் விருதையும் பெற்றுள்ளார். கவிஞர் வைரமுத்துவின் இலக்கியப் படைப்பாளுமையைப் பாராட்டி'' ''கலைஞரின் முரசொலி அறக்கட்டளை ஒரு லட்ச ரூபாய் விருது வழங்கியது. கவிஞரின் தண்ணீர் தேசம் படைப்பிற்காக தினத்தந்தி ஆதித்தனார் விருதாக ரூபாய் 50,000 வழங்கியது.'' இவரின் சீரிய இலக்கியப் பணிக்காக இந்திய அரசு 2003இல் பத்மஸ்ரீ விருதை வழங்கியது. 2001இல் கவிஞர் வைரமுத்து எழுதிய கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலுக்காக நடுவண் அரசு 2003இல் சாகித்ய அகாடமி விருதை வழங்கியது. கனடா அரசுடன் ஒரு தனியார் அமைப்பும் இணைந்து கவிஞர் வைரமுத்துவின் அஞ்சல் தலையை டொரண்டாவில் வெளியிட்டுள்ளது. 2003ஆம் ஆண்டு பத்மஸ்ரீ விருதையும், 2014ஆம் ஆண்டு இந்திய அரசு பத்மபூஷன் விருதையும் வழங்கி சிறப்புச் செய்தது.

## டாக்டர் பட்டங்கள்

கவிஞர் வைரமுத்துவின் சிறந்த இலக்கிய ஆளுமைப் பணிக்காகவும், தமிழ் இலக்கியத்தில் தனக்கென தனி முத்திரையைப் பதித்தற்காகவும், பல்வேறு சீரிய இலக்கியப் பணிக்காகவும், ''தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக் கழகம் 2007-ஆம் ஆண்டு கௌரவ டாக்டர் பட்டம் வழங்கியது. தமிழிலக்கியத்தின் மூலம் மனித சமூகம் ஓரங்குலமாவது உயர வேண்டும் என்ற இலட்சிய வேட்கையோடு செயல்படுவதைப் பாராட்டி 2008-ஆம் ஆண்டு மண்வாசனைக் கவிஞனான வைரமுத்துவுக்கு மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்தது.

## பிற பட்டங்கள்

இந்திய அரசின் மேனாள் பிரதமர் அடல்பிகாரி வாஜ்பாய், கவிஞரின் இந்தி மொழி பெயர்ப்புக்களைப் படித்து, லயித்து, ஒன்றிப்போய் விட்டு, கவிஞருக்கு 'கவி சாம்ராட்' என்ற பட்டம் சூட்டி அழைத்தார். கவிஞரை மேனாள் இந்தியக் குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் 'காப்பியக் கவிஞர்' என்ற பட்டத்தினையும் சூட்டினார். தமிழ் நாட்டின் மேனாள் முதலமைச்சரும், தமிழ்நாட்டின் சிறந்த இலக்கியவாதியுமான டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி கவிஞருக்குக் "கவிப்பேரரசு" என்ற பட்டம் சூட்டி மகிழ்ந்தார். தமிழக முதன்மைப் படைப்பாளிகளில் வாழும் போதே மரியாதை செய்யப்பட்ட கவிஞர்களுள் சிறந்தவர்; மரபில் காலூன்றி இருந்தாலும் தமிழ் இலக்கியப் பரப்பின் அத்தனைப் பா வடிங்களிலும் கவிதை படைத்தவர். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் வருகைசால் பேராசியராகப் பணி நியமனம் செய்யப்பட்டது கவிஞரின் புலமைக்குக் கிடைத்த மரியாதையாகும்.

கவிஞர் வைரமுத்துவின் படைப்பாளுமையைப் பாராட்டி ஒரு தனியார் அமைப்பு கனடா அரசாங்கத்தோடு இணைந்து கவிஞர் வைரமுத்துவின் தபால் தலையை டொரண்டோவில் வெளியிட்டுக் கௌரவித்தது. இங்கிலாந்து நாட்டின் தலைநகரான லண்டனில் நடந்த பாராட்டு விழாவில் இங்கிலாந்து நாட்டின் கல்வி அமைச்சர் ஸ்டீபன் டிம்ஸ், அவர்கள் கவிஞரின் கவிதைகள் "உணர்ச்சியும், அறிவும் சரியாக இணைந்த கலவைகள்" என்று பாராட்டுரை வாசித்தார். இலண்டன் மாநகராட்சியின் ஆட்சி மன்றத்தலைவர் ராபின்வேல்ஸ் என்பவரோடு கவிஞரை ஒப்பிட்டுப் பாராட்டினார்.

அமெரிக்கன் லைபரரி ஆப் காங்கிரஸ் கவிஞரது கவிதைகளை அவர் குரலிலேயே பதிவு செய்து உலக இலக்கிய ஆவணங்களில் ஒன்றாக பாதுகாத்து வருகின்றது. இந்தியா டுடே பத்திரிகை இந்தியாவின் சிறந்த ஐம்பது இளைஞர்களுள் ஒருவராக கவிஞரைத் தேர்வு செய்து சிறப்பித்தது.

## விருது வழங்குபவர்

கவிஞர் தன்னுடைய பிறந்த நாளான சூலைத் திங்கள் மூன்றாம் நாள் ஒவ்வொரு ஆண்டும் மூத்த கவிஞர்களுக்கும், இளங்கவிஞர்களுக்கும் கவிஞர்கள் திருநாள் விருது வழங்கி வருகிறார். கவிஞர்களுக்குப் பணமுடிப்பும், பட்டயமும் அளித்துச் சிறப்புச் செய்து வருகிறார். இதுவரை நாற்பதிற்கும் மேற்பட்ட கவிஞர்கள் விருது பெற்று உள்ளனர்.

## தொகுப்புரை

கவிஞர் வைரமுத்து வைகை அணைக்கட்டில் மூழ்கிப் போன 14 சிற்றூர்களில் ஒன்றான மெட்டூரில் 1953-இல் பிறந்தார்.

தன்னுடைய ஐந்தாவது வயதில் மெட்டூரில் இருந்து வடுகப் பட்டிக்கு புலம் பெயர்ந்தார்.

வடுகப்பட்டி அரசு உயர்நிலைப் பள்ளியில் ஆரம்பக் கல்வியைக் கற்றுத் தேர்ந்தார்.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் முதுகலைத் தமிழ் இலக்கியம் பயின்று முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார்

சென்னை அகில இந்திய வானொலியில் முதன் முதலில் புதுக்கவிதை பாடியவர்.

பொன்மணி என்ற பெண்ணை வைரமுத்து கடும் எதிர்ப்புகளுக்கு இடையே காதல் திருமணம் செய்து கொண்டார்.

1953-இல் பிறந்த கவிஞர் தமது 11-வது வயதில் கவிதை எழுதத் தொடங்கி 18-ஆம் வயதில் 'வைகறை மேகங்கள்' என்ற மரபுக் கவிதைத் தொகுதியை எழுதி வெளியிட்டார். இந்நூல் அவர் படித்துக் கொண்டிருக்கும்போது சென்னையில் ஒரு மகளிர் கல்லூரியில் துணைப்பாடமாக அமைந்தது.

கவியரங்கங்கள் பல கண்டவர். கல்லூரியில் பயின்றபோது மரபுக் கவிதை மட்டுமே எழுதினார்.

இந்தியில் கவிதை எழுதும் மேனாள் இந்திய பிரதமர் அடல்பிஹாரி வாஜ்பாய், கவிஞருக்கு 'கவி சாம்ராட்' பட்டத்தை வழங்கினார். மேனாள் குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜே. அப்துல்கலாமிடம் 'காப்பியக்கவிஞர்' என்ற பட்டத்தினைப் பெற்றார். மேனாள் தமிழக முதலமைச்சர் கலைஞரிடம் 'கவிப்பேரரசு' என்ற பட்டத்தினையும் பெற்றுள்ளார்.

இந்திய அரசின் பத்மஸ்ரீ விருதினை 2003-ஆம் ஆண்டிலும், 2014இல் பத்மபூஷன் விருதினையும், இலக்கியத் துறையின் உயரிய விருதான சாகித்ய அகாதமி விருதையும் பெற்றுள்ளார்.

முரசொலி அறக் கட்டளை ஒரு இலட்ச ரூபாய் விருதும், தண்ணீர்தேசம் படைப்பிற்காக ரூ.50,000 பணமுடிப்பும், பட்டயமும் பெற்றுள்ளார். கொல்கத்தாவில் உள்ள பாரதீய பாஷாபரிஷத் என்ற இந்தியமொழிக் கழகம் சாதனா சம்மன் என்ற தேசிய விருது வழங்கி சிறப்பித்தது.

தமிழ் நாட்டிலுள்ள இரண்டு பல்கலைக் கழகங்கள் கவிஞருக்கு டாக்டர் பட்டம் வழங்கிக் கௌரவித்துள்ளன.

ஆறு முறை நடுவண் அரசின் சிறந்த பாடலாசிரியர் விருதையும், சுமார் 7000க்கும் மேற்பட்ட திரைப்படப் பாடல்களையும் எழுதியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1) வைரமுத்து, இதுவரை நான். ப.7.

2) மேலது., ப.10.

3) மேலது., ப.14.

4) மேலது., ப.15.

5) மேலது., ப.62.

6) மேலது., ப.27.

7) மேலது., ப.42.

8) வைரமுத்து, வைகறை மேகங்கள், ப.3.

9) நம். சீனிவாசன், வைரமுத்து ஆய்வுக் களஞ்சியம் I, ப.10.

10) இளவல் இரா. மனோகரன், மதுரைச் சீமையிலிருந்து ஒரு மண்வாசனைக் கவிஞன், ப.148.

11) வைரமுத்து, என் பழைய பனை ஓலைகள், முன்னுரை, ப.3.

12) மேலது., முன்னுரை, ப.5.

13) கல்கண்டு, 14-12-2000, ப.6.

14) த.ராசு, புதிய நோக்கில் படைப்பிலக்கியம், ப.196.

15) ச. அகத்தியலிங்கம், கவிதை உருவாக்கம், ப.32.

16) வைரமுத்து கவிதைகள் தொகுப்பு, ப.690.

17) ச. அகத்தியலிங்கம், கவிதை உருவாக்கம், ப.23.

18) வைரமுத்து, இதுவரை நான், ப.49.

19) இ.அ. சித்திக் அலி, ப. இப்ராஹிம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.526.

20) வைரமுத்து, இதுவரை நான், ப.245.

21) மேலது., ப.246.

22) மேலது., ப.249.

# இயல் 2

## கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் வெளிப்படும் நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் செய்திகள்

### முன்னுரை

வாழ்வின் அனைத்து அனுபவங்களையும் எல்லா மனிதர்களும் நேரடியாகப் பெறுதல் என்பது இயலாது. தான் பெற்ற அனுபவங்களைப் படைப்பாளர் பிறருக்கும் தெரிவிக்க வேண்டும் என்பதற்காகத் தன் படைப்பின் மூலம் அவற்றை வெளிக்காட்டுகின்றனர். இலக்கியம் காலத்தின் கண்ணாடி என்பர். தன்னுடைய படைப்பிற்கான கருவைத் தான் வாழும் சமுதாயத்திலிருந்து தான் எடுத்துக் கொள்கிறான். எனவே சமுதாயத்தோடு படைப்பாளர் கொண்டிருக்கும் உறவு, பெற்ற அனுபவம் போன்றவை அவரின் படைப்புகளில் எதிரொலிக்கும். நாள்தோறும் தான் கண்ட வாழ்வின் சிக்கல்களையும், பிரச்சனைகளையுமே கருவாக்கிப் படைப்புகளை உருவாக்கும் படைப்பாளர்கள், அதனைப் படிக்கும் வாசகனும் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அதனை அப்படியே பதிவு செய்கின்றனர். கிராமப்புறங்கள் விவசாயம், விவசாயம் சார்ந்த தொழில்களை மையமாகக் கொண்டுதான் செயல்படும். அங்கு வாழ்கின்ற பெரும்பாலான மக்களின் வாழ்வாதாரம் அத்தொழிலையே நம்பி அமைந்துள்ளன. அவர்களின் வாழ்க்கை நெறிமுறைகளும் விவசாயத்தை முன்னிறுத்தியே அமைகின்றன. கவிஞர் வைரமுத்து தன் படைப்புகளில் விவசாயம் சார்ந்த மக்களின் வாழ்க்கை, அவர்களுக்கு ஏற்படும் இன்ப, துன்பங்களை வெளிப்படுத்தும் முறைகள், விவசாயத் தொழிலின் பல்வேறு பிரச்சனைகளுக்கான காரணங்கள், அவற்றிற்கான தீர்வுகள் போன்றவற்றைத் தன் படைப்புகளில்

எங்ஙனம் வெளிப்படுத்தியிருக்கிறார் என்பதை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## பிறந்த மண் நேசம்

இன்றைய இளம் தலைமுறையினருக்கு மண்ணை நேசிக்கத் தெரியவில்லை. மனிதர்களைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. கிராமங்களைக் காலி செய்துவிட்டு நகரங்களுக்குப் புலம்பெயர்கின்றனர் இன்றைய இளம் தலைமுறையினர். அப்படிப்பட்ட புதிய தலைமுறையினருக்கு மண்ணின் மதிப்பைச் சொல்லிக் கொடுத்து, அவர்களுக்குப் பிறந்த மண் மீதுள்ள பற்றினைப் புரிய வைக்கும் வகையில், கவிஞரின் 'ஊருக்குப் போயிருந்தேன்' என்னும் கவிதை அமைகிறது.

என் தாய் மண் தான் என் கவிதைகளின் மூலம். அந்த மலைக்கிராமம் தான் என் கற்பனைகளின் மையம். "மண்வாசனை இல்லாத விதை வெறும் வேரற்ற மரம்; கூடற்ற பறவை என்று குறிப்பெழுதினான் என்று சோவியத் ரஷ்யாவின் கவிஞன் ரசூல் சொல்லியதை எடுத்துக்காட்டி கவிஞர் வைரமுத்து மண்வாசனையின் அவசியத்தைக் கூறுகிறார்".[1]

தான் கண்மூடிக் கனவு காணும் நிலையிலும், தன்னை மறந்த சூழலிலும் தான் பிறந்த மண் பற்றிப் பேச மறந்ததில்லை என்பதை,

"என்
பாசத்திற்குரிய
பழைய முகங்களே!
உங்களுக்கு நான்
அந்நியமில்லை"[2]

என்கிறார். தான் பிறந்த மண்ணை, வாழ்ந்த மண்ணை, நேசித்த மனிதர்களை, அவர்களோடு இருந்த உறவை இன்னும் மறக்கவில்லை என்பதை நினைவூட்டுகிறார். தான் பிறந்த மண்ணின் ஞாபகங்கள் மனதினைவிட்டு நீங்கவில்லை என்றும், தான் கடந்து வந்த பாதையை ஒவ்வொரு நாளும் திரும்பிப் பார்த்துக் கொண்டே தான் இருக்கிறேன் என்பதையும் நினைவூட்டுகிறார்.

"என் உடலில் இருக்கும்
இரத்தம் தான் புதிது
இருதயம் பழசு தான்".[3]

இன்றைய மாளிகை வாழ்க்கைக்கும், பெற்றிருக்கும் புகழுக்கும், உலக முழுவதும் தன் பெயர் அறிமுகம் ஆகியிருப்பதற்கும் அடிப்படைக் காரணம், தான் பிறந்த கிராமத்து மண்ணில் கால்பதித்து என் வாழ்க்கை ஓட்டத்தை அமைத்துக் கொண்டது தான் என்கிறார்.

"என் கிளைகள்
வெளியே விரிந்துவிட்டாலும்
என் வேர்கள் வசிப்பது
இங்கே தான்!
இங்கே தான்"![4]

என்னும் வரிகளில் கவிஞரின் பிறந்தமண் பற்றினை அறிய முடிகிறது.

## கிராமங்கள்

கிராமங்கள் எளிமையாகக் காட்சியளிப்பவை. பகட்டில்லாத மனிதர்களின் இருப்பிடமாகக் காட்சியளிப்பவை. பொய் பேசாத மக்களும், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இயற்கையின் ஊன்றுகோலாகக் காட்சியளிப்பவை. வெள்ளையுள்ளம் படைத்த மனிதர்கள் வாழும் இந்தியாவின் அடையாளச்

சின்னங்கள். அந்த கிராமங்களைக் கவிஞர் தன் படைப்பில் அப்படியே பதிவு செய்துள்ளார்.

‘‘கிராமங்கள்
எந்த அந்நிய அம்பும்
துளைக்க முடியாத
பஞ்சுக் கவசங்கள்
நம்
பண்பாட்டுச் சில்லரைகளைப்
பாதுகாக்கும் உண்டியல்கள்
நமது
கலாசார ஆய்வுக்குத்
தரையில் கிடைத்த
தடயங்கள்.’’[5]

அறிவியல் யுகத்தின் தாக்கங்கள் கிராமங்களில் சரியாக ஊடுருவ முடியாமல் இருப்பதால் அவர்களின் பண்பாடு தலைசிறந்து இன்று வரையிலும் விளங்குகிறது. நமது கலாச்சார ஆய்வுக்குக் கிடைக்கும் தடயங்களாக விளங்கியவை, இன்று கால ஓட்டத்தில் நிலைதடுமாறி சிதிலமடைந்து காணப்படுகின்றன. வாழ்க்கை ஓட்டத்தில் கிராமங்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டுள்ளதையும் தன் படைப்புகளில் எடுத்துக் கூறியுள்ளார்.

‘‘எத்தனையோ கிராமங்கள்
அகழ்வாராய்ச்சியில்
அகப்பட்ட சிதிலங்களாய்...
கிராமத்துக்காரர்கள்
முதுமக்கள் தாழியிலிருந்து
முளைத்தவர்களாய்...’’[6]

காணப்படுவதையும், கிராமிய அழகுகள் சிறிது சிறிதாகச் சிதிலமடைந்து வருவதையும் கூறுகிறார். இயந்திரங்களின் அலைவரிசைகளில் சிக்கிய பிறகு

கிராமங்கள் இயற்கை அழகை இழந்து செயற்கை அழகை சூட்டிக் கொண்டுள்ளன.

## கிராமங்கள் சிதிலமடைதல்

'நகரமயமாதல்' இன்று எல்லா கிராமங்களையும் ஏறக்குறைய அழித்துவிட்டது. நகரங்களின் ஆதிக்கம், ஆலைகளின் பெருக்கம், புதிய பொருளாதார மண்டலங்கள் உருவாகுதல் போன்றவை கிராமத்து இயற்கை அழகைத் தின்று தீர்த்துவிட்டது. இயற்கை வளங்கள் சிதைக்கப்படுகின்றன. நிலத்தடி நீர் தேவைக்கும் அதிகமாக உறிஞ்சி எடுக்கப்படுகிறது. ஆக்கிரமிப்புகள் தொடர்கதையாகின்றன. இதனால் காணாமல் போன நதியினைத் தேடுகிறார் கவிஞர்.

'ஓலைக் குடிசை கிழவியின்
ஒற்றை புடவையைப் போலச்
சிறுக சிறுக
சிதிலிடப்பட்டதும்
ஆக்ரமிப்பால்
மேனி குலைந்து
மணலென்று நரை விழுந்து
நதி என்ற பேரிழந்து
காலப் போக்கில்
கால்வாயானதும்
இந்த நதிதான்
இதே நதிதான்"[7]

உலகிற்கே அட்சயப் பாத்திரமாய் விளங்கிய ஆறுகள் வற்றிப் போனதால் கிராமங்களில் விவசாயம் சிறிது சிறிதாக மறக்கடிக்கப் பட்டு வருகிறது. விவசாயிகள் வேறு வேலைகளை நோக்கிப் படையெடுப்பதால் விவசாய

நிலங்கள் தரிசுக் காடுகளாக மாறிப் போய்விடுகிறதை எண்ணி மனம் கலங்குகிறார் கவிஞர்.

> “ஊரே உடுத்தியிருந்த
> பச்சை நெசவு எங்கே?
> பூக்கள் விற்ற கிராமம்
> புழுதி விற்கிறது.
> அகல் விளக்கில் ஒளிர்ந்த கிராமம்
> மின்சார விளக்கில்
> இருள்கிறது”[8]

என்று ஆதங்கப்படுகிறார். தன் வாழ்க்கைக்கான கரு உருவான இடம் கருகிப் போய் உள்ளதைத் துயரத்தோடு எடுத்துக் கூறுகிறார்.

> “என் பழைய பள்ளித் தோழா!
> கனத்த மனத்தோடு கேட்கிறேன்
> நம் கிராமம் எங்கே?
> ஞாபகங்களில்
> சில்லிட்டு மணக்கும் நம்
> சிற்றூர் எங்கே?
> ஆடிய வீதி எங்கே?
> ஆற்றுப்படுகை எங்கே?
> ......................................
> ஒரு புயல் ராத்திரியின்
> வாழை இலையாய்க்
> கிழிந்து போனதே நம் கிராமம்.”[9]

நகரமயமாக்கல் கிராமத்தை நரகமாக்கிவிட்டது. கிராமங்களைப் பாதுகாக்கவும், அங்குள்ள மனிதரை மதிக்கவும் மண்ணைத் துதிக்கவும் வேண்டும் என்கிறார்.

## மனித நேயச் சிந்தனைகள்

உயிரினவகைகளுள் முதன்மையான மனிதனுக்கு இயல்பாகவே இருக்க வேண்டிய முதன்மைப் பண்பு மனித நேயமாகும். இது நாடு, இனம், மொழி,

நிறம், மதம், சூழல், பண்பாடு, நாகரிகம் போன்ற அனைத்தையும் கடந்து மேலோங்கி நிற்பது. இவையனைத்துக்கும் இணைப்புப் பாலமாக விளங்குவது மனிதநேயம். சங்க இலக்கியப் புலவனான கணியன் பூங்குன்றனார்

'யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர் தர வாரா''[10]

என்று கூறிய வரிகள் மனிதநேயத்திற்கு இலக்கணம் கூறும் வைரவரிகளாகும். மனிதநேயம் என்பது பிற மனிதர்களிடம் அன்பு காட்டுதல், அவனையும் தன்னைப் போல் ஒருவன் என மதித்தல். சாதி, மதம், நாடு, மொழி ஆகிய கோடுகளைத் தாண்டி மனிதனை மனிதன் என மதித்து, அவனிடம் அன்பு காட்டுதல்; ஏழைகளுக்காக இரங்குதல். உடன் உறை மக்களுக்கு உற்றுழி உதவுதல், பசிப்பிணி நீக்கி வறுமைப் பிடியிலிருந்து மக்களைக் காத்து அரவணைத்தல் எனப் பல முகங்களைக் கொண்டது. மனித நேயப்பண்பு இல்லாதவரை,

'அரம்போலும் கூர்மை யரேனும் மரம்போல்வர்
மக்கட் பண்பில்லா தவர்''[11]

என்று அய்யன் வள்ளுவன் குறிப்பிட்டதற்கிணங்கக் கவிஞர் வைரமுத்துவும் குறிப்பிட்டுச் செல்வது கருதத்தக்கது.

''ஆகாயத்தில்
வானவில்லுக்கு அடித்த
வர்ணம்
காய்ந்துவிட்டதா என்று
தொட்டுப் பார்க்க
எம்வீரல் நீள்வதில்லை.
ஏழையின்

கண்ணீரைத் துடைத்துக்
காய வைக்கத்தான்
பத்து விரல்களும்
படபடக்கின்றன”[12]

என்று பிறர்படும் துன்பக் கண்ணீரைத் துடைப்பதற்கு மட்டுமே விருப்பப் படுவதாகக் கூறுகிறார்.

‘ஒருவன் தனக்காக அழும் கண்ணீர் அவனை மட்டுமே சுத்திகரிக்கிறது. அடுத்த உயிருக்காக அழும் கண்ணீர் அகிலத்தையே சுத்திகரிக்கும் என்று கூறிய கவிஞர் சிகரங்களை நோக்கி என்ற படைப்பில் ‘ஓவியா’ என்ற கதாபாத்திரம் மூலம் விளக்குகிறார். சக மனிதர்கள் மீது கொண்டுள்ள நேயத்தை,

‘ஒவ்வொரு பாமரனும் உன்னதம் எய்த வேண்டும். இங்கே ஒவ்வொருவனுக்குள்ளிருக்கும் விலங்குகள் அழிந்து மனிதர்கள் மலர வேண்டும்’[13] என்று பறைசாற்றுகிறார். அதோடு வயதான முதியவர்களுக்குக் கல்விபுகட்ட வேண்டும் என்பதற்காக இரவுப் பள்ளியைத் தொடங்குகிறாள். வயதான முதியோர்களிடம் காட்டும் அன்பு, பரிவு, பாசம் போன்றவை மனிதநேயத்தின் உன்னத வெளிப்பாடாகும்.

‘சின்னச்சின்ன அறிவுச் செய்திகளை அந்த வயதான குழந்தைகளுக்குப் பொறுமையாக அவள் புகட்டிக் கொண்டிருக்கிறாள்”[14] என்ற வரிகளில் மனித நேயம் பளிச்சிடுகிறது.

தானத்தில் சிறந்தது அன்னதானமோ, ரத்ததானமோ மட்டுமல்ல. அதைவிடப் புனிதமானதும், உன்னதமானதும் கண்தானமாகும். நாம் இறந்த

பிறகு நம் கண்கள் மண்ணுக்கு உணவாய், உரமாய் ஆவதைவிடப் பார்வையற்ற ஒருவருக்குக் கண்தானம் கொடுக்கும் போது, இப்பரந்து விரிந்த உலகத்தினை அவர்கள் கண்டு மகிழ்வர்.

''நான் இப்படித்தான்
உயில் எழுத விரும்புகிறேன்
நான் இறந்தவுடன்
என் கண்கள்
பார்வையற்ற ஒருவன் கண்களில்
பதிக்கப்பட வேண்டும்
இந்தத்
தங்க உலகத்தை அவன்
தரிசிக்க வேண்டும்!
அவன் மரணமடைந்தால்
அதே கண்கள்
பார்வையற்ற இன்னொருவனுக்குப்
பதிக்க வேண்டும்!
இப்படியாக
என் கண்கள்
ஊழியின் எல்லை வரை
யுகங் கடந்து வாழ வேண்டும்''[15]

என்ற கவிதையில் தன்னுடைய கண்கள் கடைசிக் காலத்தில் பார்வையற்ற ஒருவருக்குப் பதிக்கப்பட வேண்டுமென்றும், அதோடு சேர்ந்து ஒரு கோரிக்கையையும் முன்வைக்கிறார். அக்கண்கள் பொருத்தப்பட்டவர் இறந்தவுடன் அதே கண்கள் பார்வையற்ற இன்னொருவருக்குப் பொருத்தப்பட வேண்டும். இச்செயல்பாடு பல யுகங்கள் கடந்தும் வாழ வேண்டும் என்பதில் கவிஞரின் மனிதநேய உள்ளம் புலப்படுகிறது.

## அ∴றிணை மீது மனித நேயம்

கவிஞன் எந்தப் பொருளையும் பாடலாம். பொருளுக்கு வரம்பு இல்லை என்பார் க.ப. அறவாணன். மனிதநேயம் என்பது மனிதர்களிடத்தில் மட்டுமல்ல; உலகத்திலுள்ள அனைத்து உயிர்ப்பொருள்களின் மீதும் அன்பு காட்ட வேண்டும். அ∴றிணைப் பொருள்கள் மீதும் இரக்கம் காட்ட வேண்டும். கருணைமழை பொழிய வேண்டும். வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடிய வள்ளலாரின் தெய்வீக இரக்கக் குணமும், 'காக்கை குருவி எங்கள் சாதி' என்று பாடிய பாரதியின் மனித நேய இரக்கப் பணிவும் அ∴றிணை நேசிப்புக்கு வழிகாட்டிய சிந்தனைத் துளிகளாகும்.

மனிதர்களை மட்டுமல்ல, மரம், செடி, கொடிகளையும், பறவை விலங்குகளையும் கூட நேசிப்பது தமிழர் பண்பாடு. புனிதம் நிறைந்த உறவுகளே நமது பண்பாட்டின் அடையாளச் சின்னங்களாகும். சிறுமியும் தேவதையும் என்ற கவிதையில் உண்மை உறவுகளின் அன்பைப் புரிய வைக்கிறார் கவிஞர்.

> ''நாய்க்குட்டியென்பது
> பொருள் அல்ல – உயிர்''[16]

என்று சொன்ன கவிஞர், தண்ணீர் தேசத்தில் சுண்டெலியின் மரணத்திற்காகக் கண்ணீர் சிந்தியதை மனிதாபிமானத்தோடு எடுத்தாள்கிறார்.

> ''அதை வெறும் சுண்டெலி
> என்று சொல்லாதே! இந்தப் படகின்
> ஏழாவது ஜீவன் என்று சொல். உருவங்கள்
> மாறலாம். ஆனால் உனக்கும் எனக்கும்
> அதற்கும் உயிர் ஒன்று தான் நம்
> ஆறுபேரில் யாராவது ஒருவர் செத்திருந்தால்
> நீ அழாமல் இருப்பாயா?[17]

என்னும் கவிதை இங்குக் குறிக்கத்தக்கது.

## கிராமிய அன்பு வாழ்க்கை

மனிதநேயத்தின் ஆணிவேர் அன்பு. அந்த அன்பு தான் உலகத்தைத் தொடர்ச்சியாக இயக்கிக் கொண்டிருக்கிறது. அந்த அன்புதான் வாழ்க்கைக்கும் இன்றியமையாதது. இல்லற வாழ்வின் முதன்மைப் பண்பாக வள்ளுவர் அன்பைச் சுட்டுகிறார்.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."[18]

மனித வாழ்வியல் கோட்பாடுகளில் தலைமையானது அன்பாகும். வாழ்க்கை சிறந்து விளங்க அன்பு அவசியம். கலித்தொகை அன்பினைப் பற்றிக் கூறுமிடத்து,

'அன்பெனப் படுவது தன்கிளை செறாமை'[19]

என்கிறது. அன்பின் அரவணைப்பே வாழ்க்கை என்று சொன்னார் வீரத் துறவி விவேகானந்தர். அன்பு எனப்படுவது தன் இரத்த சம்பந்தப்பட்டவர்களிடமோ அல்லது வேண்டியவர்களிடமோ மட்டும் காட்டப்படுவதன்று. அதனையும் தாண்டி உறவுமுறைகளுக்கு அப்பாற்பட்டவரையும் நேசிக்க வேண்டும். அன்பு என்பது விலைமதிக்க முடியாத அணிகலனாகும். உலக இயக்கத்தின் அச்சாணி. உலகின் தலைசிறந்த பண்பு அன்பாகும். அன்பின் வழியது உயிர்நிலை என்ற அய்யன் வள்ளுவரின் கோட்பாட்டிற்கு ஏற்ப கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில் பேய்த்தேவர் என்னும் கதாபாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

பேய்த்தேவரின் மனைவி அழகம்மாள் இறந்து போன செய்தி கேட்ட பேய்த்தேவரின் எண்ண அலைகள் அன்பின் ஆணிவேரை வெளிப்படுத்தும்

சிந்தனையாகும். அவர் மனைவி மீது கொண்ட அன்பின் வெளிப்பாடு குறிக்கத்தக்கது.

‘‘மழைநீரில் சுவர் கரைந்தால் மண்ணுக்குள் போன மிஞ்சி ஒரு நாள் கண்ணுக்குத் தெரியலாம். ஆனால் மண்ணுக்குள் போனால் அழகம்மாள் தெரிவாளா? வீட்டுக்கு மண்குழைத்த மாதரசி இதோ ஒண்ணரை மைல் தூரத்தில் உசுரில்லாமல் கிடக்கிறாள்’’[20] என்றவரிகளில் அன்பின் அடர்த்தியும், அதற்கு இவ்வுலகில் எந்த ஒரு செயலும், பொருளும் ஈடாகாது என்பதும் புலப்படும்.

தன் மனைவி உடுத்தியிருந்த சேலையைச் சலவைக்குப் போட்டதை அறிந்த பேய்த்தேவர் அழுது புலம்பியவாறே சலவைக்காரனிடம் சொல்லும்போது,

‘‘வீச்ச மெடுத்துருச்சா…? வீச்சமா அது…? அழகம்மா ஆவியடியம்மா. அது ஏங்கூட அது பேசும்; அதுகூட நான் பேசுவேன். ராசாவுக்குக் கீரீடம் மாதிரிடியம்மா ஏந்தலைக்கு அவசீல’’[21] என்கிறார். மனைவி கட்டியிருந்த சேலையின் வாசம்கூட அவர்க்கு உயிர்வாசமாக, உயிர்க்கேடயமாக விளங்கியதையும், சேலையைக் கூட மனைவியாக நினைத்து உண்மையான அன்பு செலுத்தியதையும் வெளிக்காட்டும். இதன் மூலம்,

‘‘இம்மைமாறி மறுமையாயினும்
நீயாகியர் என் கணவனை
யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே’’[22]

என்ற குறுந்தொகை இலக்கியம் காட்டும் கணவன் மனைவி அன்பு, கிராமங்களில் மெய்ப்பிக்கப்படுகிறது என்றே கருத முடிகின்றது.

தன் உறவுக்காக மட்டுமல்ல; தான் காதலித்து, காதல் நிறைவேறாமல், பேய்த்தேவர் வீட்டில் வந்து குடியிருக்கும் முருகாயி, தனக்குத்

தொந்தரவுகளையும் தந்து, வீட்டிலிருந்து தன்னை விரட்ட சதித்திட்டம் போடும் பேய்த்தேவரின் மகளான மின்னலின் குழந்தைக்குக் காய்ச்சல் ஏற்பட்டபோது குழந்தையின்மீது பரிவு காட்டும் அன்பு தன்னலமற்றது.

“தாயி! ஒண்ணும் பயப்படாத! தைலம் வச்சுத்தாரேன். பூசுனா சரியாப் போயிடும்”[23] என்று சொல்வது,

“இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்”[24]

என்ற அய்யன் வள்ளுவனின் கூற்றைக் கிராமத்துப் பெண் நிறைவேற்றுவதைக் காட்டுகிறது.

## காதல் உணர்வு

காதலும் வீரமும் தமிழ் மண்ணிற்குரிய தனிச்சிறப்புடைய இருபண்புகளாகும். பண்டையத் தமிழ் மரபில் இவ்விரண்டு பண்புகளும் ஒன்றையொன்று தழுவிச் சென்றுள்ள குறிப்புகள் தமிழ் இலக்கியங்களில் ஏராளமாகக் காணப்படுகின்றன. கிராமப்புற மக்களிடம் காதல் உண்மைத் தன்மையுடையதாகவும், வெள்ளையாகவும் உயிர்த்தெழுகிறது. காதலில் இணைவதும் உண்டு. பிரிவதும் உண்டு. இத்தகைய நிலை கிராமங்களிலும் காணப்படுகிறது. நிறைவேறாத காதலைக் கள்ளிக்காட்டு இதிகாசம் மூலம் கவிஞர் விளக்குகிறார். காளை வயதில் பேய்த்தேவரும், ஊர் சவரத் தொழிலாளியின் மகள் முருகாயியும் ஒருவரை ஒருவர் விரும்புகின்றனர். ஆனாலும் அவர்களின் காதலை ஊர் ஏற்காது என்பது இருவருக்கும் தெரியும். அந்த இருவரின் மனவேதனையை,

"அவயாரு? நீ யாரு? ஏணி வச்சாலும் எட்டுமா? நெனைக்கலாமா அவள? முருகாயி மாதிரி மூக்கு முழியுமா ஒருத்தி இந்த எட்டூர்லயும் இல்ல; வாஸ்தவம்தான். ஆனா அவ சாதி என்ன? ஒஞ்சாதி என்ன? நாளப் பின்ன தாய் பிள்ளைக மதிக்குமா?...... மறந்துடுறா அவள! மானங்கெட்ட பயலே,"[25]

இது பேய்த்தேவரின் மனம் கூறுவது, என்னும் ஆணின் காதலுக்குச் சாதி ஒரு தடைக் கல்லாகக் கிராமங்களில் விளங்குவதைக் காட்டுகிறது. சாதி மாறி திருமணம் செய்து கொண்டவர்களோடு குடும்ப உறவுகள் தொடர்பு வைத்துக் கொள்ளாது என்பதைக் கூறிய கவிஞர் பெண்ணின் மனவேதனையை,

"ஏண்டி முருகாயி! துப்புக் கெட்டவளே! இதுக்கு முன்னால ஆம்பளைகளையே பாக்காதவ மாதிரியில்ல கெறங்கிக் கிறுகிறுத்து நிக்கிறவ! குதிகால் இல்லாதவ கொலுசுக்கு ஏன் ஆசப்படுற? இந்த ஊர் ஒலகத்தப் பத்தித் தெரியாதா ஒனக்கு? கூனுகுருடுன்னாலும் சொந்தச் சாதிக் காரியக் கல்யாணம் பண்ணுவாகளே தவிர, மகாராணியா இருந்தாலும் மத்த சாதிக்காரியத் தொடுவாகளா? ....... ஒங்கப்பன் தகரப் பெட்டிக்குள்ள தங்கக் கத்தி சேராதுடியம்மா! புத்திய மாத்திக் கிட்டுப் பொத்திக்கிட்டு கெட".[26] இது முருகாயியின் மனம் கூறுவது என்று பதிவு செய்கிறார். கிராமங்களில் சாதிவிட்டுச் சாதியில் திருமணம் செய்து கொள்வதை விரும்புவதில்லை என்பதால் சிலர் காதலை வெளியே சொல்லத் தயங்குகின்றார்கள். தன் மனதிலே காதலை வைத்துக் கொண்டு அதை வெளிப்படையாகச் சொல்லாமலே வேறொரு திருமணம் செய்து கொள்கின்றனர். இப்படிப்பட்ட கிராமத்து ஏழைப் பெண்களின் மனக் குமுறலை,

‘‘தவிப்புக்கு ஒருத்தன்
தாலிக்கு வேறொருத்தன்
எத்தனையோ
பெண் தலையில்
இப்படித்தான் எழுதியிருக்கோ?
ஏழைப் பொம்பளைக
எதுவும் சொல்ல முடியாது’’[27] என்றும் கவிதையில் எடுத்துரைக்கிறார்.

காதலுக்கு இடையூறாகக் கிராமங்களில் வாழும் மனிதர்களுக்கு இடையே சாதிபேதம் இருப்பதை எடுத்துரைக்கிறார்.

## நட்பு

நட்பு என்பது புனிதமானது. ஒருவனுக்கு நல்ல நட்பு அமைவது இன்றியமையாதது. சங்ககாலம் தொடங்கி இக்காலம் வரை நட்பு பற்றிப் பல இலக்கியங்கள் எடுத்துக் காட்டியுள்ளன.

மனிதர்களின் உறவு நிலைக்கு வலுவூட்டுவது அன்பே ஆகும். நட்புக்கு அன்பே இன்றியமையாதது ஆகும். இதனாலேயே உள்ளமெனும் இருகரைகளை இணைக்கும் நட்புப் பாலம் அன்பென்னும் அறுபடாத கயிற்றாலேயே உருவாக்கப்படுகிறது. நட்பைப் பற்றிக் கூறுமிடத்து வள்ளுவர்,

‘‘அன்பீனும் ஆர்வம் உடைமை அது வீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு’’[28]

என்று கூறுகிறார். நட்பு ஏற்படுவதற்கு அன்பு, ஆர்வம், ஒத்த உணர்ச்சி ஆகியவை காரணம் என்று குறிப்பிடுகிறார். பிறிதொரு குறளில்

‘‘புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்’’[29]

என்றும் கூறியுள்ளார். மனித உறவுகளிலே மிகச் சிறப்பானது நட்பு. போற்றத்தக்கது நட்பு. கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் பேய்த் தேவரின் நண்பராக வண்டி நாயக்கர் அறிமுகப்படுத்தப்படுகிறார். பேய்த் தேவரை சொக்கத் தேவன் பட்டியில் பார்த்த வண்டிநாயக்கர்,

‘‘வாய்யா......வாய்யா என்றார் வாய் நிறைய. யப்பா பெருமாளு..... தேவருக்கு ஒரு வடகுடு எனக்குப் போட்றமாதிரி டீயும் போடு’’[30] என்று உத்தரவிடுகிறார். இது, பேய்த் தேவருக்கும் வண்டி நாயக்கருக்கும் உரிய நட்பைக் காட்டுகிறது.

வண்டி நாயக்கருக்கு உடல்நிலை சரியில்லாதபோது பேய்த்தேவர் பார்க்கச் செல்கின்றார்.

> ‘‘என்னய்யா ஆச்சு இப்படி ஆகிப்போனீக? பதறிப்போன பேய்த்தேவர், கம்பளிக்குள்ளயிருந்த நாயக்கர் கையத் தேடிப் புடிச்சு உள்ளங்கைய வச்சு அழுத்தினாரு. சில்லுன்னு இருந்திச்சு கையி. மண்பானைத் தண்ணி மாதிரி. கொஞ்ச நேரம் ஆசையா பாசமா அவரையே பாத்துக்கிட்டிருந்தாரு நாயக்கரு. ஓடையில பள்ளம் பறிச்ச எடத்துல பொங்கிவர்ற தண்ணி மாதிரி ஊறித் தேங்கி நிக்குது கண்ணீரு’’.[31]

என்று வண்டி நாயக்கர் - பேய்த்தேவர் ஆகியோருக்கிடையே உள்ள உண்மையான நட்பினை உறுதிப்படுத்தும் ஒரு கருவியாகக் கண்ணீர் திகழ்வதைக் காட்டுகிறார்.

மிகப் பழமையான காலம் முதல் இன்று வரை ஆண்களின் நட்பு மட்டுமே அதிகம் பேசப்படுகிறது. இதற்குக் காரணம் ஆண்களின் நட்பே காலங்காலமாகப்

போற்றப்பட்டு வருகிறது. ஓர் ஆணின் நட்பு அவனின் கடைசிக் காலம் வரை தொடர்கிறது. ஆனால் பெண்களின் நட்பு திருமணத்திற்குப் பின் தொடர முடியாத நிலை ஏற்பட்டுவிடுகிறது. ஏனெனில் திருமணத்திற்குப் பின் ஒரு பெண் அவளது குடும்பம், பிள்ளை என மாறிவிடுவதால் அவர்களது நட்பு முடிந்து போன கதையாக அமைந்துவிடுகிறது. கிராமப்புறப் பெண்கள் இருவரிடையே ஏற்பட்ட நட்பு குறித்தும், பின்னர் நட்பு என்ன ஆனது என்பது குறித்தும் 'தோழிமார் கதையில்' வெளிப்படுத்துகிறார்.

''ஒண்ணா வளந்தோம்
ஒரு தட்டில் சோறு தின்னோம்
பிரியாதிருக்க ஒரு
பெரிய வழி யோசிச்சோம்
ஒரு புருசன் கட்டி
ஒரு வீட்டில் குடியிருந்து
சக்களத்தியா வாழச்
சம்மதிச்சோம் நெனவிருக்கா?[32]

என்று இரு தோழியரும் பிரியாதிருக்க அறியாத வயதில் பேசிய மொழிகளையும், நட்புப் பிரியாமல் இருக்க ஒரு கணவனையே திருமணம் செய்ய நினைத்ததையும், அது நடக்காமல் போனதையும் கவிஞர் பதிவு செய்கிறார்.

''தண்ணியில்லாக் காட்டுக்குத்
தாலிகட்டி நீ போக
வறட்ரூரு தாண்டி
வாக்கப்பட்டு நான் போக
ஒம்புள்ள ஒம்புருஷன்
ஒம்பொழப்பு ஒன்னோட
எம்பொழப்பு என்னோட''[33]

என்ற கவிதையில், பெண்கள் ஆளுக்கொரு பக்கமாய் திருமணம் செய்து கொண்டுபோக, அவர்களது நட்பும் முடிந்து போவதைச் சுட்டுகிறார். இவற்றின்

மூலம் ஆண்களின் நட்பு இறுதிக்காலம் வரை தொடர்வதையும், பெண்களின் நட்பு தொடர முடியாத சூழலையும் பதிவு செய்துள்ளதைக் காணவியலுகிறது.

## இரக்க உணர்வு

மனித நேயத்தின் உள்ளடக்கக் கூறுகளுள் ஒன்று இரக்க உணர்வு. மனித நேயத்தின் ஏதாவது ஒரு கூற்றினை எடுத்து விளக்கினாலும் பிறகூறுகள் இயல்பாய் வந்து ஒட்டிக் கொண்டு ஒளிவீசுவது இயற்கை. இரக்கத்தின் ஊற்றுக் கண்ணாகப் பரிணமிப்பது.

''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்''[34]

என்ற வள்ளலாரின் வைர வரிகளைக் குறிப்பிடலாம். உலக உயிர்களிடத்து மட்டுமல்லாமல், பயிர்கள் மற்றும் பிற அஃறிணைப் பொருள்கள் மீதும் இரக்கம் வைத்த இயல்பு மனித நேயத்தின் உச்சம் எனலாம்.

கள்ளிக் காட்டு இதிகாச நாவலில் பேய்த்தேவரின் மகன் சின்னு பெற்ற கடனுக்காகப் பேய்த்தேவர் பஞ்சாயத்தில் தலைகுனிந்து நிற்கிறார். அவரைப் பார்த்து இரக்கம் கொண்ட ஆசாரி,

''சொல்றேன் கேளுங்கப்பா. ஒருத்தன் பண்ண குத்தத்துக்கு ஊர்ப்பகை வந்துற வேணாம். காசு கொடுத்து ஏமாந்தவன் காசு கேக்குறான். நியாயந்தான...? கொடுக்க வேண்டியது நூத்தி எழுபது. கைவசம் நூறை நெருக்கி இருக்கு. கள்ளிப்பட்டிக்கு மானம் மரியாதி இல்லையா? தலைக்கு ஒரு ரூவா போட்டா எழுபது ரூவா சேராதா? அதை நொட்டாங் கையில வாங்கி விட்டெறிஞ்சிட்டு வேலையப் பாருங்கப்பா!...[35]

என்ற வரிகளில் சக மனிதனுக்காக இரங்கும் இரக்கக் குணம் வெளிப்படுகிறது. என் எழுத்தைப் பாதுகாக்கும் உண்டியல்கள் என்று கிராமங்களைப் பற்றிக் கூறிய கவிஞர் வைரமுத்து, கிராமங்களில் துன்பப்படும் ஏழைகளுக்காக மனம் வருந்திப் பாடுவதன் வாயிலாக அவரது இரக்கக் குணத்தை அறிய முடிகிறது.

“ஆகாயத்தில்
வானவில்லுக்கு அடித்த
வர்ணம்
காய்ந்துவிட்டதா என்று
தொட்டுப் பார்க்க
எம்விரல் நீள்வதில்லை
ஏழையின்
கண்ணீரைத் துடைத்துக்
காய வைக்கத்தான்
பத்து விரல்களும்
படபடக்கின்றன”[36]

என்று ஏழைகளுக்காக இரங்குவதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

சிகரங்களை நோக்கி என்ற நாவலில் திருஞானம், விஞ்ஞான ஆராய்ச்சியின் பயனாக உயிரிழந்த இரண்டு முயல்களுக்காக வருத்தப்பட்டு இருப்பதைப் பதிவு செய்கிறார் ஆசிரியர்.

“ஒரு சாம்ராஜ்யத்தை விரிக்க முடிந்த ஒரு சக்ரவர்த்தியின் உயிரும், தன் வேரிலிருந்து ஓர் இலையை விரிக்க முடிந்த ஒரு புல்லின் உயிரும் ஒன்றுதான். மௌனங் கொண்ட ஓவியா! மரித்துப் போன உயிர்களுக்காக மௌனங் கொண்டாடு”[37]

என்று உலக உயிர்கள் அனைத்தின் மீதும் இரக்க உணர்வு கொள்ள வேண்டும் என்னும் மனிதநேயக் கருத்தினைப் பதிவு செய்துள்ளார்.

## ஒற்றுமையுணர்வு

கிராமிய வாழ்வியல் கோட்பாடுகளில் அன்புக்கு அடிப்படையாக, நட்புக்கு ஆணிவேறாக விளங்குவது ஒற்றுமை. ‘கூடி வாழ்ந்தால் கோடி நன்மை’ என்பது தமிழரின் முதுமொழி.

“ஒன்று பட்டாலுண்டு வாழ்வு - நம்மில்
ஒற்றுமை நீங்கிடிலனைவர்க்கும் தாழ்வே”[38]

என்ற பாரதியின் வரிகள் ஒற்றுமையுணர்வினால் ஏற்படும் நன்மையினைப் பதிவு செய்கிறது. ஒற்றுமையாக வாழ்ந்தால் தான் மனித வாழ்க்கையே சிறக்கும். கூடி வாழ்வதும், அதனால் அதிக நன்மையினை அடைய முடியும் என்பதையும் தன் படைப்புகளில் பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ளார் கவிஞர் வைரமுத்து.

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் கள்ளிப்பட்டியைச் சுற்றி அணைகட்ட அரசாங்கம் உத்தரவிடுகிறது. இதனை அறிந்த கிராம மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து எதிர்த்துப் போராடுகின்றனர்.

“அதுல வந்து… பாட்டன் பூட்டன் த(ை)லமொறையா நாம பொழச்சமண்ணு அணைக்கட்டுத் தண்ணியில போகப் போகுதுன்னு சொல்றாக. இதப்பத்திப் பத்தூரு அபிப்ராயத்தக் கேட்டுத்தான் முடிவு பண்ணனும்”[39]

என்ற பேச்சில் மக்களின் ஒற்றுமையுணர்வைக் காண முடிகிறது. அரசாங்கத்தால் துரத்தப்பட்ட சக்கரபட்டி கிராம மக்கள் அனைவரும் ஒற்றுமையுடன் கூடி ஒரு முடிவெடுத்தார்கள்.

“யப்பா வெட்டிக்கிட்டாலும் குத்திக்கிட்டாலும் நாமெல்லாம் ஒரே மண்ணுல பொறந்து ஒண்ணா வளந்தவுக. நம்ம ஆளுக சிந்த வேணாம்; சிதற வேணாம்; இந்த மண்ணவிட்டு எந்த மண்ணுக்குப் போனாலும் ஒண்ணாவே போவோம்; ஒண்ணாவே இருப்போம். பொழச்சா எல்லோரும் ஒண்ணாப் பொழைப்போம்; செத்தா எல்லோரும் ஒண்ணாச் சாவோம்”[40]

என்கின்றனர். வாழ்ந்தால் ஒன்றாகச் சேர்ந்து வாழ்வோம் என்றும், இறந்தால் கூட சேர்ந்தே சாவோம் என்று சொல்வதிலிருந்து கிராம மக்கள் வாழ்வின் எல்லா நிலையிலும் ஒற்றுமையுடன் செயல்படுவதைக் காணலாம்.

## விவசாய முறை

வேளாண்மைத் தொழில் செய்வதற்குச் சில அடிப்படையான தொழில்முறைகளை விவசாயிகள் மேற்கொள்ளுகின்றனர். அதாவது ஒவ்வொரு பருவ காலத்திற்குத் தகுந்தவாறும், மண்ணின் தரத்திற்குத் தகுந்தவாறும் மழைநீரின் அளவைக் கருத்தில் கொண்டும், பயிர்களைப் பயிர்செய்வதில் கைதேர்ந்தவர்கள் விவசாயிகள். கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேய்த்தேவர் மரங்களை நடுவதற்குக் குறிப்பிட்ட இடைவெளிகள் அவசியம் என்பதை

“நண்டூர நெல்லு
நரியோடக் கரும்பு
வண்டியோட வாழை
தேரோடத்தென்ன”[41]

என்கிறார். நெல்லு பயிரிட்டால் இரண்டு நாற்றுக்கு நடுவில் நண்டு ஓடணும். கரும்பு நட்டால் இரண்டு கரும்புக்கு நடுவில் நரிஓடணும். வாழை நட்டால் இரண்டு வாழைக்கு நடுவில் வண்டி ஓடணும். இரண்டு தென்னைக்கு நடுவில்

தேர் ஓடணும். இப்படி இடைவெளிவிட்டு பயிர்செய்தால்தான் விவசாயம் நன்றாக வரும் என்று ஒவ்வொரு பயிருக்கும் ஒரு கணக்கு இருப்பதை எடுத்துக் கூறுகிறார்.

கருவாச்சி காவியத்தில் பெரிய மூக்கி வாயிலாகப் பயிர்கள் முளைப்பதற்கான நாட்களைக் கூறுகிறார்.

> ‘‘ஏழு நாளு ஆகும் மொச்சையும் தட்டாம் பயிறும் மொளைக்க. கல்லுப் பயிறும் சோளமும் மொளைக்க நாலு நாள் ஆகும். மூணு நாள் ஆகும் எள்ளு மொளைக்க. காணப்பயிறு ஒண்ணுதாண்டா ஒரே ராத்திரியில மண்ணுக்குள்ள மலந்து விடிய்ய மொளைச்சிருக்கும்’’[42]

என்று விவசாய நடை முறையினை எடுத்துக் கூறுகிறார்.

## உரமிடுதல்

இன்றைய விவசாய முறைகளில் விளைச்சலை அதிகப்படுத்த பயிர்களுக்கு ஏராளமான இரசாயன உரங்களை இட்டு, அதிக மகசூல் பெறும் முயற்சியில் உலகம் முன்னேறிக் கொண்டிருக்கிறது. ஆனால் பழமையான காலந்தொட்டு இன்று வரையில் கிராம மக்கள் விவசாய வளர்ச்சிக்கு சாணிஉரம், சாம்பல் உரம், ஆட்டு புழுக்கை போன்ற இயற்கை உரத்தையே அதிகமாகப் பயன்படுத்தி விளைச்சலைப் பெருக்கி இருக்கிறார்கள்.

> ‘அழுத்துறா மொக்க ..... அழுத்துறா
> தை ஒழவு அய்யாட்டுக் கெ(ை)டடா’’[43]

என்ற பழமொழியை ‘‘கள்ளிக்காட்டு இதிகாசத்தில்’’ பேய்த்தேவர் பேரன் மொக்கராசுவுக்குச் சொல்லிக் கொடுக்கிறார். ஆட்டு உரம் போட்டால் நிலத்தின்

விளைச்சல் அதிகமாகும். ஆயிரம் ஓரம்போடு... ஆட்டுக்கெட மாதிரி ஆகுமா நெலத்துக்கு...? ஆட்டுப் புழுக்கையும், கோமியமும் சேர்ந்தா பொட்டக்காடு பொன்வெளையுமடா. அப்படி அஞ்சு ஆட்டுக்கெட வச்சா என்ன ஊட்டமோ அப்படி ஒரு ஊட்டமடா தைமாச ஒழவு என்கிறார். இதன் மூலம் இயற்கையான உரங்களே விளைச்சலுக்கு நல்லது என்பதும், இரசாயன உரங்கள் மூலம் மண் மலடாகிப் போய்விடுவதோடு, அடுத்தத் தலைமுறையினரையும் அது பாதிக்கச் செய்கிறது என்பதையும் புலப்படுத்துகிறார்.

## உழைப்பு

விவசாயி ஆண்டு முழுவதும் உழைத்து இறுதியில் வறுமையில் வாடுபவன். உழைப்பு மனிதனை வளப்படுத்த வேண்டும். ஆனால் இன்று உழைப்பவர்களின் வாழ்விலோ வெறுமை தென்படுகிறது. உழைப்பும், முயற்சியுமே மனிதர்களை நாகரிகமுடையவர்களாக உருமாற்றியது. உழைப்பு மனிதர்களை வாழ்வின் அடுத்த நிலைக்கு அழைத்துச் செல்வதற்குப் பதிலாக உழவர்களை மட்டும் கடன் சுமையில் தள்ளிப் பாழ்படுத்துகிறது.

உழவுத் தொழிலை வளப்படுத்த, எளிமையாக்க எத்தனையோ இயந்திரங்கள் வந்துவிட்ட போதும் கிராம விவசாயிகள் தொன்மையான விவசாயக் கருவிகளை வைத்துள்ளதைக் குறிப்பிடுகிறார்.

> ‘‘நதிக்கரை நாகரிகத்தில்
> மனிதன் முதன்முதலில்
> விவசாயத்திற்குத் தயாரானபோது பயன்படுத்திய
> அதே ஏர்க் கருவிகள்.’’[44]

மனிதகுலத்துக்கு ஆதாரமாக இருக்கின்ற உழவுத் தொழிலைச் செய்யும் உழவர்கள், நவீன இயந்திரங்கள் வந்துவிட்ட இக்காலத்திலும் வறுமை காரணமாக தங்கள் கைகளையே கருவிகளாக்கி உழைக்கின்றனர்.

‘‘கருவிகளைவிடக் கரங்களை அதிகமாக நம்பும்
அதே கற்கால விவசாய முறை
கலப்பையைவிட அதிகமாகத் தேய்ந்து போன
கறுப்புமேனி.
தனது கால்காணி நிலத்தின்
ஒவ்வோர் அங்குலத்தையும்
விரல்களால் தோண்டி நகங்களால் பயிரிடும்
அதே விவசாயமுறை’’[45]

என்கிறார். இந்தியாவில் விடுமுறையே இல்லாமல் உழைக்கும் விவசாயிகளின் வாழ்க்கையில் புதிய விவசாயமுறைகளும், உழுசாதனங்களும் வந்து சேராமல் இருப்பதற்கு முதன்மைக் காரணம் வசதியின்மைதான். அதனால் தாங்கள் தொடக்கக் காலத்தில் பயன்படுத்தி வந்த கலப்பைகளையும், கொழுவினையும் தேயத் தேயப் பயன்படுத்தியதால் முனை மழுங்கிப் போய் ஆழமாக உழுவதற்கு கலப்பைகளுக்கு மேல் பாரத்திற்கான கருங்கல் வைத்து உழும் முறையினையும் எடுத்துக் கூறுகிறார்.

‘‘தேய்ந்துபோன கலப்பை உழுதால்
ஆழப் பதியாது என்பதால்
கலப்பையின் மேல் கருங்கல்லைக் கட்டி உழும்
கண்ணீர் அவலம்’’[46]

இவ்வளவு போராட்டங்களுக்குப் பிறகும் உழைப்பின் முழுப்பயனும் விவசாயிகளுக்குக் கிடைத்ததா என்றால் இல்லை என்கிறார் கவிஞர்,

‘‘விதைத்ததில் முளைத்தது பாதி
முளைத்ததில் வளர்ந்தது பாதி

வளர்ந்ததில் விளைந்தது பாதி
விளைந்ததில் அறுத்தது பாதி
அறுத்ததில் கிடைத்தது பாதி
கிடைத்ததில் கடனுக்குக் கொடுத்தது பாதி''[47]

என்று விவசாயிகள், உழைப்பின் முழுப்பயனையும் அடைய முடியாமல் தவிப்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

வறுமை அவர்கள் வாழ்வில் நிரந்தரமாகக் குடியேறி இருக்கிறது. அவர்களின் வாழ்வாதாரம் சிதைந்து, போய் வாழ்க்கையோடு ஆடையும் கிழிந்து போயிருக்கும் அலங்கோல நிலையை எதார்த்தமாக எடுத்துக் காட்டுகிறார் கவிஞர் வைரமுத்து.

''என் கிராமத்து சகோதரி
ஒரு கிழிந்த பாவடைக்காரி
கேட்கிறாள்
இந்த வானமும் ஏன்
என்னைப் போல்
ஒட்டுப் போட்ட
ஆடை உடுத்துகிறது''[48]

என்று கிராம மக்களின் வாழ்வியல் எதார்த்தத்தை எடுத்துக் காட்டுகிறார் கவிஞர் வைரமுத்து.

### விவசாயியின் வறுமை

இந்தியா விவசாய நாடு. ஆனாலும் உழைக்கிற விவசாயிகளின் நிலை, அவர்களின் வாழ்வாதாரம் உயராமல், வறுமையிலே இறுதிக் காலம் வரை வாடும் நிலைதான் இந்தியாவில் காணப்படுகிறது.

''இன்மையின் இன்னாதது யாதுஎனின் இன்மையின்

இன்மையே இன்னா தது''[49]

என்ற அய்யன் வள்ளுவனின் வாக்கிற்கு ஏற்பவே உழவனின் நிலைமையும் காணப்படுகிறது.

ஏழை உழவனின் வாழ்க்கை மட்டும் உயிரோடு இருக்கும் போதே புதைந்து போய் விடுகிறது என்பதை

'இவர்கள் தூவும்
விதைக்கு மட்டும்
புதைத்த பிறகும் உயிரிருக்கிறது
இவர்கள் வாழ்வோ
உயிரிருக்கும் போதே
புதைந்து போகிறது''[50]

என்கிறார். வறுமைக் கோட்டிற்குக் கீழே தள்ளப்பட்ட உழைப்பாளிகள் கடினமாக உழைத்தும், அதற்கேற்ற ஊதியத்தைக் கொடுக்காமல், முதலாளிகளே அனுபவிக்கிற நிலைமையும், அதனால் விவசாயிகள் காலம் காலமாய் தொடர்ந்து வறுமை நிலைக்குத் தள்ளப்படுவதையும் படம்பிடித்துக் காட்டுகிறார் கவிஞர்.

''நிலப் பிரபுக்களின்
மதுக் கிண்ணங்களிலோ
சாராயத்தோடு சோடாவல்ல
உழைப்பவன் வேர்வையை
கலக்கப்படுகிறது
எப்படி இங்கே
உற்பத்தி பெருகும்?[51]

எனக் கேள்வி கேட்டுவிட்டு, அதற்கான பதிலையும் கூறுகிறார். வயல்களில் வியர்வையை விதைத்த அளவுக்குத் தானியங்களை அறுவடை செய்ய

முடியாமல் வாழ்நாள் முழுவதும் வறுமையிலே வாடும் அவர்களின் ஏழ்மை நிலையினை எடுத்துக் கூறுகிறார்.

''தூரத்து வயல்களில்
தொலைந்து போன தங்கள் வாழ்வை
நிலங்களில் குனிந்து
நிமிராமல் தேடும்
நிரந்தரக் கூலிகள்''.[52]

உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கும் மிஞ்சாது என்பது மட்டும் உண்மையே. கலப்பைகளும், மண்வெட்டிகளும், உடலும், தேயத்தேய உழைத்தவன் வாழ்வில் கடைசியில் வந்து சேர்வது கடன் சுமை மட்டுமே.

''இந்தமண் ணுக்குள் எதையோ தினம்தேடிச்
சந்தனமாய்த் தேய்ந்து சாய்ந்திருக்கும் கலப்பைகளே!''[53]

என்று கூறி உழைப்பவர்களின் வாழ்வில் வசந்தங்கள் எப்போது மலரும்? என்று கேள்வி கேட்டு அவர்களின் வாழ்வும் இந்திய விவசாயம் போல சரிந்து கொண்டே போகும் என்பதை,

''இந்தியாவில் விவசாயமே சரிவுதான் என்பது மாதிரி
சரிவுகளில் விவசாயம்''[54]

என்று கிராமங்களில் விவசாயம் செய்யும் மனிதர்களுக்காக மனம் வருந்திப் பாடுகிறார்.

''உழைத்த பிறகும் நிரம்பவில்லையே
உழவன் வீட்டின் உழக்கு''[55]

என்று உழவனின் வாழ்க்கையை, வறுமையின் கொடுமையைப் பதிவு செய்த கவிஞர் அவர்களின் உண்மை நிலையை,

“அதோ
கிழிந்த வாழ்க்கையை
உடுத்துக் கொண்டிருக்கும்
என்
கிராமத்து மக்கள்”[56]

என்று விவாசயத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் விவசாயியின் வறுமை நிலையை எடுத்துக் கூறுகிறார்.

## நிலத்தினை உயிராக மதித்தல்

உழவுத் தொழிலில் ஈடுபட்டுள்ள உழவர்களுக்கு நிலமும், நீரும், உழைப்பும் வாழ்க்கையின் முதலீடுகளாகும். தங்களுக்கு வாழ்க்கையைத் தரும் நிலத்தினை உயிரினும் பெரிதாகக் கொள்வர். நிலமகளைக் கூடச் செருப்பினால் மிதிக்காமல் இன்றும் பல கிராமங்களில் மக்கள் நடந்து செல்கின்றனர். கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேய்த்தேவரின் மனைவி அழகம்மாள் இறந்ததைப் பதிவு செய்யும் இடத்தில்,

“பேய்த்தேவருக்குப் பெண்டாட்டி செத்துப் போனது
பூமி செத்துப் போனது மாதிரி”[57]

என்று பூமியை உயிருக்கு நிகராக மதிக்கும் கிராம மக்களின் மனநிலையைப் பதிவு செய்கிறார்.

உழவனின் வாழ்வில் வளம் சிறக்கத் தன் மேனி முழுவதும் விளைச்சலை அள்ளிக் கொடுக்கும் வயல்காட்டைத் தினமும் பார்த்துப் பரவசப்படும் அழகினையும் பதிவு செய்துள்ளார்.

“வெளஞ்ச வெள்ளாமக் காட்டப் பாத்துக்கிட்டே இருக்கலாம், பசியெடுக்காது”[58] என்றும்,

''வெள்ளாமக்காடு பசப்புக்காட்ற அழகையே பாத்துப் பாத்து அருள்வந்து போனார் பேய்த்தேவர். சாமி எங்கேயோவா இருக்கு.... இந்த வெள்ளாமக் காட்லதான் இருக்கு!''[59]

என்றும் சொல்லிக் கொண்டார். கிராமப்புற விவசாயிகள் மண்ணையும், அது தரும் விளைச்சலையும், அதன் மகத்துவத்தையும் மதித்துப் போற்றி வரும் மரபு விவசாயப் பண்பாட்டில் இன்று வரை மரபு வழியாகப் பின்பற்றப்பட்டு வருகிறது.

## பயிரை உயிராகமதித்தல்

உழவர்கள் உலகத்தாருக்கு ஆணி என்றார் வள்ளுவர். அப்படிப்பட்ட உழவர்களது உழைப்பின் பயனாய்த் தலை நிமிர்ந்து நிற்பவை பயிர்கள். உடல் உழைப்பினை, வியர்வையினை மண்ணின் மேனியில் உரமாக்கியவனின் எதிர்காலக் கனவுகளாய் மண்ணில் தலை நிமிர்ந்து நிற்பவை பயிர்கள். பயிர்கள் செழித்து வளர நிலத்திற்கு முறையாக நீர்பாய்ச்சுவர். உரிய பருவகாலத்தில் மழை பொழியவில்லையெனில் பயிர்கள் நீரின்றி வாடிவிடும். பயிர்களின் வாட்டத்தைக் கண்டு உழவர்களின் உள்ளம் குமுறும். கண்கள் குளமாகும். விவசாயப் பயிர்களையும் தங்களின் உயிராகக் கருதி மனம் பதைத்துக் கொண்டு இருக்கும். கருவாச்சியும், பெரியமூக்கியும் தங்களுக்குச் சொந்தமான விவசாய நிலத்தில் விதைத்த சோளமும், பயிறும் முளைத்து நிற்பதைப் பார்த்து கருவாச்சியின் நினைப்பு வழியாக,

''மூணு வாரமாச்சு. பாக்கப் பாக்க ஆசையாயிருக்கு பயிர்மொளைச்ச காடு. சும்மா பச்சைத் தீப்புடிச்சு எரியிர மாதிரியிருக்கு பூமி. ஒரு சாண் உயரத்துக்கு வளந்து தோகையைச் சொழட்டிச் சிலம்பாடி நிக்கிற சோளப்பயிரும் மொளைச்சு எந்திரிச்சுக் கொடியோடப் பாக்கிற பயத்தஞ்செடிகளும் ஒனக்குநான் மெதமான்னு

ஒண்ண ஒண்ணு பாத்துச் சிரிச்சுக்கிட்டே காத்தோட பலிஞ்சடுகுடு ஆடிப் பழகுதுக. ஒரு சின்னத் தூத்த விழுந்தாப் போதும். பதம் கெடைக்கும், ஒரு வாரத்துல களையெடுத்திரலாம்''[60] என்று நினைக்கிறாள். கஷ்டப்பட்டு விவசாயம் செய்த பயிர்களுக்குக் களையெடுத்து, முறையாகப் பராமரிக்க ஆள் கிடைக்காத நேரத்தில் கூட பக்கத்து ஊருக்கு ஆள் அனுப்பி, அதிகக் கூலி கொடுத்து நிலவு வெளிச்சத்தில் களையெடுத்து, பயிர்களை நல்லபடியாக வளர்த்ததையும் பதிவு செய்கிறார் ஆசிரியர்.

> ''களையெடுக்க நாதியில்லையே... என் காடு போச்சே ... வெதச்சது போச்சே ... மகள மாடாக்கி வம்பாடு பட்டு உழுதகாடு. முழிச்சிருக்க முழியத் தோண்டுன மாதிரி மூளியாப் போயிரும் போலருக்கே''[61]

என்று பெரிய மூக்கி கதறுவது பயிர்களை உயிராக நினைத்துப் பயிர் செய்யும் கிராமத்து மக்களின் பண்பாட்டையும், விவசாயத்திற்காக அவர்கள் படும் துயரத்தினையும் புலப்படுத்துகிறது.

## உழவுத் தொழில்முறை கற்றல்

கிராமங்களில் உழவர்கள் உழவுத் தொழிலை, புதியவர்களுக்கோ அல்லது குடும்ப உறுப்பினர்களுக்கோ கற்றுக் கொடுக்கும் போது நிலத்தினையும், இறைவனையும் வாழ்த்திவிட்டு தொழில்முறையைக் கற்றுக் கொடுப்பது வழக்கம். அந்தக்குல வழக்கத்தினைக் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பதிவு செய்துள்ளார் கவிஞர் வைரமுத்து. தன் மகன் சின்னுவை விவசாயத்திற்குப் பழக்கினார் பேய்த்தேவர் தன்னுடைய வாழைத் தோட்டத்திற்கு அழைத்து வந்து தொழிலைக் கற்றுக் கொடுத்தார்.

“சாமி கும்பிட்டுச் சகுனம் பார்த்து அவன் கையில் மண்வெட்டி கொடுத்தார். நாலு மம்பட்டிக்காரர்களோடு அவனையும் உழுத புழுதியில் கரைகட்டச் சொன்னார்”.[62]

தொழில் பழகும் போது முறைப்படி தொழில் கற்றவர்களுக்கு நடுவிலோ அல்லது சேர்த்தோதான் குலவழக்கப்படி கற்றுக் கொடுப்பர் என்பதையும் எடுத்துக் கூறுகிறார்.

## மனிதச் செயல்களுக்கு – தாவரவியல் ஒப்பீடு

மனிதர்கள் செய்யும் செயல்களுக்குக் கிராமங்களில் வாழும் மனிதர்கள் அதனை மரம் செடிகொடிகளின் செயல்களோடு ஒப்பிட்டுக் கூறுவது மரபு. இதில், கிராமப்புற மனிதர்களின் அனுபவ அறிவோடு. இயற்கை குறித்த நேசிப்பும் வெளிப்படும். தண்ணீர் தேசம் நாவலில்,

“இரண்டு ஒட்டுமாஞ்செடிகளைக் கட்டுவது போல் அவளைத் தன் மார்போடு பதித்து முத்தப் பசையிட்டு ஒட்டிக் கொண்டான்”[63]

என்று சொல்வதின் மூலம், தாவரங்களில் புதுவகையான பயிர் உற்பத்திக்கு ஒட்டுப் போட்டுப் புதிய ரகத்தினை உருவாக்குவதைக் கூறுகிறார்.

தாவர வகையில் ஒரு வகை தொட்டாசிணுங்கி. இதன் தன்மை தொட்டால் தன் இலைகளைச் சுருக்கிக் கொள்ளும். இதன் இயல்பினை தண்ணீர் தேசம் நாவலில் கவிஞர் எடுத்துக் கூறுகிறார்.

“அது வரையில் அந்த விசைப் படகில்
விரித்திருந்த சந்தோஷத்தின் சிறகு
தொட்டாற்சிணுங்கி இலையைப் போல்
மொத்தமாய் மூடிக் கொண்டது”[64]

என்று விளக்கிக் கூறுகிறார். தாவரங்களில் செயற்கையாகவும், இயற்கையாகவும் நடைபெறும் செயல்களை எல்லாம் மனித வாழ்வியலோடு தேவைக் கருதி கிராம மக்கள் ஒப்பிட்டுப் பேசும் மரபினைக் கவிஞர் எடுத்துக் கூறுகிறார்.

## செல்லப் பெயர்களும் - காரணப் பெயர்களும்

கிராமங்களில் வாழும் மனிதர்கள் தங்கள் குழந்தைகளுக்கு வைக்கும் பெயரை விட்டுவிட்டு, அதற்குப் பதிலாக வேறுபெயர்களை வைத்து அழைப்பதும் உண்டு. சில குழந்தைகளுக்குச் சிறு வயதில் என்ன பெயர் வைக்கப்பட்டது என்பதே மறந்து போகும் அளவிற்கு மாற்றுப் பெயர் நிலைத்து விடுவதும் உண்டு. இன்னும் சில பேர்களுக்கு குழந்தையில் பெயர் வைக்காமல், கிராம மக்கள் வைக்கும் செல்லப் பெயர்களே, அவர்களின் நிரந்தரப் பெயர்களாக நிலைத்துவிடுவதும் உண்டு. இதனை கள்ளிக்காட்டு இதிகாச நாவலில்

மாடுமாத்தி, சொட்டையன் (ப.22)

கொறண்டி (ப.49)

கூழ்மாயி (ப.41)

சூத்தப் பல்லன் (ப.83)

மோழையன் (ப.41)

ஊளமூக்கி (ப.82)

மாதாரி தொத்தன் (ப.101)

கொறண்டி பனமரத்தான் (ப.130)

கல்லு முழுங்கி (ப.205)

போன்ற பெயர்களை இடம்பெறச் செய்கிறார். அதோடு சில காரணப் பெயர்களையும் கிராமத்தார் வைப்பதுண்டு. கிராமப்புறத்தில் வாழும் மனிதர்கள் தனி மனிதர்களை அடையாளம் காட்டுவதற்குப் புனைபெயர்களையோ அல்லது பட்டப் பெயர்களையோ அல்லது அவர்களின் உருவத் தோற்றத்தினை வைத்தோ அல்லது அந்த மனிதர்கள் செய்யும் தொழில்களை வைத்தோ பெயர்களை வைப்பதுண்டு. அந்தப் பட்டப் பெயர்களைக் கவிஞர் தன்னுடைய படைப்புகளில் பயன்படுத்துகிறார்.

‘‘காசு பெருத்தவளே

காரவீட்டுக் கருப்பாயி’’ (பெய்யெனப் பெய்யும் மழை, ப.23)

‘‘மழபாடி மாணிக்கம் (மேலது, ப.225)

‘‘புலிக்குட்டி பூபதி (ஒரு போர்களமும் இரண்டு பூக்களும். ப.178)

போன்ற பெயர்களைத் தன் படைப்பின் மூலம் பதிவு செய்த கவிஞர் கள்ளிக்காட்டு இதிகாச நாவலில்,

‘‘அந்த ஊர்லயே சைக்கிள் வச்சிருக்கிற ஒரேஆளுங்கிறதானல சன்னாசித் தேவர்ங்கிற அவருபேரு ‘சைக்கிள் தேவர்ன்னே ஆகிப்போச்சு’’[65]

என்றும்,

‘‘யப்பா செவத்தவீரா! காடுகர இருந்தாத்தான வெளையும்! ஏலே! மாடு கண்டு இருந்தாத்தாண்டா தண்ணி குடிக்கும்? ஏலே! பித்துக்காலு பெருமாளு!’’[66]

என்றும் தொழிலின் அடிப்படையில், பொருள்களின் அடிப்படையில் வழங்கும் பெயரினை அப்படியே பயன்படுத்தி படைப்பின் நோக்கத்தினையும், படைப்பாளிகளின் செயல்களோடு இரண்டறக் கலக்கச் செய்கிறார் கவிஞர்.

**நகைச்சுவை - நையாண்டி**

ஒரு சமுதாயத்தின் பண்பாட்டை வெளிப்படுத்தும் மூலங்களில் நகைச்சுவையும் ஒன்று. நகைச்சுவை உணர்வு மனிதனுக்கு மட்டுமே இறைவன் அளித்த கொடையாகும். மனித சமூகத்தின் மகிழ்ச்சி அவனின் நகைப்பில் வெளிப்படுகின்றது. தன் மனதளவில் சிரிப்பதும், பிறரைச் சிரிக்கவைப்பதும் எளிதான காரியங்கள் அல்ல. மனிதர்களின் மகிழ்ச்சி அவனது நகைப்பின் மூலம் வெளிப்படும். கவிராஜன் கதையில் நோய்கள் தாக்கியிருக்கும் ஏழைக் குழந்தைகளுக்குப் பெயர் வைப்பதை,

'வியாதிகளின் குழந்தைகளை
ஆரோக்கியசாமி என்றா
அழைப்பது''[67]

என்று நகைச்சுவை உணர்வோடு பதிவு செய்கிறார் கவிஞர். கிராமங்களில் காணப்படும் வழக்கங்களில் பிறரை நையாண்டி செய்வதும் ஒன்று. மாமன், மச்சான் உறவு முறை உள்ளவர்களையும், நெருங்கிய நண்பர்களையும் நையாண்டி செய்வர்.

''வாரும் விளக்கெண்ணெய் வாள்!
இன்னும் பத்து வருசம்......
சுயராச்சிய ஜோதி தெரிந்துவிடும்!!
வாடகைக்கு காசோலை தருவேன்!
அரசின் கஜானாவில் வாங்கிக் கொள்ளும்''.[68]

நையாண்டி செய்வதில் பிறருடைய மனம் புண்படாது பார்த்துக் கொள்ளுதல் கிராம மக்களின் வாழ்வியல் நெறியாகும். இதனை,

“உங்கள்
வார்த்தைகளில் வீசும்
வட்டார வாசனை
நுகர வந்தேன்”[69] என்றும்
“உங்கள்
கிண்டலில் இருக்கும்
மண்ணின் மணம்

எப்போதும் பிடிக்கும்
எனக்கு”[70]

என்றும் கவிதையில் சுட்டிக் காட்டுகிறார் கவிஞர்.

## பொருளியல் சிந்தனை

இயற்கை மனித சமூகத்திற்கு அளித்த ஒரே உற்பத்தி இடமான நிலத்தில் உழைப்பு என்ற மூலதனத்தை முதலீடு செய்து, விவசாயம் சார்பான தொழிலைப் பெருக்கித் தங்களின் வாழ்க்கைத் தேவையை ஓரளவு பூர்த்தி செய்தனர். அதிலும் நெருக்கடிகள் ஏற்பட்டால், விவசாயத் தொழிலோடு தொடர்புடைய கால்நடை மேய்த்தல், எரு தயாரித்தல், புல் அறுத்தல், வயல்வெளிகளில் கிடை போடுதல் போன்ற துணைத் தொழில்களைச் செய்து தங்களின் பொருளாதாரத் தேவையினை ஓரளவு பூர்த்தி செய்து வந்துள்ளதையும் கவிஞர் தனது படைப்புகளில் எடுத்துக் கூறுகிறார். கிராமியப் பொருளாதாரத்தில் வாழ்க்கைத் தேவைக்காக மனிதர்கள் படும் துன்பங்களையும் பல இடங்களில் பதிவு செய்துள்ளதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இந்தியப் பொருளாதாரம் வேளாண்மையும் அதனைச் சார்ந்த கைத்தொழில்களையும் சார்ந்தே அமைந்துள்ளது. “பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் இந்தியப் பொருளாதாரம் என்பது இந்தியக் கிராமப் பொருளாதாரமாக இருந்தது”[71] இந்தியாவின் முதன்மைத் தொழிலாக வேளாண்மை இருந்தது. பெரும்பாலான மக்கள் உழவுத் தொழில் செய்தனர். உழவுத் தொழிலே கிராம மக்களின் வாழ்வாதாரத் தொழிலாக விளங்குகிறது.

## பொருளீட்டும் வயது

வாழ்க்கை மேம்பாட்டிற்குப் பொருளாதாரம் மிகவும் அவசியமான ஒன்று. அதனால் தான் வள்ளுவர்,

“அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு”[72]

என்றார். அதனால் தான் பண்டைய தமிழன் திரைகடல் ஓடியும் திரவியம் தேடினான். தாளாற்றித் தந்தப் பொருளை வேளாண்மை செய்து வாழ வேண்டும் என்பார் வள்ளுவர். மனித வாழ்க்கைக்குப் பொருள் அவசியமான ஒன்று. அந்தப் பொருளை ஈட்டும் வயதாக கவிஞர்

“நாற்பது வரை
பணத்தை நீ
தேட வேண்டும்
நாற்பதின் பின்
பணம் உன்னைத்
தேட வேண்டும்”[73]

என்று வரையறை செய்கிறார். ஆனால் கிராமங்களிலோ வாழ்வின் கடைசி மூச்சு இருக்கும் வரை பொருள் தேடி அலைவதையும், துன்பப்பட்டுக்

கொண்டிருப்பதையும் தன்னுடைய பல்வேறு படைப்புகளில் பதிவு செய்துள்ளார் கவிஞர் வைரமுத்து.

## சந்தைப்படுத்துதல்

கிராமப்புற மக்கள் வணிகத்தின் பொருட்டு, தங்களின் பூமியில் விளைந்த பொருட்களை விற்கவும், வியாபாரத்தின் நிமித்தம் பொருள்களை வாங்கவும் செல்லும் இடத்தினை ''சந்தை'' என்று அழைப்பது வழக்கம். இதனைத் தினசரி சந்தை, வாரச் சந்தை என்றும் அழைப்பர். கிராமப்புற ஊர்களில் விளையும் எல்லாப் பொருட்களும் சந்தைக்கு விற்பனைக்கு வரும். குக்கிராமங்களிலிருந்து மக்கள் சந்தைக்கு வந்து பொருட்களை வாங்கிச் செல்வது நடைமுறையில் இன்றும் இருந்து வருகிறது. பொதுவாக 'சந்தை' கூடுமிடம் என்று தனியாக இடம் ஒதுக்கி வைத்திருப்பர். ஊருக்கு வெளியே பெரிய மரத்தின் கீழோ அல்லது வெளியேயுள்ள புல்வெளிகளிலோ சந்தை கூடும். கிராமப்புற மக்களின் பொருளாதாரத் தேவைகளும், பொருளாதார மேம்பாடும் இந்த சந்தையை மையமாக வைத்தே இருக்கும். சுற்றியிருக்கும் கிராமங்களில் ஒரே நாளில் 'சந்தை' நடைபெறாது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கிராமங்களில் சந்தை நடைபெறும்.

கருவாச்சி காவியத்தில் கருவாச்சியின் மகன் அழகு சிங்கத்திடம் காசு கொடுத்து சந்தைக்குப் போகச் சொல்லும் திம்சு,

''பட்டிதொட்டியெல்லாம் போ. பருத்தி, கடல, தக்காளி, கெழங்கு வாங்கு. சந்தை பெருத்த தேசமடா மகனே கெழக்குச்சீமை. திங்கக் கிழமை தும்மக்குண்டுச் சந்தை – செவ்வாக்கிழமை பெருங்காம நல்லூர்ச் சந்தை

– புதங்கிழமை உசிலம்பட்டிச் சந்தை – வியாழக்கிழமை வாலாந்தூர்ச் சந்தை – வெள்ளிக் கிழமை விக்கிர மங்கலம் சந்தை – அஞ்சுநாள் சந்தையிலயே அள்ளிக் குமிச்சுப்புடு காசை''[74]

என்று கூறுவதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

சந்தையில் பொருள்களை விற்று அதன் மூலம் பொருளாதார வசதியினைப் பெற அறிவுறுத்துகிறாள். கிராம மக்கள் தங்களின் நிலத்தில் விளைந்த விளைபொருள்களைச் சந்தைகளில் கொண்டு வந்து விற்பது இன்றும் கிராமங்களில் நடைமுறையில் இருக்கும் வழக்கமாகும்.

## கால்நடைகள் மேய்த்தல்

கிராமப்புறங்களில் ஏழைகள், விவசாயிகள் தங்களின் குடும்ப பொருளாதாரத் தேவைகளுக்காகக் கால்நடைகளை மேய்த்தல், மிகப் பழமையான காலம் முதல் இன்று வரை தொடர்கின்றது. விவசாயக் குடும்பங்களில் உள்ள சிறுவர்களும் பள்ளி விடுமுறை நாட்களிலும், ஓய்வு நேரங்களிலும் கால்நடைகளை மேய்ப்பர் என்பதை கவிஞர் ''நான் மாடு மேய்த்திருக்கிறேன்'' என்ற தலைப்பில் தன் குடும்பத் தொழிலான விவசாயத்தையும், தான் சிறுவயதில் கால்நடைகளை மேய்த்ததையும் குறிப்பிட்டுள்ளார்.

''வைகை நீர்த் தேக்கத்தின்
வட புலத்தில் .....
ஓணான்களின் ஜென்ம பூமியான
கள்ளிக் காடுகளில்
இலந்தையும் நெருஞ்சியும்
இந்திய ஜனத் தொகையாய்

அடர்ந்திருக்கும் வனாந்திரத்தில்
கால்சட்டை கிழிக்கும்
காற்றின் வெடவெடப்பில்
நான் மாடு மேய்த்திருக்கிறேன்''[75]

என்கிறார். கவிஞர் தன்னுடைய இளமைப் பருவத்தில் வீட்டிலுள்ள பெரியவர்கள், கல்வி வாழ்க்கைக்கான பசியைத்தீர்க்கவில்லை என்றால், உழைப்பாவது பசியினைப் போக்க வேண்டும் என்ற நோக்கில், ''என் கையில் மண்வெட்டி திணிக்கப்பட்டது. கலப்பையின் மேழியில் என் கைகள் கட்டாயமாகக் கட்டப்பட்டன. அவ்வப்போது மாடுமேய்க்கக் கோரப்பட்டேன்''[76] என்று தனது சுயசரிதையில் குறிப்பிடுகிறார் கவிஞர்.

## கால்நடை வளர்ப்பு

கிராமப்புற மக்களின் பொருளாதாரம் பெரும்பாலும் விவசாயத்தையும், கால்நடை வளர்ப்பினையுமே அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. கால்நடையினை வளர்த்து, அதன் மூலம் சமூகப் பொருளாதார முன்னேற்றம் அடைவது கிராமப்புற மக்களின் முக்கியத் தொழிலாகும். கால்நடை வளர்ப்பு என்பது தமிழகத்திலுள்ள சிறு மற்றும் குறுவிவசாயிகள், நிலமற்ற ஏழைகள் மற்றும் நடுத்தர குடும்பங்களின் முக்கிய வாழ்வாதாரமாக விளங்குகிறது. இந்தியாவின் சமூகப் பொருளாதாரத்தில் கால்நடைகள் மிக முக்கியப் பங்கு வகிக்கின்றன. இதனை நன்கு உணர்ந்த கவிஞர்,

''ஒரு மாடு குடும்பம் காக்கும்
ஒன்பது மாடு குலங்காக்கும்''[77]

என்கிறார். கால்நடைகளை வளர்த்து, அவற்றின் மூலம் கிடைக்கும் பொருளாதாரத்தின் பயன் கிராமப்புறங்களில் உள்ள அனைத்துத் தரப்பு மக்களையும் சென்றடையும்.

மாடுகளைத் தேர்வு செய்வதில் பெரும்பாலும் தோற்றத்தினை அடிப்படையாகக் கொண்டு தேர்வு செய்யப்படும் முறையே பரவலாகக் கால்நடை வளர்ப்போரால் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. இதில் மாட்டின் பல்வேறு பண்புகளும் கணக்கில் கொள்ளப்படும். இத்தகைய பாங்குகளில் ஒன்று மாட்டை நடக்க வைத்து எலும்பு முறிவு, எலும்பு வளைவு, முட்டி இடித்தல், சுளுக்கு, தண்டுவாதம் போன்ற பிற ஊனங்களும் இன்றி நலமாகவும், செழுமையாகவும் உள்ளதா என அறிந்து தேர்வு செய்வர்.

‘‘மாட்டை நடையில் பார்
ஆட்டை கொடையில் பார்’’[78]

என்பதும், ‘‘கால்நடை பொருளாதாரத்தின் பயன் கிராமப்புறங்களில் எல்லாத் தரப்பினரையும் பல்வேறு நிலைகளில் சென்றடைந்துள்ளது’’[79] என்பதையும் இல.செ.கந்தசாமி பதிவு செய்கிறார்.

கால்நடை வளர்ப்பு சிறு மற்றும் குறு விவசாயிகள், நிலமற்ற வேளாண்மைத் தொழிலாளர்களின் வாழ்வாதாரமாக விளங்குகிறது. ‘‘இந்தியாவின் சமூகப் பொருளாதாரத்தில் கால்நடைகள் மிகமுக்கியப் பங்கு வகிக்கின்றன’’[80] இதனை நன்கு உணர்ந்த கவிஞர்,

‘‘ஞானிகளே!
ஆய கலைகள்
அறுபத்து நான்கா?
அறுபத்து ஐந்து

மாடு மேய்த்தல்
யோகம் மொத்தம் எட்டா?
ஒன்பதாம் யோகம்
மாடு மேய்த்தல்''[81]

என்கிறார். பொதுவாக எதற்கும் உதவாதவனை ''இவன் மாடு மேய்க்கத்தான் லாயக்கு'' என்று சொல்வது வழக்கம். ஆனால் மாடு மேய்ப்பது ஒன்றும் இழிவான தொழிலும் அல்ல; சாதாரணத் தொழிலும் அல்ல. இந்த உலகத்திற்கு நேர்வழி காட்ட வந்த இறைவனுடைய தூதர்கள், தீர்க்கதரிசிகள் எல்லோருமே ஆடு மாடு மேய்த்தவர்களாகவே இருந்திருக்கிறார்கள். அதனால் தான் கவிஞர்,

''மாடு மேய்த்தல் கல்வி
மாடு மேய்த்தல் தவம்
மாடு மேய்த்தல் ஞானம்''[82]

எனக் கூறியுள்ளார். மாடு மேய்க்கும் தொழில் செய்வதால் அகந்தை போய்விடும். ஞானம் பெறுவதற்குத் தடையாக இருக்கும் திரை நீங்கிவிடும். இதனை அடுத்து கால்நடைகளைக் கொடிய விலங்குகளிலிருந்தும், மற்ற ஆபத்துக்களிலிருந்தும் காப்பாற்ற அவர்கள் எப்போதும் விழிப்போடு இருக்க வேண்டியிருக்கிறது. விழிப்புணர்வு ஞானத்தின் வாசல்.

நான் மாடு மேய்த்திருக்கிறேன் எனக் கூறி கால்நடைகளின் வளர்ப்புக் குறித்தும், விவசாயக் குடும்பத்தின் பொருளாதாரத்திற்குக் கால்நடைகள் பெரிதும் துணையாகும் என்பதைக் கவிஞர், பல கவிதைகளில் எடுத்துக் காட்டியுள்ளார்.

மாடுகளை மேய்த்த இடத்தில்தான், இளமைக் காலத்தில் கவிதை நூல்களைப் படித்ததாகவும், கவிதையாத்த இடமாகவும் அந்த இடம் திகழ்ந்திருக்கிறது என்கிறார்.

## மாடுவிற்பனைத் தொழில்

கிராமங்களில் ஆடு மாடுகள் வாங்கி விற்பனை செய்பவர்கள் அதிகம் உண்டு. இவர்களை மாட்டுத் தரகர்கள் என்றும் புரோக்கர்கள் என்றும் இன்றும் அழைப்பதுண்டு. மாடு வாங்கச் செல்வோர், மாட்டை வாங்குவதற்குரிய ஒரு புதிய சூட்சமத்தைக் கவிஞர் சொல்லுகிறார்.

"மாடு வாங்க வேண்டுமா?
கண்டதும்
வலக்கால் தூக்கித் தலை சொறிந்தால்
வாங்கு"[83]

என்று சொல்வதோடு எருது, காளை, பசு என மாட்டின் வகையினை முறையாக எடுத்துச் சொல்லி ஒவ்வொரு விலங்கினையும் ஒவ்வொரு செயலுக்குப் பின் வாங்கச் சொல்கிறார். பசுவினை வாங்க வேண்டுமென்றால்,

"கண்டதும்
சாணமிட்டால் பசுவைக் கொள்"[84]

எனத் தன்னுடைய கிராமத்துப் பட்டறிவை விளக்குகிறார். எருதினை வாங்குவதற்கு,

"நீரிட்டால் எருதுகொள்
நெற்றிச்சுழி ஆகாது,
காளைக்கு நன்று
செவலை,
பசுவுக்கு நன்று
மயிலை"[85]

என்று மாடுகள் வாங்கும் தன்மையினை எடுத்துச் சொல்வதோடு, மாடுகள் கன்றுகளை ஈன்றெடுக்கும் சுபதினத்தையும் குறிப்பிட்டுச் சொல்கிறார்.

“ஈனும் சுபதினம்
எருமைக்கு வெள்ளி
பசுவுக்கு வியாழன்”[86]

என்பதோடு, மாட்டை விலைக்கு வாங்கும் மனிதர்கள் மாட்டின் வயதினை அறிந்து கொள்ளப் பல்பிடித்துப் பார்க்கும் பழக்கத்தினையும் கூறுகிறார்.

“மாட்டுக்கு
இடப்பக்கம் இரை வயிறு
வலப்பக்கம் நீர் வயிறு
நடுப்பல்
வயது சொல்லும்”[87]

என்று மாட்டு வணிகத்தின் அனைத்துத் தொழில் நுட்பங்களையும் அழகுற எடுத்துக் கூறுகிறார்.

## எரு தயாரித்து விற்றல்

கால்நடையின் மூலம் பெறப்படும் எந்தப் பொருளும் வீணாவதில்லை. கால்நடைகளின் பால், தாய் இல்லாத குழந்தைகளுக்கும், பாலில்லாத தாய்மார்களின் குழந்தைக்குத் தாய்ப்பாலாகவும், தோல் மத்தளம், உடுக்கு போன்ற பொருள்கள் தயாரிக்கவும், கோமியம் மருந்துப் பொருளாகவும், சாணம் எரிபொருளாகவும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. கிராமங்களில் இன்றும் மிக முக்கிய எரிபொருளாக மாட்டுச் சாணம் பயன்பட்டு வருகிறது.

கருவாச்சி காவியத்தில் கொண்ணவாயனுக்கும், அய்யக்காவிற்குமான காதலைத் தொடங்கி வைத்தது இந்த மாட்டுச் சாணிதான். மாட்டுச் சாணியையும், எருமைச் சாணியையும் இரண்டறக் கலந்து புளியமரத்திலோ, சுவற்றிலோ அடிச்சு ஒரு வாரத்திற்குள் எருவாக தயாரித்து விடுவதையும், அதை விற்று வாழ்க்கை நடத்துவதையும் பதிவு செய்கிறார் கவிஞர் வைரமுத்து,

“இப்பிடிச் சேந்த கூட்டுக்கிளிக ரெண்டும் கூட்டு ஏவாரம் பண்ணப் பழகிருச்சுக; அதாவது சாணிதட்டி விக்கிதுக ................. உற்பத்தி அய்யக்கா, ஏவாரம் கொண்ணவாயன்”.[88] இந்த மாட்டு எருவை கிராமத்தில் ஆப்பம் சுட்டுவிற்கும் ராசம்மாவிற்கும், தோட்டிக்கும் விற்று அதன் மூலம் வருமானம் ஈட்டியதையும், உணவுப் பொருள்கள் வாங்கித் தின்றதையும் எடுத்துக் கூறுகிறார்.

## புல் அறுத்தல்

கிராமங்களில் ஆடு, மாடுகளுக்குத் தேவையான புல்லினை அறுத்து, அதனைச் சந்தைகளில் விற்பனை செய்து வாழ்க்கையை நடத்துவதும் உண்டு; அல்லது தங்கள் இல்லங்களில் உள்ள கால்நடைகளுக்குப் புல்லறுப்பதும் உண்டு. அப்படி வயல்வெளிகளில், காடுகளில், கரடுகளில் புல்லறுக்கப் போவதும், எப்படிப் புல்லினை அறுக்க வேண்டும் என்பதனையும் கவிஞர் கூறுகிறார். கள்ளிக்காட்டு இதிகாசத்தில் புல்லறுக்கும் தன்மையினைக் கூறும் கவிஞர்,

> “உட்கார்ந்தோ – நின்றோ – ஓடிக் கொண்டோ – அறுத்தால் புல் சேராது; மண்டியிட்டு அறுக்க வேண்டும். முழங்கால் நிலம்பதிய மண்டியிட்டு நகர்ந்தபடி இடக்கை புல்லின் குடுமிபிடிக்க வலக்கை கொண்ட ‘வாங்கருவா தூர்வாங்க பரபரவென்று பாம்பாய் விரையத் தெரிந்தவன் எவனோ அவன்தான் கஞ்சிப் பொழுதுக்குள் வீடுவந்து சேருவான் கட்டோடு”[89]

என்கிறார். இங்ஙனம் அறுத்து வரும் புல்கட்டுகளை சந்தைகளில் விற்பனை செய்து வாழ்க்கையினை நடத்தும் கிராமத்து மக்களின் பொருளாதாரத்தினைத் தன் படைப்புகளில் பதிவு செய்துள்ளார்.

## அடகு வைத்தல்

வறுமையின் கோரப்பிடியில் சிக்கித் திணறும் கிராம மக்கள் விவசாயத் தொழில் நடைபெறும் போதோ அல்லது வீட்டு விசேச நிகழ்ச்சிகளுக்கோ பணம் இல்லாத போது வீட்டிலுள்ள பயன்பாட்டுப் பொருள்களையோ, அல்லது இடத்தின் பத்திரத்தையோ, அல்லது தங்க நகையினையோ அடகு வைத்துப் பொருளாதாரத் தேவையைப் பூர்த்தி செய்வது வழக்கம். அந்தப் பழக்கவழக்கத்தினையும் கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் வண்டிநாயக்கர் கதாபாத்திரம் மூலம் எடுத்துக் கூறுகிறார் கவிஞர். பேய்த்தேவர் நாச்சார்வரத்திலிருந்த வண்டி நாயக்கரிடம்,

> ‘‘தயங்கித் தயங்கித் தலையைச் சொறிஞ்சு, தலையைத் தடவித் திக்கித் திக்கிப் பேச ஆரம்பிச்சார் பேய்த் தேவர். ‘சின்னுப் பய புத்திமாறிப் பொண்டாட்டியோட பொழைக்கிறேங்கறான். ஒரு ஆயிர ரூவா தேவைப்படுது. ஓங்ககிட்ட இருக்கிற அந்தப் பழைய பத்திரத்து மேலே குடுத்தீங்கன்னா…. அம்புட்டுத்தான என்பது போல ஒரு பார்வை பார்த்தார் நாயக்கர். தலையணைக்கு நடுவுல கிடந்த தன் தலையைக் கொஞ்சம் தூக்கித் தள்ளி வைக்கச் சொன்னார். ‘‘தலகாணிக்குக் கீழே காசு இருக்குது. எண்ணி ஆயிரம் எடுத்துக்குங்க’’[90]

என்ற உரையாடலிருந்து சொத்துப் பத்திரத்தினை அடகு வைத்துப் பணம் வாங்கும் முறையினைக் குறிப்பிட்டுச் செல்கிறார். மேலும் தங்கத்தினை அடகு வைக்கும் முறையினையும் பேய்த் தேவருக்கும், அவர் மகள் மின்னலுக்கும் நடந்த உரையாடல் மூலம் விளக்குகிறார்.

'யம்மா மின்னலு! அப்பன் ஒண்ணு கேப்பேன் தப்பா நினைக்கமாட்டியே''

''கேளுப்பே''

'கெணத்துல பாறைவிழுந்து போச்சு வேட்டு வைக்காம வெட்ட முடியாது போலிருக்கு'

'தன் மடியில உக்காந்திருந்த பேத்தியத் தலயத் தடவிக்கிட்டே பேசுனாரு பேய்த்தேவர்.

'அதுக்கு என்னிய என்ன பண்ணச் சொல்ற?'

நீ ஒண்ணும் பண்ண வேணாம். ஒம் பிள்ள காதுல கெடக்குற கடுக்கானக் கழத்திக்குடுத்தீன்னா கெணத்துல தண்ணி உண்டாக்கிருவேன் தண்ணி வந்திட்டா ரெண்டுக்கு நாளா செஞ்சு போட்டுருவேன்''[91] என்றார். அரசியல் கட்சியில் தொண்டராக இருப்பவர்கள் கட்சியின் பெயரால் பொருள்களை அடகு வைத்து, சீரழியும் நிலையினை 'ரத்ததானம்' என்ற படைப்பில்,

''அண்டா பாத்திரங்கள்
அத்தனையும் அடகு வைத்தீர்!
இடுப்பிலுள்ள சேலை மட்டும்
எப்படியோ விட்டு வைத்தீர்''[92]

என்று குறிப்பிட்டுள்ளார். கிராம மக்கள் தங்களின் பொருளாதாரத் தேவைகளுக்காகக் கடன் வாங்குவதும், வட்டிக்கு வாங்குவதும், பொருட்களையும், சொத்துக்களையும் அடகு வைப்பதும் இன்றும் தொடர்ந்து கொண்டிருக்கும் அவல நிலையாகும்.

தமிழ்ச் சமூகத்தில் திருமணமாகி கணவன் வீடு செல்லும் புதுப் பெண்ணிற்கு சீதனமாக ஏராளமான உலோகப் பொருள்கள் வழங்குவதுண்டு. வாழ்க்கையில் வறுமை தாண்டவமாடும் போதோ, அவசரத் தேவைகள் ஏற்படும் போதோ அந்தப் பொருள்களை அடகு வைத்தோ, அல்லது விற்றோ தங்களின் பொருளாதாரத் தேவையினைப் பூர்த்தி செய்து கொள்வதுண்டு. தமிழுக்கும் நிறமுண்டு என்ற நூலில் ‘கூடு’ என்ற கவிதையில் தான் கஷ்டப்பட்டு கட்டிய வீட்டைப் பற்றி ஏழைப் பெண் ஒருத்தி முறையிடுவதாக அமைந்த கவிதையில்,

> “முன்சுவரு எழுப்பத்தான்
> மூக்குத்தி அடகுவச்சேன்
> பித்தாளக் கொடம் வித்துப்
> பின் சுவரு கட்டி வச்சேன்”[93]

என்று பொருளாதாரத் தேவையைப் பூர்த்தி செய்யப் பொருள்களை அடகு வைக்கும் வறுமைச் சூழலைப் பதிவு செய்கிறார் கவிஞர் வைரமுத்து.

## மீன்பிடித் தொழில்

மனிதர்கள் அவரவர் வாழும் இடத்தின் சூழல்களுக்கு ஏற்பப் பல்வேறு தொழில் செய்து பிழைக்கின்றனர். சங்க காலத்திலிருந்தே நெய்தல் நிலத்தில் மீன்பிடித் தொழில் நடைபெற்று வருவதைச் சங்க இலக்கியங்கள் பல சுட்டிச் செல்கின்றன. மீனவர்கள் கடல் பகுதியில் மீன்பிடித் தொழில் செய்து வாழ்கின்றனர். அவர்கள் கடும் உழைப்பை மட்டும் நம்பி வாழ்பவர்கள்.

அவர்களின் வாழ்வு வறுமை நிறைந்த வாழ்க்கையாகவும், வெறுமையான வாழ்க்கையாகவும் இருக்கிறது. உழைப்பின் முழுப் பலனையும் அவர்கள் அடைவதில்லை. மீனவர்களுக்குக் கடல் தொட்டிலாகவும், சில சமயங்களில் கல்லறையாகவும் இருக்கிறது என்று சொல்லும் கவிஞர், மொத்தமாய் உப்புக் காற்றில் துருப்பிடித்த வாழ்க்கையில், துருப்பிடிக்காதிருப்பது அவர்களின் எலும்பு மட்டும் தான். அந்தக் கடினமான மீன் பிடிக்கும் தொழில் நுட்பத்தைத் தண்ணீர் தேசத்தில் எடுத்துக் கூறுகிறார் கவிஞர்

> ‘‘உயிரையே விழுங்க
> அலைகள் பொங்கும் - அங்கே
>
> அஞ்சாமல் உழைத்தால் தான்
> அடுப்பிலே உலை பொங்கும்’’[94]

என்ற அறிவுமணியின் கருத்திற்கு அரண் சேர்க்கும் வண்ணம் கடலின் ஆழமான பகுதியில் தான் மீன்கள் கிடைக்கும் என்பதை அறிந்த மீனவர்கள்,

> ........ இந்த
>
> இடத்தின் ஆழம் அறி. இரும்புக் குண்டை
> நுனியில் கட்டிய பிளாஸ்டிக் கயிறு எடு
> வீசு கடலில். விடு! விடு! போகட்டும்
> ..........................................................................
> ..........................................................................
> வலையோடு சேர்த்துக் கடலோடு எங்கள்
> இரும்பு வட்டம் இறங்கும்’’[95]

என்கிறார். மிகப் பழமையான காலத்தில் கடலில் ஆழம் கண்டு பிடிக்கும் முறை விநோதமாக இருந்தது. ஒரு கனமான ஈயக் குண்டை நீளக் கயிற்றில் கட்டித் தொங்க விடுவார்கள். கயிற்றில் அளவுகள் குறிக்கப்பட்டிருக்கும். ஈயக்குண்டு தரையைத் தொட்டதும் கடலின் ஆழத்தைக் கண்டு பிடித்துச் சொல்வார்கள்,

கடற்கரை கிராமங்களில் உள்ளவர்கள். கடலின் ஆழத்தைக் கண்டு மீன் பிடித்துத் தங்களின் பொருளாதாரத் தேவையைப் பூர்த்தி செய்கிறார்கள்.

## கிராமங்களில் பொதுத் தொழில்

கிராமங்களில் உள்ள மனிதர்களை அழகு நிறைந்தவர்களாகக் காட்டுபவர்கள் இரண்டு பேர் 1. சவரத் தொழிலாளி 2. சலவைத் தொழிலாளி. இவர்களைக் கிராமத்தின் பொதுத் தொழிலாளியாகக் கருதுவதும் உண்டு.

> "ஒரு மனுசன மனுசனாக் காமிக்கிறது ரெண்டே ரெண்டு பேருதான். ஒருத்தர் சவரத் தொழிலாளி. இன்னொருத்தர் சலவைத் தொழிலாளி. இந்த ரெண்டு பேரும் மட்டும் இல்லாட்டி மனுசப் பொழப்பு நாறிப் போயிரும் நாறி. தாடியிலயும், துணியிலயும் சீலப்பேன் புடிச்சி ஆதிமனுசனுக்கு அடுத்த மனுசன் நாந்தான்னு கெட்டழிஞ்சுப் போயிருக்கும் மனுச சாதி"[96]

என்கிறார் கவிஞர் வைரமுத்து.

## சவரத் தொழில்

கள்ளிக் காட்டில் சவரத் தொழிலுக்குப் பெயர் பெற்றவன் வெள்ளையன். வெள்ளையனுக்குத் தலைவணங்காத ஆளே கிடையாது. எந்த மண்டைக்கு எந்த வெட்டு, எந்த மூஞ்சிக்கு எந்த மீசைங்கிறதயெல்லாம் வெள்ளையங்கிட்ட விட்டுறணும். தலையக் குடுத்த பிறகு தலையிடக் கூடாது. அந்த அளவுக்கு தொழிலில் சுத்தமாகச் செயல்படுபவன் வெள்ளையன். பேய்த் தேவருக்கு மீசையை ஒதுக்குவதற்குத் தயாராக தன் தகரப் பெட்டியிலிருந்து தன் ஆயுத சாலை திறந்தார் வெள்ளையன் "அவருக்குக் கலை - தொழில் - சம்பாத்தியம் - சாப்பாடு – தெய்வம் - வேலைக்காரன் - இறந்த காலம் - நிகழ்காலம் -

எதிர்காலம் எல்லாமே அந்தத் தகரப் பெட்டிதான்''[97] என்கிறார். ஊரிலுள்ள சாலிமரத்துக்குக் கீழ் பொது இடத்தில் உட்கார்ந்து தொழில் செய்யறது – கூப்பிட்டுவிட்டா வீடுகளுக்கேச் சென்று முடிவெட்டிட்டு வாரது - இந்த இரண்டையும் தவிர தன் வீட்டுக்கே வந்து முடிவெட்டிட்டுப் போவது தான் வெள்ளையனுக்கு ரொம்பப் புடிக்கும். தன் தொழிலுக்கு அது தான் மதிப்பு என நம்புபவர். இவர்கள் வீட்டில் சமைப்பது கிடையாது. கிராமத்து மக்கள் நாளும் அளிக்கும் உணவினைப் பெற்று அவர்களின் குடும்ப உறுப்பினர்கள் உண்ணுதல் வேண்டும். வீட்டிற்கு வீடு வந்து அவர்களே உணவினை வாங்கிச் செல்வர். இவர்களுக்கு வருடக் கூலிதான். வருடக் கூலி என்பது பணமல்ல. கிராமத்து மக்கள் தங்களின் தோட்டங்களில் விளையும் நெல், கேழ்வரகு, கம்பு போன்ற தானியங்கள் தான் இவர்களின் கூலிப் பொருள்கள். இதை வைத்துக் கொண்டு தான் ஆண்டு முழுவதும் உணவு உண்ணுதல் வேண்டும்.

## சலவைத் தொழில்

கிராம மக்களின் அழுக்கான உடைகளைத் துவைத்துச் சுத்தம் செய்பவர்கள் சலவைத் தொழில் செய்பவர்கள். கள்ளிக்காட்டில் ஒரே ஒரு சலவைத் தொழிலாளி தங்கையாதான். மூன்று தலைமுறையாகக் கள்ளிப்பட்டிக்குத் துணி துவைக்கிற குடும்பம். அவன் மாதிரி துணிகளைச் சலவை செய்ய அந்தப் பகுதியில் யாரும் இல்லை. கள்ளிக் காட்டில் பேருக்கு ஏத்த மாதிரி தங்கமான சலவைக்காரர் தங்கையா தான். சாக்கைத் துவைக்கப் போட்டாலும் அவன் கைபட்டால் கண்ணாடிதான். எழுதப் படிக்கத் தெரியாத அவன் ஒரு குடும்பத்துக்கு ஒரு அடையாளம் வைப்பது வழக்கம். செங்கொட்டையை எடுத்து சரீர்ன்று ஊசியைச் சொருகுனா 'கரேர்'ன்னு பால்

வரும். அந்தப் பாலத் தொட்டுத் துணியில ஒரு ஓரத்துல குறிபோட்டான்னா அடுத்த ஜென்மத்துக்கும் அழியாது. அவன் தொழிலில் பயன்படுத்திய குறிகள் பின்வருமாறு:

"i ii # v உ iii ⊥ Ŧ உ T ii ⧺"[98]

தொழிலில் அந்தளவுக்கு உண்மையாகவும், நேர்மையாகவும், எந்த வீட்டுத் துணியும் மாறிவிடக் கூடாது என்ற தனித் தன்மையும் அறிந்து கொள்ள முடிகிறது. இவர்களின் பொருளாதார வாழ்வு காலங்காலமாகவே நலிவடைந்து கொண்டே வருவதைத் தான் கவிஞர் கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில் எடுத்துக் காட்டுகிறார்.

## விவசாயம் தவிர்த்த வேலைகள்

"செய்யும் தொழிலே தெய்வம்" என்ற முதுமொழிக்கு ஏற்ப கிராம மக்கள் விவசாய வேலை கிடைக்காத நாளிலும், மழை பொழிய வேண்டிய நேரத்தில் பொழியாமல் வறட்சி ஏற்படும் பொழுதும் கிராம மக்கள் தன்மானத்திற்கு இழுக்கு வராத எந்த வேலை கிடைத்தாலும், அதனை மகிழ்ச்சியுடன் செய்து, தங்களின் பொருளாதாரத் தேவையினை நிறைவு செய்து கொள்வர். கருவாச்சி காவியத்தில் வறட்சியின் காரணமாக ஊரே சுடுகாடாய்ப் போய்விடும் நேரத்திலும், கருவாச்சியைப் பிழைக்க விடக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் கட்டையன் வகையறாக்களுக்கு மத்தியில் தன் வாழ்க்கைத் தேவைக்காகவும், ஊரிலுள்ள வயது முதிர்ந்தவர்களுக்காகவும், கை, கால் ஊனமுற்ற மாற்றுத் திறனாளிகளுக்காகவும், ஆடு, மாடு, குருவிகளுக்குமாக சேர்ந்து உழைக்கும் கருவாச்சியை, கவிஞர்

“களையெடுத்தா;
கருதறுத்தா;
குழையறுக்கப் போனா;
கரட்டுக்குப் போயி வெறகெடுத்து வித்தா”[99]

எனப் பல்வேறு வேலைகளுக்குச் சென்றாள் எனக் குறிப்பிட்டுள்ளார். அதோடு மறு கருது பொறுக்கியும் தங்களின் வாழ்க்கையை நடத்த துன்பப்பட்ட சூழலைப் பதிவு செய்துள்ளார் கவிஞர் வைரமுத்து.

## பாயாசம் வியாபாரம்

கிராம மக்கள் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு வியாபாரம் செய்வது உண்டு. கோயில் திருவிழாக்களில் பருத்திப் பால் பாயாசம் வைத்துக் கிராம மக்கள் வியாபாரம் இன்றும் செய்வதுண்டு. கருவாச்சியின் ஒவ்வொரு தொழிலாக முடக்கிக் கொண்டு வந்த கட்டையனை எப்படியும் வெற்றி பெற்றுக் காண்பிக்க வேண்டும் என்று எண்ணிய கருவாச்சி, தன் ஆத்தா பெரியமூக்கி செய்து கொடுத்த பருத்திப்பால் பாயாசத்தை செய்துவிற்றுப் பிழைப்பை நடத்தலாம் என முடிவு செய்து பாயாசம் செய்து விற்றாள்.

“ஒரு போணி ஓரணான்னு அவ விக்க ஆரம்பிச்சதும் கஞ்சிப் பொழுதுக்குள்ள காணாமப் போயிருச்சு பாயாசம். பத்தே நாள்ல கருவாச்சி பாயாசத்துக்குக் கிறுக்குப் பிடிச்சுப் போயிருச்சு ஊரு. விடிய்ய பல்லு வெளக்காமப் பாயசம் குடிச்சுப் பழகிருச்சு சொக்கத்தேவன்பட்டி. செலவெல்லாம் போக அவ கையில் நித்தம் நிக்கிது ஒண்ணேமுக்கா”.[100]

இந்த வியாபாரம் மூலம் தினசரி ஒன்றே முக்கால் ரூபாய் இலாபம் ஈட்டியதையும், உலகில் எந்தத் தொழிலும் குறைவான தொழில் இல்லை

என்பதையும், உழைத்து நேர்மையுடன் வாழ வேண்டும் என்பதையும் எடுத்துக் கூறுகிறார்.

## மணல் வாணிகம்

விவசாயம் இன்று அழிவுப் பாதைக்கு சென்று கொண்டிருப்பதற்கு முதன்மைக் காரணம் பூமியிலிருந்து தேவைக்கு அதிகமாக நீரை உறிஞ்சி எடுப்பதும், நதிக்கரையோரங்களை ஆக்கிரமிப்பதும், நதிகளில் இருந்து ஏராளமான மணலினை அள்ளுவதுமே ஆகும். இதனால் நிலத்தடி நீர் அதலபாதாளத்திற்குச் சென்று கொண்டிருப்பதால் மக்கள் விவசாயத்திற்கும், குடிநீருக்கும் துன்பப்பட்டுக் கொண்டு இருக்கின்றனர். இதனை,

''யானை போலிருந்தது அதன்
வால்போல் இளைத்ததுவும்
கரையோர சௌந்தர்யம்
களவாடக் கொடுத்ததும்
ஓலைக் குடிசைக் கிழவியின்
ஒற்றைப் புடவை போலச்
சிறுகச் சிறுகச்
சிதிலப்பட்டதும்
ஆக்கிரமிப்பில் மேனிகுலைந்து
மணலென்ற நரைவிழுந்து
நதி என்ற பேரிழந்து
காலப்போக்கில்
கால்வாயானதும்
இந்த நதிதான்''[101]

என்ற கவிதை படம்பிடித்துக்காட்டுகிறது. நதிக்கரையோரங்கள் அக்கிரமக்காரர்களின் ஆக்கிரமிப்புக்கு உள்ளாகிப் போனதால், நதிக்கரையோரத்தில் இருந்த தாழை மரங்கள் அழிக்கப்பட்டன. ஆக்கிரமிப்பின் காரணமாக நதிகளின் நடுவே ஆங்காங்கே தேமல் போல் நீர்தேங்கி நிற்கின்றது.

அதனால் இன்று தண்ணீர் சென்ற தடம் மட்டுமேயுள்ளது என்று வருத்தப்படும் கவிஞர்,

“புனல்தானம் போனதனால்
மணல் தானம் செய்வதும்
கால்வாயாய் நிறம்மாறி
வாய்க்காலாய் ஆனதுவும்
இந்த நதிதான்”[102]

என்கிறார். நதி நீர்வற்றிப் போனதால் இன்று ஆற்றங்கரையோரங்களில் மணல் திருட்டு நடந்து கொண்டிருப்பது விவசாயத்தை அழிவுப் பாதைக்கு அழைத்துச் சென்று கொண்டிருக்கிறது. ஒரு சிலபேரின் பொருளாதார உயர்விற்காக விவசாயக் கூலிகளின் வாழ்க்கையில் பெரும் இழப்பை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பொருளாதாரச் சூழலையும் பதிவு செய்கிறார் கவிஞர்.

## கிராமியப் பொருளாதாரம்

கிராமங்களில் வாழும் ஏழை மக்கள் தங்களின் வயிற்றுப் பிழைப்பிற்காகவும், பொருளாதார உயர்விற்காகவும் கள்ளிக் காடுகளிலும், காட்டு மேடுகளிலும் சுள்ளி பொறுக்கியும், விறகு வெட்டியுமே வாழ்க்கையை நடத்துகின்றனர். காடுகளில் காய்ந்து போன அல்லது காய்ந்து போன மரங்களின் கிளைகளை வெட்டியெடுத்து வந்து, அதனை விற்று அந்த வருமானத்தில் வாழ்க்கை நடத்தும் கிராமத்து மக்களின் ஏழ்மை நிலையினை,.

“முருக மலைமேல
முள்விறகு நானெடுக்க
பொழப்பு நடக்கணுமே
புறப்பட்டேன் கால்கடுக்க”[103]

என்று விளக்கிச் செல்கிறார். கருவாச்சி காவியத்தில் வயிற்றுப் பிழைப்பிற்காக விறகு பொறுக்கி, அதனை விற்று வாழ்க்கை நடத்தும் வறுமைச் சூழலை,

‘‘கண்ணுல சிக்குன காஞ்ச வெறகெல்லாம் ஒண்ணு சேத்துத் தலையில கட்டிச் சொமந்தாக’’[104] என விளக்கிக் காட்டுகிறார். தண்ணீர் இன்றி வறண்டு போய் காணப்படும் காட்டு வழியாகப் போய் விறகு வெட்டப் போகும் ஏழை மக்களுக்குக் காலில் அணிய செருப்பு இல்லை. பலமைல் தூரம் நடந்து சென்று விறகு வெட்டி வருகிறாள். வெட்டிய விறகினை தலையில் சுமந்து கொண்டு வந்து தெருவில் கூவி விற்றுப் பணம் தேடுகிறாள்.

‘‘கோடை வெய்யில் சுட்டதிலே
கொப்புளந்தான் மெத்தவரும்
கொப்புளத்தக் கற்பழிச்சுக்
குச்சி முள்ளு குத்தவரும்
இண்டம் புதர் இழுக்கும்
எலந்த மரம் கைகிழிக்கும்
பொத்தக் கள்ளிமுள்ளு
பொடவையில நூலெடுக்கும்’’[105]

என விறகு வெட்டிப் பிழைக்கும் ஏழை எளிய பெண்களின் வறுமைநிலையை ‘விறகு’ என்னும் கவிதையில் எடுத்துக் கூறுகிறார். இவ்வளவு துன்பங்களையும், துயரங்களையும் தாண்டி தாங்கள் வெட்டிக் கொண்டு வந்த விறகினைத் தெருவில் விற்பனைக்குக் கொண்டு வரும் போது,

‘‘பச்சை விறகாச்சேன்னு
பாதி விலைக்கு கேட்பாக’’[106]

என்கிறார். இவ்வளவு துன்பங்களுக்கும் மத்தியில் இவள் வீட்டிலோ அடுப்புப் பற்ற வைக்க விறகு கூட இருக்காது என்று கிராமப்புற மக்களின் ஏழ்மை

நிலையினைப் பதிவு செய்கிறார். கிராமங்களில் வாழும் ஏழை மக்களுக்கு ‘விறகு’ ஒரு வாழ்வாதாரப் பொருளாதாரமாக அமைவதை எடுத்துக் கூறுகிறார்.

## பொருளாதார நாணயம்

இந்தியாவின் இன்றையப் பொருளாதாரக் கொள்கை ஏழை எளிய மக்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்வதற்குப் பதிலாக, பணம் படைத்த செல்வந்தர்களின் வாழ்க்கையை உயர்த்துகிறது என்பதை ‘நீ கிளையல்ல கீற்று’ என்ற கவிதையில் நாணயம் குறித்துப் பேசுகிறார்.

“ஓ
காந்தி மகாத்மா
நீ
நல்ல நாணயந்தான்
உன்
பொருளாதாரப் பக்கத்தில்
புள்ளி விழுந்தாலும்
ஆன்மீகப் பக்கத்தில்
பாசி படிந்தாலும்
நீ நல்ல நாணயந்தான்”[107]

என்ற கவிதை இந்தியப் பொருளாதாரத்தின் ஒரு பகுதி புள்ளி விழுந்து காணப்படுவதைக் கூறுகிறது. காந்தியப் பொருளாதாரக் கொள்கைப்படி தொழில் மயமாக்குதலில் மேற்கத்திய நாடுகளைப் பின்பற்றி நம் நாட்டை தொழில் மயமாக்குவதைக் காந்தியடிகள் ஏற்கவில்லை. ‘தேவைக்கு மேல் வைத்திருப்பவன் திருடன்’ என்பது தேசத் தந்தை காந்தியின் கருத்து. இதற்குக் காரணம் இந்தியா உழைப்பாளர்களை அதிகம் கொண்ட நாடு. விவசாய நாடு. அதனால் தொழில்மயமாவது கிராமியத் தொழில் வளத்தை அழித்துவிடும்

என்பதாலேயே காந்தியின் கிராமியப் பொருளாதாரம் புள்ளி விழுந்துள்ளது என்கிறார் கவிஞர்.

## பெண்களும் வேலைக்குச் செல்லுதல்

கிராமங்களில் உள்ள பெண்கள் குடும்பச் சூழ்நிலைகருதி சிறுசிறு வேலைகளைச் செய்வர். வீட்டில் குடும்பப் பணி மற்றும் குடும்ப உறுப்பினர் தேவைகளைக் கவனிக்கும் பணி, இவற்றோடு குடும்ப வறுமைச் சூழலைப் போக்குவதற்கு வேலைக்குச் செல்ல வேண்டிய கட்டாயச் சூழல் திருமணமாவதற்கு முன்னும், பின்னும் ஆண்களுக்கு இணையாகப் பெண்களும் வேலைக்குச் செல்வது பெருமைக்குரிய ஒன்றாகக் கருதப்படும் சூழ்நிலைகளில், கிராமங்களில் வாழும் பெண்கள், உணவு, உடை, உறைவிடம் ஆகிய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றவே வேலைக்குச் செல்கின்றனர்.

> “மண்ணைக் கிண்டும் ஒருத்தனுக்கு வாக்கப்பட்ட வாழ்க்கை கட்டில் உற்பத்தியில் மட்டுமல்லாமல் காட்டில் உற்பத்தியிலும் அவள் வேர்வை விழுந்தாக வேண்டும்”[108]

என்கிறார் கவிஞர். கிராமங்களில் உள்ள பெண்கள் கணவனின் கட்டில் தேவையை மட்டும் இன்றி உழவுக் காட்டிலும் வேலை பார்க்கச் செல்லும் நிலையை கள்ளிக் காட்டு இதிகாசத்தில் பதிவு செய்துள்ளார்.

பேய்த்தேவரின் மகள் செல்லத்தாயின் வேலை செய்யும் திறத்தினைக் கூறும் ஆசிரியர்,

‘மாடு மாதிரி வேலையும் செய்வாள். ஒத்த ஆளாய் பத்துப்படி சோளம் திரிப்பாள்’[109] என்று பதிவு செய்துள்ளார். கிராமத்துப் பெண்கள்

வயல்வேலைக்குச் செல்லுதல், விறகு வெட்டுதல், களையெடுத்தல், சுள்ளி பொறுக்குதல், சித்தாள் வேலைக்குச் செல்லுதல் போன்ற வேலைகளைச் செய்வர்.

குடும்பப் பொருளாதாரப் பற்றாக்குறையைச் சரிசெய்து கொள்ளுவதற்காக வேலைக்குச் செல்லும் பெண்கள், தங்கள் குழந்தையின் மீது அன்பு காட்டவும், பாலூட்டவும் மறந்து விடுகிறாள் என்பதை,

''ஆயத்தமாகும் அவசரத்தில்
ஊட்ட நினைத்த பால்கூட
உறைந்து விடுகிறது''[110]

என்றும் கவிதை படம் பிடித்துக் காட்டுகிறது. நடுத்தரக் குடும்பங்களில் வாழும் வேலைக்குச் செல்லும் பெண்களின் நிலை திரிசங்கு போலவே காணப்படுகிறது. இயந்திரச் சூழலுடன் அவர்களின் வாழ்க்கை இயங்கிக் கொண்டிருப்பதால் குழந்தைகள், பெற்றோரின் அன்பிற்கும், அரவணைப்பிற்கும் தவிப்பதையும்,

''அன்புக்கு நேரமில்லை
ஆதலால்
காட்ட வேண்டிய பாசத்தை
அவள்
ஞாயிற்றுக் கிழமைக்குத்
தள்ளிப் போடுகிறாள்''[111]

என்றும் கவிதையில் சுட்டிக் காட்டுகிறார்.

குடும்பப் பொருளாதாரச் சுமையைக் குறைக்க வேலைக்குச் செல்லும் பெண்களின் நிலை பரிதாபத்திற்குரியது. குடும்பப் பின்னணியில் வீட்டிலும், பொருளாதார நெருக்கடிக்கு வெளியிலும் அவர்கள் எரிந்து கொண்டு இருப்பதால் அவர்களின் வாழ்நாள் முழுவதும் கானல் நீராய்க் காணப்படுவதை,

“இத்தனை சூறாவளிக்கு
மத்தியில் தான்
அந்தக் குத்து விளக்குகள்
வெளியில் எரிந்துவிட்டு
வீடு வருகின்றன”[112]

என்று பதிவு செய்கிறார். குடும்பத்தின் பொருளாதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்ய கிராமங்களில் இன்றும் ஏராளமானப் பெண்கள் வேலைக்குச் செல்கின்றனர். நகரங்களிலும் பொருளாதார நெருக்கடியை சமாளிக்க பெண்கள் வேலைக்குச் செல்கின்றனர் என்பதை கவிஞர் தன்படைப்புகளில் எடுத்துக் கூறுகிறார்.

## பொருளாதாரச் சிக்கனம்

கணவனின் பொருளாதாரத்திற்கு ஏற்ப வாழ்க்கை நடத்தும் வாழ்க்கைத் துணைவியே சிறந்த இல்லத்தரசியாக மதிக்கப்படுவாள். வள்ளுவனின் குறளுக்கு இலக்கணமாகத் திகழும் கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் பாத்திரப்படைப்பாக வரும் பேய்த் தேவரின் மனைவி அழகம்மா,

“மனைத்தக்க மாண்புடையாள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை”[113]

என்ற குறளின்படி இல்வாழ்க்கைக்கு ஏற்ற நற்பண்பு உடையவளாகத் திகழ்கிறாள். பேய்த் தேவரின் நினைவோட்டத்தின் மூலம் அழகம்மாவின் சிக்கனத்தினை அறிந்து கொள்ள முடியும்.

‘கார்த்திகை தீபம் முடிந்த மறுநாள் மிச்ச எண்ணெயைச் சிந்தாமச் சிதறாம சீசாவில் ஊத்தி, மண்சுட்டிகளையெல்லாம் கழுவிக் கவுத்து, அடுத்த கார்த்திகைக்குப் பத்திரப்படுத்துற சிக்கனக்காரியாச்சே”[114]

என்ற வரிகளின் மூலம் கிராமங்களில் உணவுக்குப் போக மீதி வருகின்ற பொருள்களை வெளியே வீசியெறிந்துவிடாமல், மறுமுறையும் பயன்படுத்தும் அளவுக்குப் பாதுகாப்பாகச் சேகரித்து, சேமித்து வைக்கும் சிக்கனப் பொருளாதாரத்தை எடுத்துக் கூறுகிறார்.

கிராமச் சிறுவர் - சிறுமிகள் வறுமையின் காரணமாக ஆடு மாடு மேய்க்கப் பழக்கப்பட்டிருந்தனர். இதனைக் கள்ளிக்காட்டு இதிகாசத்தில், பேய்த் தேவர் பெண்பார்க்கப் போகும் இடத்தில், ஆடுமாடு மேய்த்துக் கொண்டிருந்த ரெண்டு மூணு சிறுமிகளில் ஒருத்தியைக் காட்டி அழகம்மாளை அறிமுகம் செய்கிறார். வண்டி நாயக்கரின் ஆசைநாயகிக்கு உதவி செய்யப் பத்து வயதுச் சிறுமி இருந்ததையும் எடுத்துக் கூறுகிறார்.

‘‘அவ பின்னால வெத்தலப் பொட்டியையும், வெள்ளிக் கூசாவையும் தூக்கி
நிக்குது பஞ்சத்துல அடிபட்ட ஒரு பத்து வயசுப் பொண்ணு’’[115]

என்கிறார்.

## விவசாயக் கடன் பெறுதல்

இந்திய விவசாயிகளில் பெரும்பான்மையோர் விவசாயத்திற்குத் தேவையான ‘விதைநெல்’ கூட இல்லாமல் வாழ்நாள் முழுவதும் துன்பப்பட்டுக் கொண்டே தான் இருக்கிறார்கள். முதுகு முறிய வேலை செய்து, இறுதியில் விவசாயத்திற்குக் கூட விதை நெல் இல்லாததோடு, இருப்பதையும் இழந்துவிட்டு நிற்கும் அவலமான சூழல். மழைபொழிந்த உடன் விவசாயத்திற்குத் தயாராகும் விவசாயி அருகாமையில் இருக்கும் மனிதர்களிடம் கடன் வாங்கி விவசாயத்திற்குத் தயாராகுகிறான்.

“கால்மூட்ட வெதச் சோளம்
கடனாகத் தா தாயி!
கால் மூட்ட கடனுக்கு
முழுமூட்ட அளக்குறண்டி”[116]

வாங்கிய கால்மூட்டைக் கடனுக்காக முழுமூட்டை தருவதாக வாக்குறுதி அளித்துவிட்டு விதைச் சோளத்தை வாங்கிவிட்டு வருகிறான். மழை பெய்தும் கெடுக்கும், பெய்யாமலும் கெடுக்கும் என்று சொல்வதைப் போல விடாமல் மூன்று நாள் மழைபொழிந்து விவசாய நிலத்தை மட்டுமல்லாமல் வீட்டையும் பாழ்படுத்துவதை,

“கூர ஒழுகுதடி
குச்சுவீடு நனையுதடி
ஈரம் பரவுதடி
ஈரக்கொல நடுங்குதடி”[117]

என்று புலம்பும் அவள் வீட்டையும், வீட்டிலுள்ள பொருள்களையும் மழைநீர் அடித்துக் கொண்டு போவதையும் எண்ணி வருந்துகிறாள். மூன்று நாள் முடிந்து சற்று வெயில் அடிக்க விவசாயத்திற்குத் தயார் படுத்திக் கொண்டு விதையை எடுக்கப் போகிறாள். இந்நிலையை,

“வெதச் சோளம் நனைஞ்சிருச்சே
வெட்டியாப் பூத்திருச்சே
மொளைக்காத படிக்கு
மொளைகட்டிப் போயிருச்சே”[118]

என்னும் கவிதையில் குறிப்பிட்டுச் சொல்கிறார். பொழிந்த மழையில் விதைச் சோளம் நனைந்து, விதைப்பதற்குத் தகுதியற்றதாக மாறி முளை கட்டிவிட்டது. இதனால் விவசாயம் செய்யாமலே பெரிய அளவு நஷ்டம் ஏற்பட்டது.

விவசாயத்தால் கழுத்துவரை இறந்து போயிருக்கும் இந்திய விவசாயின் நிலை பரிதாபத்துக்குரியது.

“ஏர்புடிக்கும் சாதிக்கு
இதுவேதான் தலையெழுத்தா
விதிமுடிஞ்ச ஆளுக்கே
வெவசாயம் எழுதிருக்கா?[119]

என்று ஏக்கப் பெருமூச்சு விடுவதையும் பதிவு செய்கிறார் கவிஞர் வைரமுத்து.

## சிறு சேமிப்பு

கிராமங்களில் வறுமையில் வாடும் கூலித் தொழிலாளர்கள், அவ்வப்போது கையில் இருக்கும் காசினை, சிறுகச் சிறுக சேமிக்க சீட்டுச் கட்டுவது வழக்கம். பணம் தேவைப்படும் பொழுது சேமித்தச் சீட்டைப் பிடித்துத் தங்களுக்கு வேண்டிய செயல்களைச் செய்து முடிப்பர். இப்பழக்கம் மக்களிடையே சேமிப்பு மனப்பான்மையை வளர்க்கும். இதனை,

“சீட்டுப் புடிச்சு
சித்தாளு வேல செஞ்சி
ஓட்டக் கூரைக்கு
ஒரு பகுதி ஓடுவச்சேன்”[120]

என்னும் கவிதை புலப்படுத்துகிறது. கிராமங்களில் கட்டுமானப் பணியில் சிறிய சிறிய வேலைகளைச் செய்பவர்களை ‘சித்தாள்’ என்றழைப்பது வழக்கம். இவர்களுக்குக் கூலியும் குறைவு. கிராம மக்கள் சீட்டுப் பிடித்தல், சித்தாள் வேலை போன்றவற்றினைச் செய்து தங்கள் வாழ்க்கைப் பொருளாதாரத்தை ஓரளவு சரி செய்கின்றனர்.

கிராமத்தில் உள்ள பெண்கள் தங்களின் செலவுக்கு கணவன் தரும் பணத்தில் சேமித்து வைப்பதும், அவ்வப்போது கிடைக்கும் பணத்தினை வீட்டிலுள்ள அடுக்குப் பானைக்குள் உண்டியலில் காசு சேமிப்பது போலச் சேமித்து வைப்பதும் உண்டு. இந்த சேமிப்புக் காசினை 'சிறுவாட்டுக் காசு' என்பர்.

## தொகுப்புரை

வாழ்க்கையில் தான் பெற்ற அனுபவங்களை, தான் பிறந்த மண்ணை, நேசித்த மனிதர்களோடு இருந்த உறவை, கடந்து வந்த பாதையை இன்னும் மறந்துவிடவில்லை என்பதைப் பல கவிதைகளில் எடுத்துக் கூறியுள்ளளதைக் காண முடிகின்றது.

கிராமங்களையும், கிராமத்து மனிதர்களையும், நகர்மயமாக்கல் மூலம் சிதைந்து வரும் சூழலையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

கிராமத்து மனிதர்களுக்கு இடையே உள்ள அன்பு, இரக்கம், நட்பு, மனித நேயம், அ.்.றிணை நேசிப்பு ஆகிய பண்புகளையும் பல கவிதைகளில் எடுத்தாள்கிறார்.

விவசாய நிலங்களில் பயிரிடும் முறை, உரமிடுதல், விவசாய நிலம் மீதுள்ள நம்பிக்கை, பயிர்களை உயிராக மதித்தல், விவசாயத் தொழிலை பழகுவதற்குரிய வழிமுறைகள் பலவற்றையும் எடுத்துக் கூறுகிறார்.

ஆண்டு முழுவதும் உழைத்தாலும் விவசாயிகளுக்கு மட்டுமே நிரந்தரமாக இருக்கும் வறுமை, அவர்களின் துயரங்கள், அதனை போக்குவதற்குரிய தீர்வாக அவர்கள் மேற்கொள்ளும் கடின உழைப்பு போன்றவற்றையும் கிராமப்புற மக்களின் வாழ்வியல் விதிகளாகக் கருத முடிகின்றது.

வேளாண்மைப் பொருள்களைப் படைப்பின் பாடுபொருள்கள் ஆக்கல், அவர்களின் கிண்டலும், நகைச்சுவையும் கலந்த பேச்சினையும் ஆய்வின் வழி அறிய முடிகிறது.

கவிஞரின் பார்வையில் பொருளீட்டும் வயது, கிராம மக்களின் உழைப்பு, கிராமியப் பொருளாதாரத்திற்கு இன்றியமையாத சந்தை பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

கிராமியப் பொருளாதாரத்தில் முதலிடம் பெறும் கால்நடை வளர்த்தல், விற்பனை பற்றியும் அவற்றோடு தொடர்புடைய தொழில் பற்றியும் ஆய்வில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

கிராமங்களில் உள்ள மனிதர்களின் சிறிய தொழில்களான எரு விற்றல், புல் அறுத்தல், மீன்பிடித்தல், கிராமங்களில் காணப்படுகின்ற பொதுத் தொழில்களான சவரத்தொழில், சலவைத் தொழில் பற்றியும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

கிராமியப் பொருளாதாரம், நதிகளில் நீர் ஆதாரம் திருடப் படுவதால் மணல் வணிகம் நடப்பது, பெண்களும் வேலைக்குச் செல்லுதல் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.

பொருளாதார நெருக்கடி, அதற்கான தீர்வுகளாக, விவசாயக் கடன், சிறுசேமிப்பு பற்றியும் ஆய்வில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1) வைரமுத்து, எல்லா நதியிலும் என் ஓடம், ப.16.

2) வைரமுத்து. கொடிமரத்தின் வேர்கள், ப.17.

3) மேலது., ப.58.

4) மேலது., ப.60.

5) வைரமுத்து, இன்னொரு தேசியகீதம், ப.98.

6) மேலது., ப.99.

7) வைரமுத்து, தமிழுக்கு நிறம் உண்டு, ப.57.

8) மேலது., பக்.120-121.

9) மேலது., பக்.120-121.

10) புறம்., 192.

11) குறள்., ப.997.

12) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.14.

13) வைரமுத்து, சிகரங்களை நோக்கி, ப.137.

14) மேலது., ப.68.

15) வைரமுத்து, எல்லா நதியிலும் என் ஓடம், ப.59.

16) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.51.

17) வைரமுத்து, தண்ணீர்தேசம், ப.191.

18) குறள்., 45.

19) கலித்., 133.

20) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.100.

21) மேலது., ப.189.

22) குறுந்., 49.

23) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.219.

24) குறள்., 314.

25) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், பக்.234-235.

26) மேலது., ப.236.

27) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.55.

28) குறள்., 74.

29) மேலது., 785.

30) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.90.

31) மேலது., ப.262.

32) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.162.

33) மேலது., ப.163.

34) வள்ளலார், திருவருட்பா, பா.எண். 3471.

35) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.143.

36) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.14.

37) வைரமுத்து, சிகரங்களை நோக்கி, ப.130.

38) பாரதியார் பாடல்கள், ப.1.

39) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.325.

40) மேலது., ப.344.

41) மேலது., ப.71.

42) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.70.

43) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.18.

44) வைரமுத்து, வடுகப்பட்டி முதல் வால்கா வரை, ப.82.

45) மேலது., பக்.82-83.

46) மேலது., ப.83.

47) மேலது., ப.83.

48) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், பக்.23-24.

49) குறள்., 1041.

50) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.54.

51) மேலது., பக்.55-56.

52) மேலது., ப.39.

53) மேலது., ப.85.

54) வைரமுத்து, சிகரங்களை நோக்கி, ப.19.

55) வைரமுத்து, ரத்ததானம், ப.27.

56) வைரமுத்து, இன்னொரு தேசியகீதம், ப.115.

57) வைரமுத்து, கள்ளிக் காட்டு இதிகாசம், ப.117.

58) மேலது., ப.199.

59) மேலது., ப.199.

60) வைரமுத்து, கருவாச்சி காவியம், பக்.71-72.

61) மேலது., ப.73.

62) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.71.

63) வைரமுத்து, தண்ணீர் தேசம், ப.37.

64) மேலது., ப.104.

65) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.308.

66) மேலது., ப.475.

67) வைரமுத்து, கவிராஜன் கதை, ப.76.

68) மேலது., ப.80.

69) வைரமுத்து, கொடிமரத்தின் வேர்கள், ப.57.

70) மேலது., ப.58.

71) க. முகிலன். டாக்டர். பி.ஆர். அம்பேத்கர் வாழ்க்கை வரலாறு – தமிழாக்கம், ப.38.

72) குறள்., 247.

73) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப.480.

74) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.287.

75) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப.474.

76) வைரமுத்து, இதுவரை நான், ப.64.

77) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.27.

78) இல.செ.கந்தசாமி, காதல் வாழ்வில் கால்நடைகள், ப.83.

79) மேலது., ப.474.

80) மேலது., ப.474.

81) வைரமுத்து. இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல, ப.90.

82) மேலது., ப.90.

83) மேலது., ப.88.

84) மேலது., ப.89.

85) மேலது., ப.89.

86) மேலது., ப.89.

87) மேலது., ப.88.

88) வைரமுத்து. கருவாச்சி காவியம், ப.165.

89) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.40.

90) மேலது., பக்.264-265.

91) மேலது., பக்.296-297.

92) வைரமுத்து, ரத்ததானம், ப.69.

93) வைரமுத்து, தமிழுக்கும் நிறமுண்டு, ப.100.

94) எஸ்.அறிவுமணி, பிருந்தாவனத்துப் பிரமிடுகள், பக்.58-59.

95) வைரமுத்து, தண்ணீர் தேசம், பக்.66-67.

96) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.190.

97) மேலது., ப.227.

98) மேலது., ப.196.

99) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.158.

100) மேலது., ப.161.

101) வைரமுத்து, தமிழுக்கும் நிறமுண்டு, ப.57.

102) மேலது., ப.58.

103) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப.413.

104) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.102.

105) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள். ப.414.

106) மேலது., ப.415.

# இயல் 3
# கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளிலுள்ள கிராமப்புற மக்களின் பண்பாட்டுச் சிந்தனைகள்

## முன்னுரை

பகுத்தறியும் பண்பினைக் கொண்டது மனித இனம். மனிதகுலம் மண்ணில் நிலை பெற்றிருக்கச் சில பண்பாடுகளைப் பின்பற்றுதல் வேண்டும். கிராமங்களில் வாழும் படிப்பறிவில்லாத மக்கள் தங்களின் வாழ்க்கையில் பல பண்பட்ட நெறிகளைக் கடைப்பிடித்தே வாழ்ந்து வருகின்றனர். தங்களின் தகுதிக்கு மீறிய வாழ்க்கை, துன்பத்தினைத் தரும் என அறிந்து வாழ்க்கையை நடத்தினர். தங்களுக்கென்று அமைந்த வாழ்வில் கிடைக்கும் சிறிய இன்பத்தைக் கூட வாழ்க்கையின் உயர்ந்த நெறியாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். துன்பம் வருகின்றபோது பிறருக்கு உதவி செய்து, தம்மிடம் உள்ள பொருட்களை வைத்துக் கொண்டே மன நிறைவான வாழ்க்கையினை வாழ்ந்து வந்தனர்.

இருபத்தொன்றாம் நூற்றாண்டின் அதிவேக வளர்ச்சியினால் கிராமியக் கலாச்சாரம் மெல்ல மெல்ல அழிந்து கொண்டிருக்கக் கூடிய இன்றைய நிலையில், அவற்றினை அழியாமல் பாதுகாக்க வேண்டிய மிகப் பெரிய பொறுப்பு இன்றைய சமுதாயத்திற்கு இருக்கிறது. கிராமங்களில் அழிந்து கொண்டிருக்கும் பண்பட்ட வாழ்க்கை, நன்றியுணர்ச்சி, கலாச்சாரம், உணவு, உடை, உறைவிடம், திருமண மரபுகள், விவசாயத்தொழில்நுட்பம் போன்ற தகவல்கள் கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் இருப்பதை இவ்வியல் ஆராய்கிறது.

**பண்பாடு - வரையறை**

காடுகளில் வாழ்ந்து, மரங்களில் தாவி உறைந்து, கால்நடைகளின் மாமிசத்தைத் தின்று வாழ்ந்த மனிதன், ஆற்றுச் சமவெளி நாகரிகத்தைத் தோற்றுவித்துப் பயிர் விளைவித்து வாழ்ந்த காலம் தொட்டு இன்று வரை வேளாண்மை மனித வாழ்வில் சிறந்த அங்கமாகத் திகழ்கிறது. நாடோடியாய் வாழ்ந்த மனிதன் வேளாண்மைத் தொழிலை மேற்கொண்டபோதுதான் நிலையான இடத்தில் வாழ்க்கையை வாழத் தொடங்கினான். அக்காலத்தில் தான் பண்பாடு தோன்றியது. தனி மனித வாழ்க்கையில் நடக்கின்ற நிகழ்ச்சிகளின் தாக்கத்தால் எழுகின்ற உணர்ச்சியும், சிந்தனையுமே பண்பாடாக உருவெடுக்கின்றது. கிராமப்புற மக்களின் பழக்கவழக்கங்கள், எண்ணங்கள் ஆகியவையே பண்பாடாகும்.

“ஒரு நாட்டின் கலாச்சாரப் பாரம்பரியம் தலைமுறை தலைமுறையாக தொடர்ந்து வரும் பழக்கவழக்கங்களின் அடிப்படையிலே அமைகின்றன. கலாச்சாரம் என்ற சொல்லுக்கு பண்பாடு”[1] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி பொருள் தருகிறது.

‘பண்பாடு’ என்னும் சொல்லைப் பண்+படு எனப் பிரித்துப் பொருள் கொள்ளலாம். பண்பாடு என்னும் சொல் ‘பண்படு’ என்னும் வினையடிச் சொல்லாகப் பிறந்திருக்கலாம். ‘கட்டுப்பாடு’ என்ற சொல்லாட்சி ‘கட்டுப்படு” எனவும், ‘எற்படு’ என்ற சொல்லாட்சி எற்பாடு என மாறியுள்ளது போல ‘பண்படு’ என்னும் சொல் பண்பாடு என மாறியிருக்கலாம் எனக் கொள்வதே பொருத்தமுடையது.

பழம் தமிழிலக்கியங்களில் பண், பண்ணை, பண்டம், பண்பு போன்ற சொற்கள் ஓரே பொருளில் தோன்றியிருப்பதைக் காணலாம். செம்மையான ஓசையைப் 'பண்' என்றும். ஒழுங்குபட்ட செயல்களைப் 'பண்பு' என்றும் செம்மைப்படுத்தப்பட்ட நிலங்களைப் 'பண்ணை' என்றும், நன்றாகச் செய்யப்பட்ட அல்லது சமைக்கப்பட்டப் பொருளைப் 'பண்டம்' என்றும் வழங்கியுள்ளனர்.

'பண்' என்னும் சொல்லின் அடிப்படையில் 'பண்பு'. 'பண்புடைத்து', பண்புடையார், 'பண்புடைமை' என்னும் சொற்றொடர்கள் குறுந்தொகைப் பாடல்களில் வந்துள்ளதால் இந்த சொற்றொடர்கள் வழக்கில் இருந்துள்ளன என்பதை அறியலாம். மேலும்

''பண்பெனப் படுவது பாடறிந்தொழுகுதல்''[2]

என்றும்,

''பண்புள பாடறிவார் மாட்டு''[3] என்னும் வரிகளில் பண்பு, பாடு என்னும் சொற்கள் சேர்ந்து வருதலைக் காணும் பொழுது பண்பாடு என்ற சொல்லாக்கம் இதன் வழியே வந்திருக்கலாம் எனக் கருத முடிகிறது.

பண்படுத்துதல் என்னும் சொல்லாட்சிக்குச் ''சீர்திருத்துதல்', 'நிலங்களைச் செம்மைப்படுத்துதல்' என்ற இருபொருளைத் தருகின்றது'',[4] சென்னைப் பல்கலைக் கழக அகராதி.

'பாடு' என்னும் சொல் ''கடமை, குணநலம், இனிமை, பயன், நடுநிலை, உலக ஒழுக்கம்''[5] என்னும் பொருளிலும் வழங்கப்படுகிறது.

பண்பாடு என்ற சொல்லாட்சியை முதன் முதலில் 1937-இல் டி.கே.சிதம்பரமுதலியார் பயன்படுத்தியதாக அவருடைய மாணவர் வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுகிறார்.

பண்பாடு என்ற சொல்லை ஆங்கிலத்தில் ‘culture’ என்றழைப்பர். ‘culture’ என்ற சொல் ‘cultus’ என்ற இலத்தின் மொழிச் சொல்லிருந்து பிறந்தது”.[6]

பண்பாடு என்பது மனித சமூகத்தின் அறிவு, நம்பிக்கை, அறவாழ்க்கை, சட்டங்கள், வழக்கங்கள் பற்றிய ஒருவித வாழ்க்கை முறையாகும்.

பண்பாடு மனித சமூகத்தின் வளர்ந்த நிலையை மட்டும் குறிப்பிட்டுச் சொல்லாமல் சமூகத்தின் தாழ்ந்த நிலையையும் எடுத்துக்காட்டும். பண்பாடு என்பது தனிமனிதத் திறனுக்கும், செயல்பாட்டிற்கும், ஆழ்ந்த அறிவுக்கும், பரந்த மனப்பான்மைக்கும் விளக்கமாக அமையும்.

ஒரு சமுதாயத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை அமைப்பு முறையின் வெளிப்பாடே சமுதாயத்தின் பண்பாடாகிறது. வாழ்க்கை அமைப்பு என்பது பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், மரபுகள், கலைகள், இலக்கியங்கள் முதலியவற்றால் அறியப்படுவது.

பண்பாடென்பது ஒரு தலைமுறையினர், சென்ற தலைமுறையினரிடம் இருந்து கற்றுக் கொண்ட வாழ்க்கை முறை ஆகும். கவிஞர் வைரமுத்து அவர்கள் பண்பாட்டைப் பற்றிக் கூறும்போது,

‘பண்பாடு என்பதும்
ஓர் இனத்தின் நீண்டபழக்கம்’[7] என்கிறார்.

## கிராமப்புறப் பண்பாடு

மனித வாழ்க்கையின் தொடக்க காலத்திலிருந்து, இறுதிக் காலம் வரையிலுள்ள வாழ்க்கை உண்மைகளையும், அவற்றின் தன்மைகளையும் அப்படியே வெளிப்படுத்திக் காட்டுவது கிராமப்புறப் பண்பாடாகும். கிராமப்புற மக்களின் நடை, உடை, உணவு, பழக்க வழக்கங்கள், சிந்தனைகள், விடாமுயற்சி, விருந்தோம்பல், ஈகை, கருணை, நன்றியுணர்வு, அன்பு ஆகிய நற்பண்புகள் கிராமப்புறப் பண்பாட்டில் சிறந்து விளங்கும். இந்த கிராமியப் பண்பாட்டைக் கவிஞர் வைரமுத்து தன்னுடைய படைப்புகளில் அப்படியே எடுத்தாண்டுள்ளார்.

## பசுவை மதிக்கும் பண்பாடு

விவசாயத்தையே உயிர் மூச்சாகக் கொண்டிருக்கும் ஏழைகளின் வாழ்வில் மண்ணிற்கும் மண்ணைச் சார்ந்திருக்கும் அத்தனை உயிர்களுக்கும் முக்கியத்துவம் உண்டு. விவசாயம் சார்ந்த கிராமப் பண்பாட்டுச் சூழலில் மனிதரை விடப் பசுவினைப் பெரிதென மதிக்கும் பண்பாடு கிராமங்களில் காணப்படுவதை கள்ளிக்காட்டு இதிகாசத்தில் எடுத்துக் கூறுகிறார்.

> ‘‘விவசாயக் கலாசாரத்தில் ஆடுமாடுகள் குடும்பத்தின் அங்கம். பிள்ளைகளைப் போலவே ஆடுமாடுகளுக்குப் பெயர் வைப்பதும் தான் பசித்திருந்தாலும் தன் ஜீவராசிகள் பட்டினி கிடக்காமல் பார்த்துக் கொள்வதும் - ஆடுமாடுகள் செத்தால் ஆளாளுக்கு இழவு கேட்பதும் கள்ளிக்காட்டு கலாசாரம். பெண்ணுக்கும் பசுவுக்கும் ஒரே நேரத்தில் பிரசவ வலியெடுத்தால் பெண்ணை விடவும் மகிழ்ச்சி தருவது பசுதான். காரணம் ஒரு பெண், பெண் சிசுவைப் பிரசவித்தால் இடிவிழுந்த

வீடாகிவிடுகிறது குடியானவன் வீடு. அவர்களின் சமூக வாழ்வில் ஆண் வரவு; பெண் செலவு பசு அப்படியில்லை. அது காளங் கன்று ஈன்றாலும் கிடரிக் கன்று ஈன்றாலும் வறுமையின் வாசலுக்கு அது வரவு தான்''.[8]

கிராமப் பண்பாட்டுச் சூழலில் அவர்களின் வாழ்க்கை இயக்கத்திற்கு ஒவ்வொரு நிலையிலும் ஆணிவேராக இருப்பது பசுவாகும். கிராம மக்களின் வாழ்வாதாரத்திற்கு இன்றியமையாதத் தேவையாக கால்நடைகள் விளங்குகின்றன. கிராமங்களில் ஆடு, மாடுகள் போன்ற கால்நடைகளுக்கு அளிக்கும் மரியாதை, பராமரிப்பு போன்றவை குறிப்பிடத் தக்கதாகும்.

## கிராமியப் பண்பாட்டுக் கூறுகள்

கிராமிய வாழக்கைச் சூழலில் மனிதர்கள் தங்களின் வாழ்வின் பெரும் பகுதியை, உழைப்பையும், மண்ணையும் முதன்மைப் படுத்தியே வாழ்க்கையை நகர்த்துகின்றனர். விவசாயத்தையே முதன்மைத் தொழிலாகக் கொண்டு இயங்கும் மக்களின் வாழ்க்கையில் மண்ணும், அவற்றோடு சேர்ந்த காலக்கணிப்பும் மிகவும் இன்றியமையாதனவாக விளங்குகின்றன. தாம் நேசிக்கும் மண்ணைப் பற்றி கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் கூறும் போது பேய்த்தேவர் கதாபாத்திரத்தின் வழியாக வெளிப்படுத்துகிறார் கவிஞர்.

'மண்ணுதான் சாப்பாடு.......; மண்ணுதான் மருந்து நம்மளுக்கு..........'' என்றவர் தன்னால் நேர்ந்த தாமதத்தைச் சகிக்க முடியாமல் - ஓட்டுறா மொக்க ஓட்டு........ உச்சிப் பொழுதாச்சு.........''[9] என்கிறார். மாடுகளின் நிழலை வைத்தே நேரத்தினைக் கணித்துச் சொல்லும் பேய்த்தேவர் மதியக் கஞ்சிப்

பொழுதுக்குள் இந்தக் குறுக்கம் உழுது தீருமா? என்ற சந்தேகக் கண்ணோட தன் தொழிலில் கருமமே கண்ணாக இருந்து செயல்படுகிறார்.

### நன்றியுணர்ச்சி

தனித்தனித் தீவுகளாக வாழ்ந்து வந்த மனிதர்கள் ஒரு சமூகக் கூட்டமாக சேர்ந்து வாழத் தொடங்கியபோது ஒருவருக்கொருவர் அனுசரணையாகவும், விட்டுக் கொடுத்தும், உதவிகள் செய்தும் வாழ்ந்து வந்தனர். இந்த உதவியினை ஒவ்வொருவரும் வாழ்க்கையில் மறக்காமல் நினைவில் கொண்டு வாழ்ந்தனர். இந்தப் பண்பே காலப்போக்கில் ‘நன்றியுணர்ச்சி’ என்ற குணமாக மாறியது. இந்த நன்றியுணர்ச்சியைக் காலங்கள் பலகடந்தாலும் மறக்கக் கூடாது என்பதையே அய்யன் வள்ளுவர்,

‘காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது’’[10]

என்றும்

‘‘நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று’’[11]

என்றும் குறிப்பிட்டுள்ளார். கிராமங்களில் இன்று வரை மனித வாழ்க்கையின் பண்பாட்டுக் கருவூலமாகப் பின்பற்றப்பட்டு வரும் ஒரு செயல் ‘உப்பிட்டவரை உள்ளளவும் நினை’ என்ற பழமொழியாகும். வறுமையின் கொடுமையில், பசியின் கொடுமையில் இருக்கும் ஒரு மனிதனுக்கு வயிறு நிரம்ப உணவு கொடுத்து உபசரித்தவரை வாழ்நாள் முழுவதும் மறக்காமல் எண்ணுதல் வேண்டும் என்பர்.

கருவாச்சி காவியத்தில் கருவாச்சியின் தாய் பெரிய மூக்கி இறந்து அனாதையாக தனிக்காட்டில் தவித்து இருக்கும் சூழலில் சுப்பஞ் செட்டியார் நன்றியோடு பேசுகிறார்.

> “எனக்குப் பொட்டப் புள்ளைக ரெண்டு இல்ல; மூணுன்னு நெனச்சுக்கிறேன் தாயி இது ஒனக்குத் தாய்வீடு, என்வீடு தகப்பன் வீடுன்னு நினைச்சுக்க இப்பச் சொல்றேன்................ என் மூத்தமக கழுத்துல கெடக்கே மூணுபவுன் சங்கிலி………… அது என் தங்கச்சி பெரியமூக்கி மொறக்கடனாக் குடுத்தது. அந்தச் சங்கிலி கழுத்துல ஏறலன்னா எம்மக கழுத்துல தாலி ஏறியிருக்காது”[12]

என்று நன்றியின் தன்மையினையும், தன் குழந்தைக்கு வாழ்வளித்த பெரிய மூக்கியின் பெருந்தன்மையையும் கூறுகிறார்.

> “அந்தத் தர்மசீலி பெத்த மகள நாங்க தவிக்க விட்ருவோமா. என் நெஞ்சுக் கூட்ல உசுரு இருக்க வரைக்கும் நெல்லுச் சோறாப் போடறேன்...வாம்மா”[13]

என்று கூறி காலத்தினால் செய்த நன்றியைக் கடைசி காலம் வரை மறக்காத தன்மையை விளக்கிச் செல்கிறார்.

## கொடை

தனக்கென்று சேர்த்து வைத்துப் பிறர்க்கு அளிக்காத மனித வாழ்வில், பிற மனிதர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று உள்ளம் எண்ணியபோது கொடுத்தல் என்னும் மனிதப் பண்பு வெளிப்பட்டது. பிறர் தேவைக்குக் கொடுத்த

நிலையிலிருந்து மெல்ல உயர்ந்து, தன் தேவைக்கும், தன் குடும்பத்தின் தேவைக்கு மட்டும் ஒதுக்கி வைக்காமல், பிற மனிதர்களுக்குக் கொடுத்து உதவுகின்ற மனவியல்பைக் ‘கொடை’ என்பர். பிறரின் மகிழ்ச்சியில் உள்ளம் மகிழ்ந்திருக்கின்ற சிறந்த பண்பாட்டை கிராமங்கள் பின்பற்றி வருகின்றன. அந்த உயரிய பண்பாட்டை ‘கருவாச்சி காவியம்’ என்ற படைப்பின் மூலம் விளக்குகிறார் ஆசிரியர். சுப்பஞ் செட்டியாரின் மகளுக்கு திருமணம் நடைபெறும் போது மாப்பிள்ளை வரதட்சணையாக வைர மோதிரம் கேட்க, வசதியில்லாத செட்டியார் யோசிக்கும்போது கருவாச்சி தன் மகன் கழுத்திலிருந்த மூன்றுபவுன் தங்கச் சங்கிலியைக் கழற்றிக் கொடுத்தாள்.

> “இந்தாங்க; இதவைங்க, நான் நகை போடப் போறதில்ல. நகைபோட்டு அழகுபாக்க எனக்குப் பொம்பளப் பிள்ளையும் இல்ல. இத உருக்கி ஒரு மோதிரம் செஞ்சு குடுத்திருங்க. என் தங்கச்சிக பொழப்பு கரையேறட்டும், இவளுக போனாப் போறாளுக”14

என்ற வரிகளில் பிறருக்குக் கொடுக்கும் வள்ளன்மை தன்மை வெளிப்படுகிறது. செய்து கொடுத்த வைர மோதிரத்தால் முத்துக்காமு உயிர் போக, கல்லில்லாத மோதிரத்தை கருவாச்சியிடமே திருப்பிக் கொடுத்தார் சுப்பஞ் செட்டியார். அந்த கல்லுபோன மோதிரத்தையும் விற்று, சுப்பஞ் செட்டியார் மகளுக்கு அளித்ததை,

> “கல்லு விழுந்த மோதிரத்தக் கருவாச்சிக்கே அவுக திருப்பிக்குடுக்க, அவ அதைவித்து சொக்கத் தேவன் பட்டியிலயே பொட்டிக் கடை போட்டுக் குடுத்தா கைம் பொண்டாட்டிக ரெண்டு பேருக்கும்”[15]

என்று குறிப்பிட்டுள்ளார். பிறர் துன்பப்படும் போது கொடுத்து உதவுவதை விடச் சிறந்த மனிதப் பண்பு இந்த உலகத்தில் வேறு இல்லை.

‘‘செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே’’[16]

என்ற புறநானூற்று பாடல் வரிகள் கூறும், செல்வம் படைத்தவர்கள் பிறருக்கு உதவ வேண்டும் என்ற கூற்றுக்கு மாறாக வறுமையிலும் உதவும் செம்மையான வாழ்க்கையை வாழ்பவர்கள் கிராமத்து மனிதர்கள் என்பதை வெளிப்படுத்துகிறார் கவிஞர்.

## பிறருக்கு உதவுதல்

மனிதப் பண்பே பிறருக்கு உதவுவது தான். வள்ளுவர் இதனை,
‘‘அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்
கிவ்வுலகம் இல்லாகி யாங்கு’’[17]

பொருள் இவ்வுலக வாழ்க்கைக்கு எவ்வளவு இன்றியமையானதோ அதைப் போல அருள் இல்லாதவர்களுக்கு மோட்ச உலகம் இல்லை எனலாம்.

‘காவி நிறத்தில் ஒரு காதல்’ என்ற நாவலில் மதுபாலா பிறருக்கு உதவும் மனம்படைத்தவளாகவே காணப்படுகிறாள். மதுபாலாவின் பண்புநலனைப் பற்றி வெங்கடேசன் கூறும் பொழுது,

‘‘ஒருதாய் செய்ய முடியாத சேவையெல்லாம் அவ என் மகளுக்குச் செஞ்சா. என் மகளோட வியர்வை, சிறுநீர், ரத்தம், சளி எல்லாத்தையும் சத்தமில்லாம சுத்தம் பண்ணுவா. அவளோட கூந்தலைக் கோதிக்கோதி சுகப்படுத்தித் தூங்க வைப்பா’’[18]

என்ற வரிகள் மதுபாலாவின் சுயநலமற்ற உதவும் தன்மையைக் காட்டுகிறது. ‘கள்ளிக்காட்டு இதிகாசம்’ நாவலில் பிறருக்கு உதவும் பேய்த் தேவரின் குணநலத்தைக் கூறும் போது சொட்டையனின் மாடு கன்று ஈனாமல் தவித்த போது பேய்த் தேவர் சுயநலமில்லாமல் உதவி செய்கிறார்.

“ஏலே மொக்க .... நீட்டமா ஒரு எருக்கெலங்குச்சி ஒடிடா...”[19]

என்று கூறி மாட்டிலிருந்து கன்றை வெளியே எடுக்கிறார். எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் செய்யும் உதவியே காலங்கள் பல கடந்தும் அவர்களின் வம்சம் தழைத்தோங்குவதற்குத் துணைபுரியும். இதன் மூலம் கிராமப்புற மக்களின் பண்பாடு புலனாகிறது.

## கால்நடைகள் - குடும்ப உறுப்பினர்

கள்ளிக்காட்டு கிராம வாழ்க்கையில் மாடுகள் தெய்வமாகக் கருதப்பட்டு, அதனை வழிபட்டும் வருகின்றனர். தன் வாழ்நாள் முழுவதும், தன்னோடு வயல் வேலைகளில் ஈடுபட்டு, துன்பப்படும் கால்நடைகளைத் தங்களின் குடும்ப உறுப்பினராகக் கருதும் வழக்கம் கிராமங்களில் தொன்று தொட்டு வழக்கத்திலிருக்கும் ஒரு பண்பாகும். கவிஞர் வைரமுத்து தன் படைப்பில்,

> “விவசாயக் கலாசாரத்தில் ஆடுமாடுகள் குடும்பத்தின் அங்கம். பிள்ளைகளைப் போலவே ஆடுமாடுகளுக்குப் பெயர் வைப்பதும்தான் பசித்திருந்தாலும் தன் ஜீவராசிகள் பட்டினி கிடக்காமல் பார்த்துக் கொள்வதும் - ஆடுமாடுகள் செத்தால் ஆளாளுக்கு இழவு கேட்பதும் - கள்ளிக் காட்டு கலாசாரம்”[20] என்கிறார்.

கிராம மக்கள் வயிற்றுப் பிழைப்பிற்கே அன்றாடம் துன்பப்படும் சூழலில் அவர்கள் பகட்டு வாழ்க்கை வாழ இயலாது. மண்ணைக் கிண்டி வாழ்க்கை நடத்தும் கிராமத்து மனிதர்களின் ஒரே சொத்து. அவர்களின் உடம்பு மட்டும் தான்,

> ‘‘கள்ளிக்காட்டுக் கலாசாரத்தில்………….. ஈரச்சாக்கும் இத்த சேலையும் - அரைப்படி சோளமும் - அவத்தக் கஞ்சியுமே அன்றாடங்களாகிவிட்ட ஒரு வறட்டு வாழ்க்கை’’[21] என்கிறார்.

தன் எஜமானனுக்காக, காடு கரையெல்லாம் உழைத்துக் கொண்டிருக்கும் மாடுகளைத் தான் விவசாயி தெய்வமாகக் கொண்டாடி மகிழ்கிறான்.

> ‘‘கடவுள் வேலைக்காரனாக முடியாது; வேலைக்காரன் கடவுளாக முடியாது. ஆனால் விவசாயக் கலாசாரத்தில் கடவுளாகவும் வேலைக்காரனாகவும் இருப்பது மாடுதான். வருசமெல்லாம் அடிவாங்குவதும் அதுதான். தைப்பொங்கல் வந்தால், அவனவன் அரசியலைக் கொம்புகளில் தாங்கிக் கொண்டு சூடம் சாம்பிராணியோடு வணங்கப்படுவதும் அதே மாடுதான்’’[22]

தனக்காகக் கஷ்டப்பட்டு வரும் கால்நடைகளுக்கு ஒரு துன்பம் வந்தால் கூட விவசாயி அதனை தாங்கிக் கொள்ளமாட்டான். தங்களின் வாழ்நாளில் எல்லாவிதமான மாமிச உணவுகளையும் உட்கொள்ளுவானே தவிர மாட்டை துன்புறுத்துவதையோ, அதன் மாமிசத்தை உண்பதையோ பொறுத்துக் கொள்ள மாட்டான்.

“கள்ளிக்காட்டு வாழ்க்கை முறையில் ஆளை வெட்டுவது கூட அன்றாடம் என்று சகித்துக் கொள்வார்கள். மாட்டை வெட்டுவதை மன்னிக்க மாட்டார்கள். ஒரு கள்ளிக்காட்டு விவசாயி ஆட்டுக்கறி, கோழிக்கறி, பறவைக் கறி, பன்றிக்கறி, உடும்புக் கறி, எலிக்கறி கூடத் தின்னுவானே தவிர மாட்டுக்கறி தின்னமாட்டான். மாட்டை அடித்துத் தின்னுவது என்பது குடும்பத்தில் ஓர் ஆளை அடித்துச் சாப்பிடுவது மாதிரி. எந்தக் கறிக்கும் மாட்டுக்கறி தாழந்ததல்ல. ஆனால் மாட்டுக்கறி தின்னமாட்டேன் என்னும் விரதம் மாட்டின் மீது அவன் கொண்டுள்ள பாசம்; விசுவாசம், தனக்குச் சோறுபோடும் மாட்டைக் கூறுபோட விரும்பாது கள்ளிக்காட்டுக் கலாசாரம்”[23].

ஒரு விவசாயக் குடும்பத்தின் மானம், வருமானம், சாப்பாடு, வீடு இதெல்லாம் விவசாயம் இல்லாமல் இல்லை. அந்த விவசாயமே மாடு இல்லாமல் இல்லை. கிராமங்களில் மனிதர்கள், மனிதர்களோடு வாழும் நேரங்களைவிட கால்நடைகளோடு தான் அதிக நேரம் வாழ்கிறார்கள். அதுவும் நிம்மதியாக வாழ்கிறார்கள். அதனால் கால்நடைகளைத் தங்களின் குடும்ப உறுப்பினராகவே கிராம மக்கள் கருதுகின்றனர்.

## கிராம மக்களின் வழக்கம்

கிராமங்களில் வாழும் மக்கள் வெள்ளையுள்ளம் படைத்தவர்கள். எதார்த்தமானவர்கள். தான் வாழ்ந்த கிராமங்களில் தான் பார்த்த பழக்க வழக்கங்களைத் கவிஞர் தன் படைப்பான இன்னொரு தேசிய கீதத்தில் பதிவு செய்கிறார். கிராமங்களில் பக்கத்து வீட்டில் நெருப்பு வாங்கித் தன் வீட்டு

அடுப்பைப் பற்ற வைப்பது வழக்கம். இது தமிழகத்தின் சில கிராமங்களில் இன்றும் நடைமுறையில் உள்ளது. இதனை

“ஒரு
சூரியோதயத்தில்
சுதந்திரம் வரும்!
கிராமத்துக் கிழவியின்
அடுப்பு
இரவல் நெருப்பின்றி
எரியும்
என்றோர் நம்பிக்கை
இருந்தது உண்டு”[24]

என்ற கவிதை புலப்படுத்துகிறது.

## மகண் மறுத்தல்

மனித வாழ்வில் இனத்தூய்மை இன்றியமையாதப் பண்பாக பன்னெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஓர் இனத்தைச் சார்ந்தவர்கள் மற்றொரு இனத்தைச் சார்ந்தவர்களுடன் மண உறவு வைத்துக் கொள்ள விரும்புவதில்லை. மாற்று இனத்தவருடன் மண உறவு வைத்துக் கொள்வது தம் இனத்திற்கே இழுக்கு எனக் கருதுகின்றனர். தமிழ்ச் சமூகத்தில் அரசனுக்கும், ஆண்டிகள் பெண் கொடுக்க மறுத்த பல வாய்மொழிக் கதைகள் வழக்கிலுள்ளன. மகண் மறுத்தல் தொல்காப்பியர் காலத்திலிருந்து இன்று வரை மக்களிடம் வழக்கத்திலுள்ளது. தொல்காப்பியப் புறத்திணையியலில் காஞ்சித் திணையின் துறையினுள்,

“நிகர்த்து மேல்வந்த முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலும்”[25] என்ற நூற்பா வரி இதனை எடுத்துக் கூறுகிறது. இதன்மூலம் பெண் கேட்டு அரசர்கள் தங்களுக்குள் போர் செய்து கொண்டது வெளிப்படுகிறது. தொல்காப்பிய

அகத்திணையிலும் காதலர்கள், பெற்றோர்கள் பெண் தர மறுத்த போது உடன்போக்குச் சென்றது பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

சங்க இலக்கியங்களில் ஒன்றான புறநானூற்றுப் பாடல்களிலும் மகண் மறுத்தல் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

‘‘அளிதோ தானே பேரிருங் குன்றே!
வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே’’[26]

என்னும் பாடல், பறம்பு மலை இரங்கத் தக்கது. அக்குன்றம் வேலால் வெல்லும் மன்னர்க்கோ அரிது என்று கூறுவதிலிருந்து இதனை அறிய முடிகிறது.

சமநிலையற்ற மனித சமூகத்தில் ஆதிக்கவர்க்கங்கள் தாழ்த்தப்பட்ட மக்களை அடிமைகளாகவே தொடக்கத்தில் கருதினர். இப்படிப்பட்ட சூழ்நிலையில் அடித்தள மக்களின் வீட்டுப் பெண் அழகுடையவர்களாக இருந்தால், ஆதிக்க வர்க்கத்தினர் தங்களுடைய மேலாண்மையைப் பயன்படுத்தி அவளை அடைய முற்படுகின்றனர். அந்நிலையில் ஆதிக்க வர்க்கத்தினரை எதிர்க்கும் வல்லமை குறைந்து அடித்தள மக்கள் தங்கள் குலமானம் காக்கப் பெண்ணைக் கொன்று விடுகின்றனர்; அல்லது எதிர்வினையாற்றுகின்றனர் அல்லது அந்தப் பெண் தன் கற்பைக் காக்கத் தற்கொலை புரிந்து கொள்கிறாள். இம்மறைமுக எதிர்ப்பு நிலையே மகண் மறுத்தல் அல்லது மகள் மறுத்தல் என்பர்.

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் முத்துக்கண்ணி வாயிலாக ‘மகண் மறுத்தல்’ செய்தியைப் பதிவு செய்கிறார்.

காயாம்புத் தேவரின் மகளான முத்துக்கண்ணியை அந்த ஊர் ஜமீன்தார் பெண் கேட்டு வந்தபோது, அவரும், அவரின் உடன்பிறப்புகளும் மறுத்தனர். அதனை,

“அய்யா நாங்க பொன்ன எழப்போம்; பொருள எழப்போம்; மண்ண எழப்போம்; மானத்த எழக்க மாட்டோம்; போயிட்டு வாங்க”[27]

என்று புத்தி சொல்லி அனுப்பிய போது சமீன்தார் உங்கள் குடும்பத்தைக் கருவறுக்காமல் விடமாட்டேன் எனச் சபதமிட்டுச் சென்றார். அன்று இரவே ஜமீன் வீரர்கள் திரளாக வந்து, ஊரைத் தீயிட்டுக் கொளுத்தி முத்துக்கண்ணியைத் தூக்க முற்பட்டபோது கடுமையாகச் சண்டையிட்டனர். எதிர்த்து நிற்க முடியாத சூழலில் முத்துக்கண்ணியை இழுத்து கொண்டு ஓடிய அண்ணன் ஆற்று நீரில் மூழ்கடித்துக் கொன்று, தானும் தலையை அறுத்துக் கொண்டு மாண்டான் என்று கூறுவதிலிருந்து மானத்தோடு வாழ்வதற்கே தமிழ்ச் சமூகம் முற்பட்டுள்ளதை அறியலாம்.

## திருமண மரபு

திருமணம் என்பது ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் சடங்கு சம்பிரதாயங்களோடு பெரியோர்களால் நிச்சயிக்கப்படுவது ஆகும். கிராமங்களில் திருமணங்கள் பகல், இரவு ஆகிய இரு நேரங்களிலும் நடைபெறும். ஆனால் கள்ளிக்காட்டில் “பேய்த்தேவர் வகையறாக்களுக்கு மாப்பிள்ளை வீட்டில் கல்யாணம் நடப்பதே மரபு………………. கள்ளிக்காட்டு திருமணங்களுக்கு பகல் முகூர்த்தமெல்லாம் வசதிப்படாது. அவரவர்கள் வேலை முடித்துக் காத்தாட வந்து சேர ராத்திரிக் கல்யாணந்தான் லாயக்கு”.[28] அதனால் இரவுப் பொழுதில்தான் பெரும்பாலும் திருமணத்தை நடத்துவது வழக்கம். மாப்பிள்ளைக்கும், பெண்ணிற்கும் திருமணத்திற்குப் புத்தாடை எடுப்பதையும் கூறுகிறார்.

"கண்கள் கூசும் மஞ்சளில் வேட்டியும் சட்டையும்
ஒரே நிறத்தில்"[29]

என்றும்,

"மிளகாய் பழ நிறத்தில் பளீரென்று ஒரு பட்டு"[30]

என்றும் இருவரும் புத்தாடை அணிந்திருந்ததைக் கூறிச் செல்கின்றார். திருமணத்திற்குத் தேவையானவற்றில் மணமாலையும் ஒன்றாகும். மாலை முழுவதும் ரோஜாப் பூவால் கட்டப்பட்டிருக்கும். தோள் பகுதிக்கு ஒரு மூங்கில் பட்டை வைத்து, நெஞ்சில் மாலை உருளாதவாறு பட்டி வைத்து அடிப்புறத்தில் சம்பங்கிக் குஞ்சம் செய்து, மாலையின் குறுக்கும் நெடுக்கும் சரிகை சுற்றி, ரோஜாப் பூவின் மீது பன்னீர் தெளித்த மாலை அணிவிக்கப்படுகிறது.

வீட்டு வாசலில் போட்ட கொட்டகை பூவோடு கட்டப்பட்ட வாழைமரங்கள், ஒலி பெருக்கிகள் போன்றவைகள் கிராமத்துத் திருமண வீட்டை அலங்காரம் செய்வன. இவையே, திருமண வீட்டைத் திருமண வீடாகக் காட்டும். மணமகனுக்கும், மணமகளுக்கும் அமர இரண்டு நாற்காலிகள் 'கிழக்கு' பார்த்து போட்டு, அதன் மேல் துப்பட்டியைப் போர்த்தி மண நேரம் வந்ததும்,

"கெட்டுச் சத்தம் ஊர் பிளக்க - குலவைச் சத்தம் வான் கலக்க – பாறைகள் கசிவது போல் பேய்த்தேவரும் அழகம்மாவும் கண்கசக்க தாலிகட்டி, மாலைமாற்றி ஊர் பெருசுகளின் காலில் விழ, அவர்கள் மணமக்களுக்கு நெற்றியில் திருநீறு இழுகிவிட முடிந்தது சடங்கு"[31]

என்கிறார். திருமணம் என்பது இன்னொரு உயிரின் உடல், மனசு, வயிறு ஆகிய மூன்றையும் திருப்தி செய்வது ஆகும். இன்று மாறிவரும் சமூகத்தில் மண வாழ்க்கை என்பது. ஆண்களால் கிட்டும் சௌகரியங்களைப் பெண்ணும்,

பெண்ணால் கிட்டும் சௌகரியங்களை ஆணும் சட்டப்படி திருடிக் கொள்ளும் சம்பிரதாயமாக இருக்கிறது. ஆனால் கிராமிய திருமண மரபுப் படியே இன்றும் தமிழகத்தின் பெரும்பாலான கிராமங்களில் மணம் நடக்கிறது.

**மறுமணம்**

கள்ளிக்காட்டு கிராம மக்களிடையே 'மறுமணம்' செய்து கொடுக்கும் பழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது. கள்ளிக்காட்டு இதிகாசத்தில் மொக்கராசுவின் தாயாகிய செல்லத்தாயி ஒரு விதவைப் பெண். அவளுக்கு இரண்டாம் திருமணம் அதாவது மறுமணம் செய்யப் போவதை அறிந்த மொக்கராசு தன் தாயிடம் 'ஆத்தா ஒனக்குக் கல்யாணமா'? என்று கேட்க அவள் மனமுடைந்து "மறுமணம் என்பது குலவழக்கத்தில் வழிவழியாக வந்தது தானே! வழி மாறிய வழக்குமில்லையே"[32] என்று கூறுவதன் மூலம் மறுமணம் கள்ளிக்காட்டு மக்களிடையே இருந்ததை அறிய முடிகிறது. வாழாவெட்டியாக இருக்கும் பெண்ணுக்கும் மறுமணம் செய்து வைக்கும் பழக்கமும் கிராமங்களில் இருந்து வருகிறது. பேய்த்தேவரின் மகன் சின்னுவின் மனைவி கலுவாயி ஏழு வருடமாக வாழா வெட்டியாக இருக்கிறாள்; அவளது பெற்றோர் சின்னுவின் தந்தையான பேய்த் தேவரிடம்,

"ஒண்ணு அவளவச்சுப் பொழைக்கணும்; இல்லாட்டி தாலிய வாங்கிட்டு ஆள விட்ரணும்; நீங்க தாலிய வாங்கிக்கிட்டா அன்னைக்கே இன்னொரு தாலிகட்டத் தாய்மாமன்காரன் தயாராயிருக்கான்"[33] என்று கூறுவதிலிருந்து மறுமணம் என்பது கள்ளிக்காட்டு கிராம மக்களின் வாழ்க்கை முறையில் ஒன்றிப்போய் உள்ளது புலனாகிறது.

## தாலியின் மகத்துவம்

'ஒரு சமுதாயத்தின் மேம்பாடு அதுபோற்றிப் பின்பற்றும் பண்பாட்டுக் கூறுகளைப் பொறுத்தே அமையும்''[34] என்கிறார். பெ. தமிழ்ச்செல்வி. தமிழகத்துப் பெண்களில் மணமான மகளிர் தாலி அணியும் பழக்கம் இருந்து வருகிறது. பெண்கள் கழுத்தில் தாலி அணிவதால் மங்கலமும், சமுதாயத்தில் மதிப்பும் ஏற்படுகிறது. திருமணம் முடிந்த கருவாச்சியின் மணவாழ்க்கையில் முறிவு ஏற்பட்ட பின்பும் தாலியைக் கழற்றித் தர மறுப்பதை கருவாச்சி காவியத்தில் பிரதிபலித்துக் காட்டுகிறார்.

> ''என் உசுரே போனாலும் தாலிச்சரடு மட்டும் தரமாட்டேன்; தாலிச் சரடு வேணுங்கற ஆம்பள என் தலைய அறுத்தெறிஞ்சிட்டு அப்பறம் தாலியெடுத்திட்டுப் போகட்டும்''[35]

எனச் சொல்வதிலிருந்து தாலிக்குக் கொடுக்கும் மரியாதை அத்துடன் கற்புக்குக் கொடுக்கும் மரியாதையும் புலப்படுகிறது.

தமிழ்நாட்டில் 'தாலி' அணிவது மங்கலத்தின் வெளிப்பாடு. காலையில் விழித்ததும் தாலியை கண்களில் வைத்து ஒத்தியெடுக்கும் பழக்கம் தமிழக கிராமத்துப் பெண்களிடம் இன்றும் வழக்கத்தில் இருக்கிறது.

## கணவர் பெயர் சொல்லாமை

கிராமங்களில் வாழும் பெண்கள் தங்களின் கணவரின் பெயரை வாயால் உச்சரிக்கத் தயங்குவர். கணவரின் பெயரை உச்சரிப்பதை கௌரவக் குறைச்சலாகக் கருதினர். கணவனின் பெயரை உச்சரிக்காமல் இருப்பது

கணவனுக்கு அளிக்கப்படும் மரியாதையாகக் கருதினர். பழங்காலந்தொட்டு இன்றுவரை கிராமங்களில் இந்தக் கலாச்சாரம் காணப்படுகிறது. கணவனின் பெயரைப் பிறர் கேட்டால் அருகாமையிலுள்ள குழந்தையை, அல்லது மனிதர்களை அழைத்துச் சொல்லச் சொல்வதும், அல்லது வேறு பொருளைச் சொல்லி அதன் மூலம் பெயரைத் தெரியப்படுத்துவதும் உண்டு. கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேய்த்தேவர்க்கும் - அழகம்மாளுக்கும் திருமணமான சமயத்தில் பச்சைக் குத்தும் குறத்தியிடம் தன் கணவனின் பெயரைக் கீழ்க்கண்டவாறு சொல்லுகிறாள் அழகம்மா.

பச்சைக் குத்தும் பெண் “ஒம் புருசன் பேர் என்ன?” அதான் வேப்பமரத்துல வந்து ஆடுமே’ன்ருக்கா. வெளங்கல வந்தவளுக்கு. சுடுகாட்ல ஆடுமே’ன்னும் சொல்லிப் பாத்திருக்கா. புரியல குறத்திக்கு. கடைசில முடிஞ்ச தலய அவுத்துப் போட்டு ஆடிக்காட்டியிருக்கா. ஓ ‘பேயா’ன்னு கேட்ருக்கா குறத்தி. ஆமா! ஆமா! அதோட தேவரச் சேத்துக்கன்னு சொல்லிருக்கா. அவ “பேயி-தேவரு” ரெண்டையும் சேத்துப் “பேய்த் தேவருன்னு எழுதிட்டுப் போயிட்டா. அந்தப் பேரு குத்துன கையத்தானய்யா அவ தலைக்கு வச்சுப் படுப்பா”[36] கிராமங்களில் இந்த மரபு காலங்காலமாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

## வழக்குச் சொற்கள்

மனித உள்ளத்தின் ஆழத்தையும், அங்கே தோன்றி எதிரொலிக்கும் பல்வேறு இதயங்களின் ஒலிகளையும் வாழ்க்கையின் பல்வேறு நிலைகளையும், இன்ப துன்பங்களையும், வாழ்வியல் போராட்டங்களையும் எதிரொலிப்பன

இலக்கியங்களாகும். ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தை, பண்பாட்டை, பழக்க வழக்கத்தினை, வரலாற்று உண்மைகளை, கலாச்சாரங்களை வெளிக்காட்டும் வகையில் இலக்கியத்தில் உணர்ச்சி, ஓசை, இன்பம் ஆகியவற்றை வெளிக் கொண்டு வருவதில் வழக்குச் சொற்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. இந்த வழக்காறுகள் வாழையடி வாழையாக, வாய்மொழியாகவே பரப்பப்பட்டு வருகின்றன.

வழக்குச் சொற்கள் இலக்கியச் சொற்கள் ஆகாது என ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. காலப்போக்கில் இலக்கியச் சொற்கள் வழக்கொழிந்து போவதும், வழக்குச் சொற்கள் இலக்கியமாவதும் இயல்பு. மதுரை வட்டார வழக்கு மொழியை கள்ளிக் காட்டு இதிகாசம், கருவாச்சி காவியத்திலும் தெளிவாகக் காண முடிகிறது.

‘‘ஏலே மொக்கராசு .......... அழுத்திப்புடிடா மேழிய உழுது வாடான்னா........... குண்டக்க மண்டக்காக்கோடு போடுறவன்’’[37]

‘‘ஆமா இவரு பெரிய சாணவாக்கியரு சூச்சி பண்றாகல்லாமில்ல........ சூச்சி. கொண்டாடா இப்படி’’[38]

‘‘ஏலே கூரு கெட்ட குப்பாயி மகனே..... நாற்காலியக் கெழக்க பாத்துப் போடுறா கேண’’[39] முதலானவற்றைச் சான்றாகச் சுட்டலாம். வட்டார வழக்குச் சொற்கள் அதிகம் கலந்து இலக்கியங்கள் எழுதப்படும் போக்கு தற்காலத்தில் அதிகரித்துக் கொண்டே வருவது புலப்படுகிறது.

**உணவு**

மனிதர்களின் அடிப்படைத் தேவையில் உணவே முதலிடம் பெறுகிறது. மனித வாழ்விற்கும், உழைப்பிற்கும் உணவே அடித்தளமாகிறது. இதனை நன்குணர்ந்த திருமூலரும் 'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்' என்கிறார். புதிய ஆத்திச்சூடி படைத்த பாரதியும் 'உடலினை உறுதி செய்' என்றும் கூறியுள்ளார். கிராமங்களில் வாழும் மக்கள் உழவுத் தொழில் செய்து வருபவராதலால் நெல்லும், சோளமும், கேப்பையும், கம்பும் அவர்களின் உணவாகப் பெரும்பாலும் அமைந்தன. மீன் கருவாடு, கறி போன்றவையும் உணவுப் பொருளாகக் கொள்ளப்பட்டன. வயல்களுக்கு உழவு செய்யச் செல்பவர்கள் கஞ்சி கொண்டு செல்வதுண்டு.

கள்ளிக்காட்டில் விவசாயம் செய்யும் ஒவ்வொரு மனிதனும் உண்ணும் உணவு 'கேப்பைக் களியும், கூழ், களி சோறு இவற்றில் ஏதாவது ஒரு உணவு தயாரிக்க மட்டுமே வசதிப்பட்ட உழைப்பாளிகள் 'மிளகாய் - வெங்காயம் - துவையல் - கருப்பட்டி - வெல்லம் - வற்றல் - தேங்காய்ச்சில் இவற்றில் ஒன்றை முந்தைய ஒரே வகை உணவுக்கு மாற்றமாகத் தொட்டுக் கொள்வது மறுமாற்றம். அது வட்டார வழக்கில் மறுமாத்தம். இதில் இரண்டு ''மறுமாத்தம்'' வைத்துச் சாப்பிடுகிறவன் வசதியானவன், சொகுசுக்காரன்''[40] என்று கூறுகின்றார்.

இதுதவிர கானத் துவையல் கஞ்சிக்குப் பயன்படுத்துகின்றனர். இயற்கை தந்த செடிகளிலிருந்தும் மறுமாத்தம் தயாரிக்கின்றனர். மொக்கராசு ''கட்டக்கடகா பறித்தான். கான மிளகாய்ச் செடியிலிருந்து பிஞ்சும் காயும் பிடுங்கினான். இரண்டையும் பாறையில் வைத்துக் கல்லொன்று எடுத்துக் கால் சட்டையில்

துடைத்துத் தட்டினான். தும்பைச் செடி பறித்து அதில் சாறு பிழிந்தான். தும்பைச் செடி பார்த்தது உப்பின் உத்தியோகத்தை, மூன்றையும் ஒன்று சேர்த்ததில் மறுமாத்தம் தயார்.[41]

இதன் மூலம் இயற்கையில் கிடைக்கும் பொருள்களையும் உணவுப் பொருளுக்கு மாற்றாக மறுமாத்தத்திற்குப் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பது புலனாகும்.

உணவு வகைகளில் “நெல்லுச் சோறும், கோழிச் சாறும் தான் கள்ளிக்காட்டில் உயர்ந்த பட்ட உபசாரம். ஒரு வீட்டில் கோழிச்சாறு கொதிப்பதே ஒரு கவுரவம் தான். கோழிக் குழம்பு என்பது அன்றாடமில்லை; அபூர்வம். ஒரு வீட்டில் நல்ல சோறு என்பதைப் பொங்கலுக்கோ ஆடிக்கோ தீபாவளிக்கோ தான். அல்லது ஆள் சீக்காய்க் கிடந்தாலும் அந்த மரியாதை கிடைக்கும். ஒரு பிள்ளைத்தாய்ச்சிக்குக் கோழிச்சாறு என்பது உணவு மட்டுமல்ல, மருந்தும் கூட”[42] என்கிறார். இவற்றின் மூலம் கிராமப்புற மக்களின் உணவுப் பழக்கத்தை அறிந்து கொள்ள முடிகிறது. ஒருவனின் பொருளாதார வசதிக்கேற்ப உணவுப் பழக்கம் அமைவதை அறிய முடிகிறது. தமிழரின் உணவுப் பழக்கவழக்கங்கள் பெரும்பாலும் நிலத்தின் தன்மையை ஒட்டியே அமைந்திருந்தன. வாழ்க்கைச் சூழல், நில அமைப்பு இவற்றைக் கொண்டே உணவு முறைகள் அமைந்து இருந்தன.

**உடை**

மிகப் பழமையான காலத்தில் தமிழர்கள் இரண்டு ஆடைகளை மட்டும் உடுத்தியிருந்ததைச் சங்கப் பாடலின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

“கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே”[43]

ஆண்கள் இடையில் ஓர் ஆடையும், மேலே ஒரு துண்டும் அணிந்த வழக்கத்தைக் காணலாம். பெண்கள் மேற்சட்டை அணிந்திருக்கவில்லை. ஆண்கள் இடையில் கச்சை அணிந்ததாக மதுரைக் காஞ்சி

“திண்டோர்ப் பிரம்பிற் புரளும் தானைக்
கச்சம்நின்ற கழல்தயங்கு திருந்தடி”[44]

எனக் குறிப்பிடுகிறது கிராமப்புற மக்கள் நாகரிகத் தாக்கம் அதிகம் பெறாதவர்களாய் இருப்பதனால் பழம்பண்பாட்டின் அடிப்படையில் ஆடை உடுத்துவதைக் காணலாம். பெண்கள் வசதிக்கு ஏற்ப கண்டாங்கிச் சேலை, பட்டுச்சேலை அணிகின்றனர். கண்டாங்கிச் சேலையில் பல வண்ணங்கள் காணப்படுகின்றன. கிராமப்புறப் பெண்கள் சேலைகள் மட்டுமே அணிந்த குறிப்புகள் காணப்படுகின்றன.

வாழ்க்கையில் மனிதனின் அடிப்படைத் தேவைகளில் உணவிற்கு அடுத்தாற்போல இடம் பெறுவது உடையாகும். உடை என்பது மனிதர்களுக்கு அலங்காரம் மட்டுமல்ல.... மானம் காக்கும் கவசமாகும். கருவாச்சி காவியத்தில் கிராம மக்கள் உடை உடுத்துவதைக் காட்சிப் படுத்தியுள்ளார். சான்றாக

‘மகனுக்கு ஒரு வெள்ளவேட்டி மஞ்சச் சட்டை - கோவம்பழ நெறத்துல மருமகளுக்கொரு சீல - சட்டிபான நெறத்துல பேரனுக்கொரு சட்டை – வெள்ளாவியில இல்ல – தீயில வச்சாலும் நெறம் மாறாத மாதிரி பச்சைப் பசேலன்னு பேத்திக்கொரு பாவாடை”[45]

என்னும் பகுதியைக் குறிக்கலாம்.

கிராமங்களில் வாழுகிற ஆண்கள் வேட்டி அணிகின்ற வழக்கத்தினைக் கள்ளிக் காட்டு இதிகாசத்தில் பதிவு செய்துள்ளார். பேய்த் தேவர் தன் மகள் செல்லத்தாயின் இரண்டாவது திருமணத்தின் போது உடுத்திய உடையினை

> ‘‘உழவு காட்டு உழவனைப் போல முழு வேட்டியில் முக்கால் கோவணம் கட்டிக் கொண்டு, ஓரத்தில் மஞ்சள் தடவிய புதுச் சட்டை போட்டுக் கொண்டு…’’[46]

என்று குறித்துச் சென்றுள்ளார்.

பேய்த் தேவரின் உடை பண்பாட்டையும், கிராமங்களில் வசதி படைத்தவர்களும், ஏழைகள் முக்கிய விசேச நாட்களில் பட்டு அணியும் பழக்கத்தினை உடையவர்களாகவும் இருப்பதையும் பதிவு செய்துள்ளார். செல்லத்தாயி இரண்டாவது திருமணத்தின் போது,

> ‘‘மிளகாய்ப்பழ நிறத்தில் பளீரென்று ஒரு பட்டு கட்டியிருந்தாள். ஆண்டிபட்டி நாடார் கடைக்குக் கட்டுச்சோறு கட்டிப் போய் ஆற அமர அலசி எடுத்து’’[47]

என்னும் பகுதி இங்குக் குறிக்கத்தக்கது. இதன்மூலம் பெண்கள் பட்டுச்சேலை கட்டும் பழக்கத்தினையும் எடுத்துக் கூறியுள்ளார். மங்கலகரமான நிகழ்வுகளில் மட்டுமே விலையுயர்ந்த உடையினைக் கிராம மக்கள் அணிந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**உறைவிடம்**

கிராமங்களில் வாழும் மக்களில் பெரும்பாலானோர் உழைப்பாளிகள். வசதியற்றவர்கள். குடிசைகளில் வாழ்பவர்கள். மண்வீடு கட்டி வாழும் குடிசைவாசிகள். தங்களுடைய வீட்டைத் தாங்களாகவே கட்டி வாழ்பவர்கள்.

இதனைக் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். பேய்த் தேவரும் அழகம்மாளும் சேர்ந்து வீடு கட்டியதை,

"வெளையாட்டா வீடு கட்ணோம். நாயக்கர் அய்யா அண்ணந்தம்பி ஒறவு இல்ல. மாமன் மச்சான் செயில்ல. தவிச்ச வாய்க்குத் தண்ணி தர ஆளில்லை. அவுளும் நானுமா வீடு கட்ணம்யா. நாந்தான் கொத்தனாரு. அவதான் சித்தாளு. அவ மண்ண மிதிச்சு மிதிச்சுக் கொழச்சுக் குடுப்பா...."[48]

என்று ஆணும், பெண்ணும் சேர்ந்து வீடுகட்டியதை எடுத்துக் கூறிய கவிஞர், மேலும்,

"கரையான்களாகக் கூடிப் புத்து கட்டிக்கிட்ட மாதிரி சனங்களாகக் கூடி ஆளுக்கொரு வீடுகட்டிக்கிட்டாக. காரவீடு - கூரவீடு – ஓட்டு வீடு – தகரவீடு – குச்சுவீடு – குடுசுவீடுன்னு எண்ணி நூத்தி இருவது வீடுக"[49] என்று கிராமங்களில் உள்ள வீடுகளையும், அதன் அமைப்புகளையும் அவரவர்களின் வசதிக்கு ஏற்ப வீடுகட்டியதையும் குறிப்பிட்டுள்ளார்.

### விருந்தோம்பல்

முகம் தெரியாத ஒருவனின் பசிக்கு உணவளிக்கும் போது ஒருவன் சிறந்த பண்பாளனாகிறான். ஒரு சமுதாயத்தின் உன்னதமான பண்பாட்டிற்கு அளவுகோலாக இருப்பது விருந்தோம்பல் பண்பு தான். பெண்களே விருந்தோம்பல் பண்பில் பெரும்பங்காற்றினர் என்பது உண்மை. கருவாச்சி காவியத்தில் இந்தப் பண்பாட்டைப் பதிவு செய்கிறார் கவிஞர் வைரமுத்து. சுப்பஞ்செட்டியாரின் இரண்டாவது மகள் கனகத்திற்குத் திருமணம் நடைபெறுகிறது. திருமண விருந்து பரிமாறுவதை எடுத்துக் கூறுகிறார்.

“விரிச்ச ஆமணக்கு எலையில கேப்பக் களிய அகப்பையில அள்ளி மொத்த மொத்தமா மோந்து போடவும் அவுஅவுக பருப்புச் சாம்பாருக்குப் பள்ளம் பறிச்சுக்கிட்டாக நடுவுல. கேப்பக் களிச் சூட்டுல உருகி ஓடுது உள்ள போட்ட நெய்யி. யார் யாருக்கு ஜாதகத்துல அந்த வருசம் சுக்கிரதெசைன்னு போட்டுருக்கோ அவுகளுக்கு மட்டும் விழுகுது முருங்கக்காத் துண்டும், கத்திரிக்காக் கீத்தும்”[50]

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் தன் மகனின் மாமனார் கலுவத் தேவர், பேய்த்தேவர் வீட்டிற்கு வந்த போது,

‘வராதவக வந்திருக்கிக இருந்து சாப்பிட்டுட்டுத் தான் போகணும், யம்மா மின்னலு! அந்த வெடக் கோழியப் புடிச்சு அடி! ஏ முருகாயி! கல்லுக்கில்லுப் பாத்து நெல்லுக் கஞ்சி காச்சு”[51]

என்கிறார். வறுமையில் வாடிய போதும் வீட்டிற்கு வந்தவர்களுக்கு உணவளித்து விருந்தோம்பும் கிராமியப் பண்பாட்டை எடுத்துக் கூறுகிறார்.

பழந்தமிழர்கள் கடைப்பிடித்த உணவு, உடை, பழக்க வழக்கங்கள், சிந்தனைகள், விருந்தோம்பல் போன்ற எல்லாப் பண்புகளையும் அழிக்காமல் இன்றளவும் பாதுகாத்து வருவது கிராமங்கள் என்பது ஒரு தனிச்சிறப்பாகும்.

## மார்க்கத் திருமணம் (கல்யாணம்)

ஆண்குழந்கைளுக்குச் “சுன்னத்” செய்வது இஸ்லாமியர்களுக்கு ஓர் முக்கியக் கடமையாகும். “ஆண் குழந்தைகளுக்கு ஏழு வயதிற்குள் சுன்னத் செய்துவது சிறந்ததாகும்”.[52]

மதுரை மாவட்டக் கிராமங்களில் இஸ்லாமியர்கள் அல்லாதவர்களும் இந்தச் சடங்கு முறையினைப் பின்பற்றுகின்றனர். அந்தச் சடங்கு நிகழ்ச்சியினைப் பற்றி விவரிக்கும் போது,

> ''ஆணுக்கு உண்டான அந்த உறுப்பு மேல்தோல மட்டும் எடுத்து விட்டுட்டா நாளப்பின்ன நல்லது. 'அங்க' அழுக்குச் சேராது. சிக்கலான இடம்பாருங்க; சீக்கு வராது. ஒரு வயசுப் பயலுக்கு ஒரு நாவிதரு அந்தத்தோல வைத்திய முறைப்படி நீக்கி விடற வைபவந்தான் 'மார்க்கக் கல்யாணம்''[53]

என்கிறார். கிராமப்புற மக்களிடையே அறிந்தோ அறியாமலோ அறிவியல் குணங்கள் இரண்டறக் கலந்திருப்பது வரவேற்கக் கூடிய ஒன்றாகும். மார்க்க கல்யாணம் என்பது பருவமடைந்த பெண்ணுக்குச் சடங்கு செய்வது போன்று ஆண் குழந்தைகளுக்கும் நடக்கும் செயற்கையான செயல். பெண்ணுக்கு நடக்கும் திருமணச் சடங்கு மாதிரி வீட்டில் தோரணங்கள் கட்டி, மேளங்கள் முழங்க, குலவைவிட்டு, ஒலிக்குழாய் கட்டி, பாடல்கள் இசைத்து மகிழ்ச்சியாகக் கொண்டாடும் விழா. கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் பேய்த்தேவர் தன்னுடைய பேரன் மொக்கராசுவுக்கு மார்க்கக் கல்யாணம் செய்ய நினைத்தார். கையில் காசு இல்லை. இருந்தாலும் அந்தக் கடமையைச் செய்தால், ஒரு கடமை முடிந்தது மாதிரியும் இருக்கும். கிடைக்கிற மொய்யில் கிணறு வெட்டின மாதிரியும் இருக்கும் என்று நினைத்து அதற்கான வேலையில் ஈடுபடுகிறார். இதைப் பற்றி கவிஞர் கூறும்போது, 'இந்தா .... இந்தா இம்புட்டுத்தான். பல்லக் கடிச்சிப் பொறுத்துக்கப்பா, முடிஞ்சுப் போச்சு, கத்திய எடுத்து இழுத்துப் புடிச்சு தோல் மேல லேசா ஒரு சுண்டு சுண்டினான் சவட்டையன். துண்டா ஓடி

விழுந்துபோச்சு தோலு. சொதசொதன்னு ரத்தம் கொட்டுச்சு"[54] என்று கூறுகிறார். மத அடிப்படையில் இச்சடங்கினைப் பார்க்காமல் மருத்துவ அடிப்படையில் பார்ப்பது உடல் நலத்திற்கு நன்றாகும் என்பது மருத்துவர்களின் கருத்தாகும்.

## காது குத்துவிழா

சங்க இலக்கியங்கள் குழை, தோடுகளைப் பற்றிக் குறிப்பதால் பழங்காலந்தொட்டே கிராமங்களில் காது குத்தும் வழக்கம் இருந்தமை புலப்படுகிறது. ஆனால் இதனை விழாவாகக் கொண்டாடியதற்குரிய குறிப்புக்கள் இல்லை. ஆனால் இன்று குழந்தைக்குக் காது குத்துவதை ஒரு விழாவாக நடத்துகின்றனர். இருபால் குழந்தைக்கும் காது குத்தும் வழக்கமிருந்தாலும் பெண்குழந்தைக்குக் காது குத்துவதையே சீரும் சிறப்புமாகக் கொண்டாடுவர். இதனைக் கவிஞர்,

> "காது குத்துங்கிறதுக்கு ரெண்டு மூணு கணக்கு இருக்கு ஊர் நாட்ல. காது குத்திட்டா ஒரு ஒச்சமாகிப் போகுமாம் பிள்ளைகளுக்கு. ஒச்சமான பிள்ளைகள எமன் ஏறெடுத்தும் பாக்கமாட்டானாம். காது குத்துக்கு இது ஒரு சாமி கணக்கு.
>
> காதுல ஓட்ட போட்டதும் சலசலசலன்னு ஒழுகுதா இல்லையா ரத்தம் .... ரத்தம் ஒழுங்கு மொறையா இருந்தா செத்த வெடத்துல ஒறையணும். அப்படி ஒறையற சக்தி இருக்கா இல்லையான்னு சோதிக்கறது தான் காது குத்து; இது ஒரு வைத்தியக் கணக்கு.
>
> ரெண்டுமில்லப்பா! அப்பன் சொத்துல பங்கு இல்லாத பொம்பள பெத்த பிள்ளயச் சாக்கு வச்சு, தனக்கு உண்டானதுல ஒரு பங்கத் தாய்மாமன்

மூலமா தண்டம் போட்டு வசூல் பண்றது தானப்பா காது குத்து ....... இது காசு பணக் கணக்கு"[55]

எந்தக் கணக்கா இருந்தாலும் எழுதுகிற மொய்க்கு நெஞ்சுமுட்டத் தின்பது சொந்தபந்தம் போடும் சோற்றுக் கணக்கு. காதுகுத்து விழாவில் பெரிதும் மதிக்கப்படுபவராகத் தாய்மாமன் விளங்குவார். இப்படி கிராமங்களில் நடைபெறும் காதுகுத்து விழாபற்றிப் பல கணக்கினை தன் படைப்புகளில் எடுத்ததாள்கிறார் கவிஞர்.

## தாய் மாமன் சீர் செய்தல்

தாய்மாமன் காதுகுத்துவிழாவிற்கு வரும்போது சிறப்பான முறையில் சீர் செய்கிற வழக்கம் தொன்றுதொட்டுக் காணப்படுகிறது. தாய்மாமன் சீராகப் பச்சை நெல், வாழைப்பழத்தார், தேங்காய், எள்ளு, சர்க்கரை, வெற்றிலை, செங்கரும்பு, பாக்கு, சந்தனம், துணிகள் போன்றவற்றைத் தனித்தனித் தாம்பாளத் தட்டுகளில் கொண்டு வருவார். காது குத்துவதற்குத் தாய்மாமன் தங்கத்திலான அணிகலன்களைச் சீர்பொருளாகக் கொடுப்பதும் உண்டு. காது குத்தும் போது தாய்மாமன் மடியில் வைத்துத்தான் காதுகுத்துவர். காதுகுத்து விழாவின் முக்கியமான சடங்காக இது விளங்குகிறது. இதனைக் கவிஞர் வைரமுத்து கருவாச்சி காவியத்தில் எடுத்துக் கூறுகிறார்.

"பதினோரு மரக்கா பச்ச நெல்லு, வாழப்பழத் தாரு வகைவகையாச் சீரு. அய்யம்பாளையம் தேங்கா, பிறந்தவளுக்குச் சீல துணிமணி, மருமகளுக்குக் கொலுசுமணி எல்லாம் சொமந்து சொக்கத் தேவன் பட்டியையே ஒரு சுத்துச் சுத்தி சாதி சனமே பாத்துக்க.... ஆடுமாடே

பாத்துக்க ...... கோழி குருமானே பாத்துக்க'ன்னு தாம்பாளத் தட்டத் தலமேல சொமந்து வாராக தாய்மாமன் வீட்டு ஆளுக....

மொட்டையடிச்ச தலையில சந்தனம் அப்பி, பகுமானமாப் பட்டுப்பாவாடை சட்டைபோட்டுத் தாய்மாமன் மடியில உக்காரவச்சு பொன்னாசாரி கடுக்கன எடுத்துத் திருகாணி கழத்தவும் கண்ணுல தண்ணி தவ்வ ஆரம்பிச்சுருச்சு."[56]

என்கிறார். தாய்மாமன் குழந்தைக்குப் பட்டுப்பாவாடைத் துணியையும் சீராகக் கொடுப்பதைக் காணலாம். சீர் செய்யாத தாய்மாமனைக் கேவலமாகப் பேசுகிற வழக்கம் கிராமப்புறங்களில் இன்றும் காணப்படுகிறது. தனி மனிதனுடைய உயர்வும் தாழ்வும் சீர்செய்தலில் காணப்படுகிறது. காதுகுத்து விழாவில் உறவினர்களும், மற்றவர்களும் சீரோ, மொய்யோ செய்தாலும் தாய்மாமன் சீரையே சிறப்பாகக் கருதுவர்.

## மொய் விருந்து

கிராமங்களில் திருமணவிழாக்களிலும், காதணி விழாக்களிலும், இவைபோன்ற பிற நிகழ்வுகளிலும், உறவினர்களும், நண்பர்களும் கலந்து கொண்டு, விழா நடத்தும் குடும்பத்தாரிடம் ஒரு குறிப்பிட்ட தொகையை அன்பளிப்பாக 'மொய்' என்ற பெயரில் அளிப்பது தமிழக மக்களின் மரபாகும். இது வாழ்த்து நிகழ்ச்சிக்கு வந்ததன் அடையாளமாக அளிக்கப்பட்ட சிறு தொகையாகும். குடும்பத்தில் மங்களகரமான நிகழ்ச்சிகள் நடத்த வாய்ப்பில்லாத சூழலில், தங்களின் பொருளாதார நெருக்கடிக்குத் தீர்வு காணவும் விருந்து நடத்தி "மொய் வசூலிப்பது வழக்கம். இந்த வழக்கத்தினை கள்ளிக்காட்டு

இதிகாசம் நாவலில் பேய்த்தேவர் தன் பேரனுக்கு ‘‘மார்க்கக் கல்யாணம்’’ என்ற பெயரில் வசூல் செய்ததைக் கூறுகிறார்.

‘இந்தப் பயலுக்கு மார்க்கக் கல்யாணம் பண்ணிட்டா என்ன? சரி! சரியான யோசன. அந்த அனாதப் பயலுக்கு ஒரு கடமையச் செஞ்சமாதிரியிருக்கும். கெடைக்கிற மொய்யில கெணறு வெட்டின மாதிரியும் இருக்கும்’’.[57]

கிராமங்களில் விருந்தினை உண்ட பிறகு மொய்ப் பணத்தைச் செலுத்திவிட்டுச் செல்லும் விழாவின் மூலம் ஒரு சடங்கும் நிறைவடைகிறது. அதோடு குடும்பத்தின் பொருளாதார நெருக்கடியும் ஓரளவு தீர்ந்து விடுகிறது.

## முதுமையைப் போற்றுதல்

இயந்திரத்தனமான உலகில் விரைந்து செயல்பட்டு வாழ்க்கையை விரைவுக்கு விற்றுவிட்ட இக்காலத்தில் முதியோர் பருவமே இருக்கக் கூடாது என்று எண்ணும் கலிகாலம் இது. தள்ளாத வயதில் தாய், தந்தையரை அடிமாடுகள் போல் முதியோர் இல்லம் அனுப்புபவர்களுக்காகவே, வயதானோரின் சிறப்பைக் கவிஞர் ‘‘முதுமைக்கு வணக்கம்’’ என்ற கவிதையில் எடுத்துக் கூறுகிறார்.

ஆறில்லாத ஊர் பாழடைவது போல் பெரியோர் இல்லாத வீடும் பாழாய்ப் போய்விடும். பழமொழியின் வாயிலாக அனுபவ மொழி பேசும். இருமலின் செலவில் இரவு முழுவதும் வீட்டுக் காவல் செய்யும். வீட்டிற்கானப் பாதுகாப்பை உறுதி செய்யும்.

‘கணவன் மனைவி சண்டை சத்தம்
வெளியேற விடாமல்
வெற்றிலை உரலில் போட்டிடிக்கும்.’’[58]

நான்கு சுவர்களுக்குள் நடக்கும் கருத்து வேறுபாட்டினைக் கூட நான்குபேர் கேட்காத அளவுக்கு நாகரிகம் காக்கும் என்று முதியோரின் உதவிகளை வரிசைப்படுத்திக் கொண்டு வந்த கவிஞர்,

‘இவையாவும் காரணங்களின்
குறைந்த பட்ச மெனினும்
அதிகபட்சமாய் -
சாவுக்கு அழுகை வருமா என்று
சோதிக்க உதவும் என்றேனும்’’[59]

என்று குறிப்பிடுகிறார். முதியோரைப் புறக்கணிக்கும் இளைய தலைமுறையினர் அந்தப் பண்பாட்டுப் பெட்டகங்களைப் பாதுகாக்க வேண்டும் என்கிறார். பெரியோர்களின் அரவணைப்பின்றித் தவிக்கும், வளர்ந்து வரும் இளைய சமுதாயம் தடுமாறும் இடங்கள் பல. அதனைத் தடுக்க முதுமையைப் பேணுவோம். முதுமையைப் பேணினால், முதுமையின் அனுபவம் நம்மைப் பேணும்.

## பிறர்க்கென வாழ்தல்

தனக்கென வாழாமல், பிறர்க்கென வாழ்பவரைப் பெருந்தகையாளர் என்பர். தனக்கென வாழ்வதைத் தன்னலம் என்பர். பிறர்க்கென வாழ்வதைப் பொதுநலம் என்பர். தன்னலத்தோடு வாழ்பவரை உலகம் என்றுமே நினைத்துக் கொண்டிருக்காது. பொது நலத்தோடு வாழ்பவரையே உலகம் ஊழிக் காலம் வரை நினைக்கும். பிறருக்காக உழைக்க வேண்டும், வாழ வேண்டும். இதுவே மனிதப் பண்பு. இப்பண்பினைப் பெற்ற சான்றோர்கள் தான் இறந்தும் இறவாத புகழினைப் பெற்றுள்ளார்கள். உலக மக்களில் பொதுநலத்தோடு வாழ்பவர்களை விடத் தன்னலத்தோடு வாழ்பவர்களே அதிகம். ஆனால் கிராமப்புற மக்களிடத்தில் தன்னலத்தைவிடப் பொது நலனே மிகுதியாக இருக்கும்.

இப்படிப்பட்டப் பண்பாட்டைக் கருவாச்சி காவியம் வாயிலாகக் கவிஞர் வைரமுத்து எடுத்துக் கூறுகிறார்.

கருவாச்சியின் தந்தை செய்த உதவி காலங்கள் பல கடந்தும் கருவாச்சிக்கு வந்து உதவுவதை உருமாப் பெருமாத் தேவர் சொல்கிறார். தன் உழவுக் காட்டை விடுத்து, என் காட்டை உழுது தந்த செயலை,

"ஊரே ஓடி ஓடி உழுது வெதைக்குது, நான் கால்ல கட்டி வந்து காயச்சலோட படுத்திருக்கேன். அன்னைக்கித் தன் காட்டை விட்டுட்டு என் காட்டை உழுது குடுத்தவனம்மா ஒந் தகப்பன், வீண் போகுமா தகப்பன் செஞ்ச தர்மம்"[60] என்று குறிப்பிடுகிறார்.

பிறர்க்கென உதவி செய்து வாழும் பெருந்தன்மையைத் தமிழர்கள் தலைசிறந்த அறமாகக் கருதியிருக்கின்றனர். மனிதர்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு ஒத்து வாழ்வதற்கு இந்தப் பண்பே பெருந்துணையாக நிற்கும். நாம் துன்புறும் போது, நமக்கு உதவியவர்களை மறக்காமல் இருக்கும் பண்பு கிராமப்புற மக்களிடம் இன்றும் காணப்படுகிறது. தான் துன்பத்தை ஏற்று, பிறருக்கு இன்பத்தை நல்க வேண்டும் என்னும் உண்மை புலப்படுவதைக் காண முடிகிறது.

## கிராமியப் பழக்க வழக்கம்

கிராமத்தில் வாழும் விவசாயிகள் உணவு உண்ணும் பொழுதுக்கு முன்போ, அல்லது நீராகாரம் அருந்துவதற்கு முன்போ தங்களுடைய கைகளால் பல்லினைத் துலக்குவது வழக்கம். கைவிரல்கள், அல்லது மெல்லிய மண்துகள்கள், அல்லது ஆலமரத்தின் விழுதுகளோ, அல்லது வேப்பமரத்தின்

குச்சிகளை வைத்து பல்துலக்குவது வழக்கம். இதற்குக் காரணம் வாய் தூய்மையாக இருக்க வேண்டும் என்பதே. இதனால் தான்,

'ஆலும் வேலும் பல்லுக்குறுதி' என்று சொல்லும் வழக்கம் இன்னும் கிராமங்களில் நடைமுறையில் இருக்கிறது. கவிஞர் வைரமுத்து இதனையே

"வாய் நீராடும்
வாய்ப்புள்ள
போதெல்லாம்
சுட்டுவிரல் கொண்டு
தொட்டழுத்து ஈறுகளை
பரவும் ரத்தம் பலம்"[61]

என்று புலப்படுத்துகிறார். இதன்மூலம் பற்களில் மூலம் வரும் நோய்கள் வராமல் தடுக்கமுடியும் என்பதனைக் கிராம மக்கள் நம்புகின்றனர்.

## தீட்டுணர்வு

தீட்டுணர்வு என்பது கூடிவாழும் சமூகத்தில் எவை செய்யக் கூடாதவை, எவை விரும்பத் தகாதவை, எவை பொறுத்தமற்றவை, எவை புனிதமற்றவை, எவை தூய்மை அற்றவை என்று நினைப்பவைகள் ஆகும்.

கிராமங்களில் உயிரிழப்பு நடந்துவிட்டால், அந்த ஊரில் நடக்கும் திருவிழாக்களில் இழப்பு நடந்த வீட்டினர் கலந்து கொள்வதில்லை. உயிரிழப்பு நடந்ததைத் தீட்டு என்று கருதுகின்றனர். பேய்த்தேவரின் பேத்தி கிணறு தோண்டும் போது வைத்த வெடியில் சிக்கி இறந்து போனதால் திருவிழாக் கொண்டாடாத நிலையைக் கள்ளிக் காட்டு இதிகாசத்தில் கூறுகிறார்.

"பாரப்பா பேத்தி செத்துப் போனதால் இந்த வருடம் திருவிழா இல்ல பேய்த் தேவர் வீட்டுக்கு"[62]

என்ற வரிகளின் மூலம் திருவிழா என்பது புனிதமானது என்றும், உயிரிழப்பு தீட்டு என்றும் கிராம மக்கள் கருதுகின்றமை புலனாகிறது. தம்மை விட்டுப் பிரிந்து போன உயிருக்காக வருந்துவதோடு, அதனைத் தீட்டாகவும் கருதுகின்றனர்.

## பகுத்தறிவுச் சிந்தனை

அறிவியலின் வளர்ச்சி விண்ணை முட்டும் அளவு வளர்ந்திருந்தாலும் அவற்றின் தாக்கம் கிராமங்களுக்கு இன்னும் சரியாகச் சென்று சேரவில்லை. நவீன அறிவியல் உலகில் விஞ்ஞானம் வேகமாய் வளர்ந்துள்ள இன்றைய காலகட்டத்தில் கூட கிராமங்களில் மனிதர்களுக்கு அல்லது கால்நடைகளுக்கு வரும் நோய்களையும் மற்றும், இன்ப துன்பங்களையும் இறைவனோடு இணைத்து சிந்தித்துப்பார்க்கின்ற மரபு மக்களிடையே காணப்படுகிறது. மனித சமூகத்திற்கு வரும் கடுமையான நோய்களுக்கு இறைவனின் கோப உணர்ச்சியே காரணம் என்று நம்புகின்றனர். அதனைப் போக்குவதற்குப் பரிகார பூஜைகளையும் செய்து வருகின்றனர். இப்படிப்பட்ட மனிதர்களின் போக்குகள் மானுடத்தின் வாழ்க்கைக்கு உகந்த செயல் அல்ல என்ற வருத்தத்தினை,

> ‘‘ஊமை ஜனங்களிவர்
> உள்ளொளி அற்றவர்
> பிணி வந்திறப்பினும்
> முனி வந்திறந்ததாய்
> முனகுவர்’’[63]

என்ற கவிதையின் மூலம் வெளிப்படுத்துகிறார். இவை போன்ற மூட நம்பிக்கையால் மக்களின் பகுத்தறியும் சிந்தனை மழுங்கடிக்கப் படுகிறது என்கிறார். கிராமப்புற மக்கள் இன்றும் மூடநம்பிக்கைகளில் மூழ்கிக்

கிடப்பதையும், அவர்கள் அதிலிருந்து வெளியே வர வேண்டும் என்ற வருத்தத்தையும் பதிவு செய்கிறார் கவிஞர் வைரமுத்து.

“பாற்கடலில், மனப்பேய்களையும் மனிதப் பேய்களையும் தவிர பிரபஞ்சத்தில் வேறு பேய்கள் இல்லை”[64]

என்று கூறிய கவிஞர், கள்ளிக்காட்டு இதிகாசத்திலோ, “பேயின்னு ஒண்ணு துண்டாவா இருக்கு? இல்ல நம்ம மாதிரி கண்ணு, காது, மூக்கு வச்சு அங்கங்க காடுமேடு தேடி அலையுதா? அதெல்லாம் ஒண்ணுங்கிடையாது. கடவுள் மாதிரியே பேயும் மனுசனால உண்டாக்கப்பட்டது. மனசுல நல்ல மனசுதான் கடவுள்; கெட்டது பேய், கடவுளுக்கு மாதிரியே பேய்க்கும் உருவம் குடுக்கிறது அவனவன் சொந்தச்சரக்கு”[65] என்கிறார். ‘இவ்வுலகில் பேய்கள் இல்லை’ அது மனிதர்களால் உருவாக்கப்படுகிறது என்பதைத் தன்னுடைய பகுத்தறிவுச் சிந்தனையால் விளக்குகிறார் கவிஞர்.

## மருத்துவ முறைகள்

பழந்தமிழர்கள் மருத்துவக் கலையிலே சிறந்திருந்தனர். பழந்தமிழர்களின் மருத்துவ அறிவு வளர்ச்சியே இன்று ‘சித்த மருத்துவம்’ என்றழைக்கப்படுகிறது.

“நோயும் மருத்துவமும் மனித இன்ப பண்பாட்டு வரலாற்றில் பிரிக்க முடியாதன ஆகும். நாட்டுப்புற மக்கள் கையாளும் மருத்துவ முறைகளை நாட்டுப்புற மருத்துவம் என்பர். ஒவ்வொரு மனித சமுதாயமும் தனக்கென ஒரு மருத்துவ அமைப்பு முறையைக் கொண்டுள்ளது.”[66]

சங்க இலக்கியமான நற்றிணை.

“அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது

மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன்''[67]

என்று மருத்துவத்தின் சிறப்பினை எடுத்துக் கூறுகிறது. வள்ளுவம்,

''நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்''[68]

என்கிறது. நோயைப் போக்கும் மருத்துவன் நோயின் தன்மையினை அறிந்து, அதற்கான காரணத்தை ஆராய்ந்து, அதைத் தீர்க்கும் வழியை அறிந்து பிழைபடாமல் செய்தல் வேண்டும் என்பதற்கு இணங்கக் கிராம மக்கள் தங்களின் அனுபவ அறிவு மூலம் கண்ட இயற்கை மருத்துவ முறையினைத் தன் படைப்புகளில் பயன்படுத்தியுள்ளார்.

**இருமல் - மருந்து**

கிராமங்களில் மனிதர்களுக்கு இருமல் வந்தால் சுக்கு-மிளகு-திப்பிலி தூதுவளைக் கசாயம், மிளகாய்-வெல்லம்-லேகியம், நாட்டுக்கோழி, நண்டுச்சாறு போன்றவற்றினை மருந்தாகக் கொடுப்பதுண்டு. சில நேரங்களில் இந்த மருந்துக்கும் கட்டுப்படாமல் தொடர்ந்து இருமல் நோய் இருந்தால் நரித்தோலைச் சுட்டுத் தேனில் குழைத்து கொடுப்பது வழக்கம். கள்ளிக்காட்டு இதிகாச நாவலில்

''நரித்தோலச் சுட்டுத் தேன்ல கொழச்சுக்குடு
அண்ணாச்சி. ஆயுசுக்கும் இருமல் அத்துப்போகுமில்லே''[69]

என்ற நாடாரின் கூற்று இருமலுக்கு நரித்தோலைத் தேனில் குழைத்துக் கொடுப்பது நல்லது எனப் புலப்படுகிறது. அதன்படியே பேய்த்தேவர் நரித்தோல் வாங்கி வந்து, தீயில் அதை கருக்கியும், கருகாமலும் சுட்டு நரித்தோல் தூளை வெற்றிலையில் வைத்து, தேனை ஊற்றிக் குழைத்துக் கொடுக்க ''போறேன்

போறேன்'' என்றது போய்விட்டது இருமல். அதைப்போல் இலேசான இருமலுக்கு சுக்கு, மிளகு, திப்பிலி, தூதுவளைக் கசாயம், மிளகாய், வெல்லம், லேகியம், நாட்டுக்கோழி, நண்டுச்சாறு ஆகியவை இருமலுக்குரிய மருத்துவ முறைகளாகக் கூறப்பட்டுள்ளன.

கிராம மக்கள் காயம் ஏற்பட்டால் எச்சிலைத் தொட்டு மருந்தாக வைக்கும் பழக்கத்தினை, காவி நிறத்தில் ஒரு காதல் நாவலின் மூலம் எடுத்துக் கூறியுள்ளார்.

> ''காயங்களுக்கு – உதட்டு எச்சிலால்
> மருந்திட்டு.........''[70]

என்ற இளங்கோ, மதுபாலாவின் உரையாடல் வழியாக விளக்குகிறார்.

## விஷக்கடி – மருந்து:-

கிராமங்களில் வாழும் மக்கள் எளிய மருத்துவ முறைகளைக் கையாண்டு, மருத்துவம் செய்து வருவது தொன்று தொட்டே கடை பிடிக்கப் பட்டு வருகிறது. பூரான்கடி, தண்ணீர்ப் பாம்பு கடித்தல், வெட்டருவாப் புண் போன்றவற்றிற்கு முதலுதவியாகச் சுண்ணாம்பு வைப்பது கிராமப்புற மக்களின் வழக்கமாகும். விளக்கு வைத்து விட்டால் ஒரு சில பொருள்களை வீட்டுக்கு வெளியே தருவதற்கு கிராமப்புற மக்கள் தயங்குவதுண்டு. ஆனால் வெளியே ஆபத்து என்றபோது அதனைப் பற்றிக் கவலைப் படாமல் கொடுத்து உதவி செய்வர். கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேய்த் தேவரின் மகள் செல்லத்தாயி சுண்ணாம்பு தருவதை மருத்துவ முக்கியம் கருதித் தருவதாக கருதலாம்.

“செல்லத்தாயி! செல்லத்தாயி! கிழவிக்குப் பூரான் கடிச்சிருச்சு, வெடுக்வெடுக்குன்னு வெசம் ஏறுது. கடிவாயில வைக்கணுமாம்! சுண்ணாம்பு குடு……சுண்ணாம்பு”[71]

என்ற பூதிவாடன் பொண்ணுவின் கூற்றுக்கு செல்லத்தாயி செவிச்சாய்த்தாள் என்பதை அறியும்போது பூரான் கடிக்கு சுண்ணாம்பு மருந்தாகப் பயன்படுவதை அறியலாம்.

பாம்புக் கடிக்கும் கிராமத்தில் எருக்கு இலை, ஆமணக்கு இலை, குப்பமேனி இலை, வேப்பம்பட்டை, மாட்டுச் சிறுநீர் ஆகியவற்றை ஒன்றாகக்கலந்து கொடுக்கும் வழக்கத்தினையும் பதிவு செய்துள்ளார். செவலக்காளையைப் பாம்பு கடித்து விட்டது என்று மொக்கராசு, பேய்த்தேவரிடம் சொன்ன போது,

“ஏலே மொக்க! எருக்கெல கொண்டாடா. அந்த ஆமணக்குல ஒண்ண ஒடி என்று உத்தரவிட்டார். குப்பமணித் தழையைப் பறித்துக் கொண்டே. வேப்பம்பட்டை தட்ட ஓடினார். எல்லாவற்றையும் ஒன்று கூட்டிக் கமலைக் கல்லில் தண்ணீர் ஊற்றித் தட்டினார். மாடு புரண்டு புரண்டு படுத்தது. தலை ஒரு பக்கமாய் இழுக்கத் தொடங்கியது.”[72]

இந்த மருந்தோடு மாட்டுச் சிறுநீர் கலப்பது உத்தமம். அவசரத்திற்கு அதற்கெங்கே போவது? மாற்று நீராக பேரனின் சிறுநீரைக் கலந்து, அரைகுறையாய் அரைத்த மருந்தை எடுத்துக் கொண்டு ஓடி, மாட்டின் வாயை அகலத்திறந்து கொஞ்சம் கொஞ்சமாய் பேய்த்தேவர் வைத்தார். மாட்டிற்கு

விஷம் நீங்கியது. இவை போன்று விஷக்கடிக்கு வைத்தியம் செய்கின்ற முறை தெரிய வருகிறது.

## மூட்டுவலி:-

வயது முதிர்ந்த மனிதர்களுக்கு அடிக்கடி வரும் நோய் மூட்டு வலி ஆகும். கண்டமனூரு ஐமீன்தாருக்கு ஏற்பட்ட தீராத மூட்டுவலிக்குக் கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் வைத்தியச்சி தயாரித்த மருந்து பற்றிக் கூறுகிறார்.

“வெள்ளெருக்கம் பூவு – கத்திரி மஞ்சள் - கருஞ்சீரகம், கருமொளகு – பச்சக்கர்ப்பூரம் அஞ்சையும் அம்மியில வச்சு நச நச நசன்னு நசுக்கி, பூப்போலப் பொடி பண்ணி அத ஒரு படி நல்லெண்ணய்யில போட்டு மூணுநாள் ஊறவச்சா நாலாம் நாள் எடுத்து அடுப்புக்கூட்டிப் புளிய வெறகெரிச்சு ஒரு படி நல்லெண்ணெய அரப்படியாச் சுண்டவச்சா.”[73]

மூட்டு வலிக்கான மருந்தைக் கிராமங்களில் உள்ள சிறிய மூலிகைச் செடியினைப் பறித்தே வலியை அகற்றிய கிராமிய வைத்திய முறை எடுத்துக் கூறப்படுகிறது

## வாயு பிரித்தல்:-

கிராமங்களில் பிறந்த குழந்தை அழாமல் இருந்தாலோ, குழந்தைகளுக்கு ‘வாயு’ நின்றாலோ, குழந்தையினை தலைகீழாகத் தூக்கி குழந்தையின் வாயுவினைப் பிரித்தெடுக்கும் முறை இன்றும் காணப்படுகிறது. இந்த முறையினைக் கொஞ்சம் தேனீர் நிறைய வானம் என்ற படைப்பினில் எடுத்துக் கூறுகிறார்.

“தலைகீழாய் உலுக்கி
வலிக்காமல் பிள்ளைக்கு‘
வாயு பிரிக்கும்.”[74]

## தேமலுக்கான மருந்து

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் காயாம்புத் தேவரின் மகளான முத்துக்கண்ணிக்கு கழுத்துக்கு கீழே ஒரு தேமல் வந்தது. அந்த தேமலுக்கு கழுதைப் பாலில் குளித்தால் தேமல் போய்விடும் என்று ஒரு வயதான முதியவர் வைத்தியம் சொல்ல அண்ணன்மார்களும் அப்படியே செய்கின்றனர்.

“கொங்கக்கழுத, கருவாக் கழுத, வெள்ளக்கழுத, கறுப்புக்கழுத, சடைக்கழுத, சாம்பக்கழுத, வண்டிக்கழுத, வண்ணான் கழுத இப்படி எல்லாக் கழுதைகளையும் வெரட்டி வெரட்டிப் பால்பீச்சி, முழுக்கொடத்துக்கு முக்காக் கொடம் நெரப்பி, தண்ணீத் தொட்டியில ஊத்தித் தங்கச்சிய ஊறவச்சாகளாம். கழுதப் பாலிலயே முழுநாளும் கெடந்தாளாம் முத்துக்கண்ணி. சும்மா வேட்ட நாயக் கண்ட மொச மாதிரி தேமல் போன எடம் தெரியலையாம்”[75]

தேமலுக்கு கழுதப்பாலில் குளித்தால் தேமல் இருந்த இடம் தெரியாமல் போய்விடும் என்ற இயற்கை மருத்துவத்தின் தன்மைகளை உணர முடிகிறது.

## காது குடைதல்

கிராமப்புற மக்கள் நன்றாகக் குளித்து முடித்து விட்டு, காதுகளில் உள்ள அழுக்குகளை எடுப்பதற்குக் கோழிகளின் இறக்கைகளைப் பயன்படுத்துவது வழக்கம். அதோடு காதில் பதிந்துள்ள அழுக்குகளை எடுப்பதற்குக் கோழி இறகினைப் பயன்படுத்துவர். அந்தச் செயலின் பரிணாம வளர்ச்சியே இன்று

அறிவியல் யுகத்தில் ‘Buds’ (பஞ்சு போன்ற மென்மையான ஒரு பொருள்)ஐப் பயன்படுத்துகின்றனர். கிராம மக்கள் காது அழுக்கினை எடுக்க வெண்கலத்தினாலான ஒரு கரண்டியைப் பயன்படுத்துவதுண்டு. அதற்கு “செவிக்கரண்டி” என்று பெயர். அந்த கிராமப் புற மக்களின் பண்பாட்டைக் கூட அப்படியே தன் கவிதைகளில் எடுத்தாள்கிறார் கவிஞர். கிராமப்புற மக்கள் இன்றுவரை நடைமுறை வாழ்க்கையில் பயன்படுத்தும் கோழியின் இறகினைக் கூட கவிதையின் பாடுபொருளாக்கியிருக்கிறார்.

“காதில்
காதுகுடைந்து போட்ட
கோழி இறகுங்கூட
மயிலிறகுக்கான
மரியாதைக்குரியது”[76]

என்கிறார்.

## தொகுப்புரை

பண்பாடு, கலாச்சாரம் பற்றிய விளக்கம், பண்பாடு சொல்லாராய்ச்சி என்பதன் விளக்கமும் ஆய்வில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

கிராம மக்களின் பண்பாடு, நன்றியுணர்ச்சி, கொடை, பிற மனிதர்களுக்கு உதவும் மனித நேயம் பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

கால்நடைகளைக் குடும்ப உறுப்பினராகக் கருதும் பண்பு, கிராமத்து நடைமுறைகள், மகண் மறுத்தல், திருமண மரபு, மறுமணம், தாலியின் மகத்துவம் போன்ற பண்புகள் ஆய்வின் வழி புலப்படுத்தப்பட்டுள்ளன.

கிராமத்துப் பெண்கள் கணவரின் பெயர் சொல்லாத பெருந்தன்மை, கிராமத்து வாழ்க்கைப் பண்பாடு பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

கிராமத்து மனிதர்களின் உணவு, உடை, உறைவிடம், விருந்தோம்பல் பண்பு, உலக உயிர்களிடம் அன்பு காட்டும் தனித்தன்மை, மார்க்கத் திருமணம், காதுகுத்து விழா, தாய்மாமன் சீர், மொய் விருந்து முதலான பண்பாடுகள் ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

வயதான முதியோர்கள் பற்றிய எண்ணங்கள், தீட்டுணர்வு, கிராமியப் பழக்கம், பகுத்தறிவுச் சிந்தனைகள், கிராமிய மருத்துவ முறைகள் பற்றியும் ஆராய்ந்துரைக்கப் பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1) ச.வே. சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி ப.319.

2) கலித்., 133.

3) குறள்., 995.

4) Madras University Lexicon, vol IV, p.2454.

5) புறம்., 19 (13-14).

6) Cassell's Latin Dictionary, London. p.145.

7) வைரமுத்து, வடுகப்பட்டி முதல் வால்கா வரை, ப.11.

8) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.27.

9) மேலது, ப.18.

10) குறள்., 102.

11) மேலது., 108.

12) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.123.

13) மேலது., ப.123.

14) மேலது., ப.199.

15) மேலது., ப.218.

16) புறம்., 18.

17) குறள்., 247.

18) வைரமுத்து, காவிநிறத்தில் ஒரு காதல், ப.72.

19) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.25.

20) மேலது., ப.27.

21) மேலது., ப.98.

22) மேலது., ப.126.

23) மேலது., ப.128.

24) வைரமுத்து, இன்னொரு தேசிய கீதம், ப.99.

25) தொல்., 169

26) புறம்., 111.

27) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம் ப.150.

28) மேலது., ப.43.

29) மேலது., ப.45.

30) மேலது., ப.46.

31) மேலது., ப.46.

32) மேலது., ப.42.

33) மேலது., பக்.258-259.

34) நம். சீனிவாசன், வைரமுத்து ஆய்வுக்கோவை - III, ப.34.

35) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.51.

36) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.104.

37) மேலது., ப.16.

38) மேலது., ப.20.

39) மேலது., ப.45.

40) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், பக்.19-20.

41) மேலது., ப.21.

42) மேலது., ப.60.

43) புறம்., 189.

44) மதுரைக் காஞ்சி, பா. வரி.435-436.

45) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.304.

46) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.45.

47) மேலது., ப.46.

48) மேலது., ப.99.

49) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.14.

50) மேலது., ப.212.

51) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.258.

52) எஸ். அப்துல்வஹ்ஹாப், இஸ்லாத்தில் இறை வழிபாடு ப.88.

53) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம் ப.280.

54) மேலது., ப.286.

55) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.228.

56) மேலது., பக்.228-229.

57) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.280.

58) வைரமுத்து, கொஞ்சம் தேநீர் நிறைய வானம், ப.69.

59) மேலது., ப.70.

60) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.122.

61) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப.482.

62) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.304.

63) வைரமுத்து, இந்த பூக்கள் விற்பனைக்கல்ல, ப.58.

64) வைரமுத்து, பாற்கடல், ப.30.

65) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.29.

66) சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.264.

67) நற்., 136.

68) குறள்., 948.

69) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.70.

70) வைரமுத்து, காவிநிறத்தில் ஒரு காதல், ப.64.

71) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.34.

72) மேலது., ப.132.

73) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.80.

74) வைரமுத்து, கொஞ்சம் தேனீர் நிறைய வானம், ப.70.

75) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.148.

76) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.70.

# இயல் 4

# கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் கூறப்படும் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள்

## முன்னுரை

மனிதன் இயற்கையோடு இரண்டறக் கலந்து வாழ்ந்த காலகட்டத்தில் மனிதர்களிடம் எவ்வித நம்பிக்கையும் அவனிடம் குடி கொள்ளவில்லை. கூட்டம் கூட்டமாக வாழத் துணிந்தபோது இயற்கையோடு போராட வேண்டி வந்தது. அந்தப் போராட்டத்தில் வெற்றி பெற்றபோது தன்னம்பிக்கை பிறந்தது. தோல்வியடைந்த போது அச்சம் பிறந்தது. இயற்கையோடு போராடி வெல்ல முடியாத போது, அது குறித்து வேறுவிதமாகச் சிந்திக்கத் தொடங்கினான். இயற்கையின் பேராற்றல் தன்னிலும் வலிமையானது என்று அறிந்த போது, அவனது இயலாமை புதிய நம்பிக்கையைப் படைத்தது. இயற்கையின் பேராற்றல் மனிதர்களின் உள்ளத்தில் அச்சத்தைத் தோற்றுவித்தது; நம்பிக்கைகளை உருவாக்கியது.

தொல்காப்பியத்தில் ‘நம்பு’ என்னும் சொல் ‘விருப்பம்’ என்னும் பொருளைக் குறிக்கிறது. சங்க இலக்கியத்தில் நம்பு என்னும் சொல்,

‘சேரியம் பெண்டிர் சிறு சொல் நம்பி
சுடுவான் போல் நோக்கும்’[1]

என ‘நம்பிக்கை’ என்னும் பொருளில் வருகிறது. ஒரு சமுதாயத்தின் பண்பாட்டு மரபினை வெளிப்படுத்த நம்பிக்கைகள் அடிப்படையாகும். மனித வாழ்க்கை நம்பிக்கையின் துணை கொண்டே பயணம் மேற்கொள்கிறது. மனித மனத்தின்

நல் விருப்பமே நம்பிக்கைகளை நிலைபெறச் செய்கின்றது. தமிழரிடம் காணப்படும் நம்பிக்கைகள் பரந்துபட்டவை. தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருபவை. இந்நம்பிக்கைகள் கிராமப்புற மக்களிடம் பல நிலைகளில் ஆட்சிபுரிகின்றன. கிராமங்களில் வாழும் மனிதர்களுக்கிடையே பல்வேறு நம்பிக்கைகள் காணப்படுகின்றன. அந்த நம்பிக்கைகளைக் கவிஞர் தம் படைப்புகளில் பல்வேறு சூழல்களில் பதிவு செய்துள்ளார். அந்த நம்பிக்கைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## நம்பிக்கை - வரையறை

தமிழகத்தில் ‘நம்பு’ என்ற சொல் முதலில் ‘விருப்பத்தையும், பின்னர் காலப் போக்கில் ‘நம்பிக்கை’ என்னும் பொருள் தந்து நின்றதையும் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. சான்றாக,

“நாடல் சான்றோர் நம்புதல் பழியெனிற்
பாடில கலுழுங் கண்ணோடு சாஅய்ச்
சாதலு மினிதே காதலந்தோழி”[2]

என்னும் பாடலைச் சுட்டலாம். “நம்பிக்கைகளை உள உருவாக்கம் (Mental creation) என்று குறிப்பிடுவர். அவ்வுள உருவாக்கத்திற்கு அடிப்படையாக அமைவது நிலைப்பாட்டுக் கொள்கை (Law existene) என்பர்”[3] என்று கூறுகிறார் க.காந்தி.

ஒரு சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்கவல்லன அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு சமுதாயத்தால் பரப்பப்படுகின்றன. மனிதர்களின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வும் நம்பிக்கையை வளர்க்க அடிப்படைக்காரணமாகும். அவை காலங்காலமாகத்

தொடர்ந்து மரபு வழியே தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருகின்றது. நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்ச உணர்வின் அடிப்படையில் தோன்றியவையாகக் காட்சியளிக்கும். நம்பிக்கைகள் மரபு வழியில் ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவிப் பழகி வருகின்றன. மனிதர்களின் பிறப்பு முதல் இறப்பு வரை பலவிதமான நம்பிக்கைகள் காணப்படுகின்றன. "ஒரு வளர்ச்சி அடைந்த மனிதனிடம் பத்தாயிரக்கணக்கான நம்பிக்கைகளும் நூற்றுக்கணக்கான வழக்கங்களும் எண்ணிக்கைக்குட்பட்ட சில குறிக்கோளும் இருப்பதாகச் சமூக அறிவியல் கலைக் களஞ்சியம் சுட்டும்."[4]

நம்பிக்கைகள் என்று உருவாகின என்று திட்டவட்டமாகக் கூற முடியாது. மனிதன் இயற்கையின் பாதிப்புக்கு மிகுதியாக உட்பட்டிருந்த அறிவு வளர்ச்சியின் தொடக்கக் காலத்தில் தோன்றியிருக்கலாம். இன்றைய நாகரிக மனிதனிடம் காணப்படும் பல நம்பிக்கைகள் நாகரிகமற்ற பழங்குடி மக்களிடமும் காணப்படுகின்றன. எனவே நம்பிக்கைகள் என்று தோன்றியது என வரையறுப்பது இயலாத ஒன்றாகும். அவை பெரும்பாலும் நாகரிகம் தோன்றாத காலப்பகுதியில் வாழ்ந்த மக்களிடம் தோன்றி நிலைபெற்றன என்று கருதலாம். எனவே நம்பிக்கைகள் தனிமனித அனுபவத்தின் விளைவு எனலாம். நம்பிக்கைகள் என்பது மனித மனத்தின் விளைவாகும்.

சமுதாயம் நம்பிக்கை வயப்பட்டது; நம்பிக்கைகளுக்குக் கட்டுப்பட்டது. மனிதன் தன்னுடைய தினசரி வாழ்க்கை நடைமுறையில் சந்திக்கும் வெற்றிக்கும் தோல்விக்கும் காரணமாக அமைகின்ற ஏதேனும் ஒரு பொருளை அல்லது நிகழ்ச்சியைத் தன்னுடைய வாழ்க்கையில் மீண்டும் ஏற்படுகின்ற வெற்றிக்கும்

தோல்விக்கும் காரணம் என்று நினைக்கிற மனப்பாங்கு உண்டு. இந்த மனப்பாங்கு வளருங்கால் அப்பொருளையோ, நிகழ்வையோ நம்பியாக வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறான். இதுவே நம்பிக்கைகள் தோன்ற அடிப்படைக் காரணமாகும்.

நம்பிக்கைகள் காரணகாரியத் தொடர்புகளுக்கு உட்பட்டவையாகும். காரணகாரியத்தின் வாயிலாக உறுதிப்படுத்துவதை 'நம்பிக்கை' என்றும், காரண காரியத்தோடு உறுதிப்படுத்த முடியாததை 'மூடநம்பிக்கை' என்றும் வகைப்படுத்துகிறார்கள்.

நம்பிக்கைகளைத் தனிமனித நம்பிக்கைகள், சமுதாய நம்பிக்கைகள் என இருவகையாகப் பகுக்கலாம். எனினும் தனிமனித நம்பிக்கைகளே காலப்போக்கில் சமுதாய நம்பிக்கைகளாக உருமாற்றம் பெறுகின்றன. இவ்வியலில் சமுதாய நம்பிக்கைகளே ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. கிராமங்களில் காணப்படும் நம்பிக்கைகளைக் கவிஞர் வைரமுத்து தன் படைப்புகளில் ஏராளமான இடங்களில் சுட்டியுள்ளார். அவை குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

## இயற்கை வழிபாடு

ஆதிகால மனிதன் இயற்கையோடு இரண்டறக் கலந்து வாழ்ந்தான். அப்பொழுது மனிதர்களின் ஆற்றலுக்கு இயற்கை பணிந்தபோது பெருமிதம் அடைந்தான். இயற்கை மனிதனை வெற்றி கொண்ட போது அச்சம் அடைந்தான். இயற்கையிடம் மனிதனின் ஆற்றல் தோல்வியடைந்தபோது மதிமயங்கி நின்ற சமூகம், அதனை வழிபடச் செய்தது.

இயற்கையிடமும், மரணத்திற்குப் பின்வரும் நிலைமையிடமும் மனிதன் கொண்ட அச்சமே வழிபாட்டிற்கு அடிப்படைக் காரணம் என்கிறது கலைக்களஞ்சியம். பழந்தமிழகத்தில் இயற்கை வழிபாடும், இறைவழிபாடும் இரண்டறக் கலந்தே காணக்கிடைக்கின்றன.

இயற்கை வழிபாடென்பது நிலம், நீர், தீ, காற்று, மேகம், மலை, ஞாயிறு, திங்கள் போன்ற இயற்கைப் பொருட்களை வழிபடுவதேயாகும். தொல்காப்பியர்,

''கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே''[5]

என்றும் நூற்பாவில் இதனைக் குறிப்பிட்டுள்ளார். இதன் வாயிலாகப் பழந்தமிழர்கள் இயற்கைப் பொருட்களான ஞாயிறு, திங்கள், தீச்சுடர் ஆகிய மூன்றினையும் வழிபட்டுள்ளனர் என்பதை அறியவியலுகிறது. இந்த இயற்கை வழிபாடு கிராமப்புற மக்களிடம் இன்றும் இருந்து வருகிறது. அறுவடைத் திருநாளில் போது, தமிழர்கள் சூரியனை வழிபடுவது இதற்குச் சிறந்த சான்றாகும்.

கருவாச்சி காவியத்தில் கருவாச்சிக்குப் பிடித்திருந்த பேயினை ஓட்ட வரும் இருளப்பக் கோடாங்கி,

''வலக்கையில உடுக்க எடுத்து, எடக்கைக்கு மாத்தி, கடிவாளச் சுங்கம் தொங்க ஒசத்திப்புடிச்சு, ஆகாயத்துக்கொரு கும்புடும் பூமிக்கொரு கும்புடும் போட்டு, உடுக்கைய ஓங்கித்தட்டி''[6]

சத்தத்தைக் கூட்டினார். இயற்கைப் பொருட்கள் மனிதனுக்குப் பெரிதும் உதவிய நிலையில் அதற்கு நன்றி தெரிவிக்கும் முறையில் கிராம மக்கள் இன்றும் இயற்கையை வழிபட்டு வருகின்றனர்.

## சிறு தெய்வ வழிபாடு

கிராமத்து மக்கள் இறைவழிபாட்டினை அச்சத்தின் காரணமாகவும், நன்றி உணர்வின் காரணமாகவும் மேற்கொள்கின்றனர். மனிதர்களுக்கும், கால்நடைகளுக்கும் ஏற்படும் நன்மை, தீமைகளுக்கெல்லாம் இறைவனே காரணம். அவ்விறைவனை வணங்குவதன் மூலம் துன்பமின்றி வாழலாம் என எண்ணினர். கிராமத்து மக்கள் சிறுதெய்வ வழிபாட்டினை இன்றியமையாத வழிபாடாகக் கருதுவதுண்டு. சிறுதெய்வங்கள் கிராமங்களுக்கு உயிர் நாடியாக விளங்குகின்றன. இதனைக் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் சொட்டையன் மூலம் எடுத்துச் சொல்கிறார் கவிஞர். பசு ஈத்து வலியெடுத்து பிரசவிக்காத சூழ்நிலையில் சொட்டையன்,

> “அந்த வைரவனும் சீலக்காரியும் தான் எம் பசுவையும் கன்டை (கன்று)யும் காப்பாத்தணும்… என்று சொட்டையன் வானம் நோக்கிக் கும்பிட்டான்”[7]

என்கிறார். இந்த சிறு தெய்வங்களையே கிராம மக்கள் காவல் தெய்வங்களாக நினைத்து வழிபடுவர். அதோடு,

> “சண்டிமுனி, சடாமுனி, மண்டிமுனி, மகாமுனி, பாண்டிமுனி, பரவைமுனி, நல்லமுனி, கெட்டமுனி, இப்படி எல்லா முனிகளையும் வரவழைச்சு முத்துப் போட்டுப் பாத்ததுல….”[8]

என்று கிராமத்து மக்கள் வழிபடும் சிறுதெய்வங்கள் எவை என்பதைக் கருவாச்சி காவியத்தில் இருளப்பக் கோடாங்கி வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் பேய்த் தேவர் கிணறு தோண்ட முடிவு செய்து, கிணறு தோண்டுகிறார். அப்போது கிணற்றில் தண்ணீர் வரும்படி இறைவனை வேண்டுகிறார்.

''வைரவா! சீலக்காரி! மண்ணுல கெணறு தோண்டுகிறேன். கண்ணுல தண்ணி வராமக் காப்பாத்துங்க''[9]

என்ற வரிகள் இறைவனை வணங்கிவிட்டு ஒரு செயலைச் செய்தால் அது சிறப்பாக முடியும் என்ற நம்பிக்கையை வெளிக்காட்டுகிறது.

கிராமங்களில் வாழும் மக்கள் 'அம்மன்' மீது அதிக நம்பிக்கை வைத்திருப்பர். கள்ளிக்காட்டில் அரசு அணைகட்ட முடிவெடுத்து மக்களை கிராமங்களில் இருந்து வெளியேறும்படி ஆணை பிறப்பித்த போது, ஊர் மக்கள்

''அணையாவது ....... கட்றதாவது ...... ஊராவது

..... முங்குறதாவது. முத்தாலம்மன் இருக்கு''[10]

என்ற வரிகளில் சிறு தெய்வமான முத்தாலம்மன் பற்றிய நம்பிக்கை வெளிப்படுகிறது. கிராம மக்களின் வாழ்வோடு ஏராளமான நம்பிக்கைகள் பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன.

## பலியிடுதல்

'பலியிடுதல்' கிராம மக்கள் தெய்வங்களின் சினத்தைக் குறைக்க மேற்கொண்ட வழக்கமாகும். சங்க இலக்கியங்களில் தெய்வத்தைக் குறிக்கும் போதே 'பலிபெறு கடவுள்பேணி'

என்று குறிப்பிடுகின்றனர். உழவர்களுக்குரிய நெற்களத்தில் பலிகொடுத்துள்ளனர் என்பதையும், தெய்வத்திற்குப் பசுமாட்டைப் பலி கொடுத்து இறைச்சியை உண்டுள்ளனர் என்பதையும் அகநானூற்றுப் பாடல்,

"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்புஆ எறிந்து, குருதி தூஉய்
புலவுப் புழுங்குண்ட வான்கண் அகலறை"[11]

என்று விளக்குகிறது. கிராமப்புற மக்களிடம் இப்பழக்க வழக்கம் தெய்வ வழிபாட்டின் போது இன்றும் இருந்து வருகிறது. கோவில்களில் 'கிடாவெட்டு' என்னும் சடங்கு இன்றும் நடைபெற்று வருகிறது. இதனைக் கருவாச்சிக் காவியத்தில் கருவாச்சி வாயிலாக விளக்குகிறார். காளிகோவிலுக்கு பூலித்தேவனை நேர்ந்து விட்டிருந்தாள் கருவாச்சி. பிள்ளைபோல் வளர்த்ததால் கோயிலுக்கு பலி கொடுக்கவில்லை. பூலித் தேவனை கட்டையன் பாறைகறி போட்டு தின்ற பிறகு, வெறும் ஆட்டுத்தோலை மட்டும் காளி கோயிலுக்கு முன்னால் கொண்டு வந்து போட்டுப் புலம்பும் கருவாச்சி.

"ஒன் வாசல்ல வந்து கெடா அறுத்திருந்தா ரத்தம் ஒனக்கு; கறி எங்களுக்கு, இப்ப ஒனக்குக் காணிக்கை செலுத்த நான் புடிச்சு வளத்த பூலித் தேவன் தோல்தானாத்தா இருக்கு, இந்தா ஏத்துக்க"[12] என்று கருவாச்சி புலம்புவதைக் கருவாச்சிக் காவியத்தில் விளக்குகிறார். கிராமங்களில் இன்றும் பலியிடும் பழக்கவழக்கமும் இருக்கிறது என்பதை இதன் மூலம் உணர்த்தியுள்ளார்.

## காணிக்கைதட்சணை

தெய்வத்திற்கு நேர்த்திக் கடன் செய்வது கிராமங்களில் நடைமுறையில் இருக்கும் ஒரு செயலாகும். தெய்வத்திற்குக் காணிக்கை கொடுக்கிற வழக்கம் பண்டையத் தமிழரிடம் நடைமுறையில் இருந்ததைச் சிறுபாணாற்றுப் படை கூறுகிறது. இதற்கு,

"நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆல்அமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்"[13]

என்னும் பகுதி சான்றாக அமைகிறது. கிராமப்புற மக்கள், தெய்வ வழிபாட்டின் போது தட்சணையும், காணிக்கையும் கொடுக்கின்றனர். தட்சணை என்பது தெய்வ வழிபாட்டிற்கு முன்பாகக் கோவில் பூசாரியிடம் தட்டில் வைப்பது; இது பூசாரிக்குச் சொந்தம். தட்சணையாகப் பணமோ அல்லது பொருட்களோ கொடுக்கின்றனர். கிராமப்புற மக்கள் தங்கள் வேண்டுதல்கள் நிறைவேறவும், நிறைவேறிய வேண்டுதலுக்காகவும் தெய்வத்திற்குக் காணிக்கை கொடுக்கின்றனர். காணிக்கையாக பணம், பொருள், ஆடுகள், மாடுகள் கூட கொடுப்பது வழக்கம். அந்த வழக்கத்தினை, கருவாச்சி காவியம் வாயிலாக எடுத்துக் கூறுகிறார் கவிஞர்.

கருவாச்சிக்கு பேய்விரட்ட வந்த இருளப்பக் கோடாங்கி வீட்டுக்குள்ள இருக்கிற திறந்த வாசலில் சாணி தெளிச்சு மொழுகி, சாக்கு பரப்பி, அதற்குமேல் சமுக்காளம் விரித்த பிற்பாடு செய்த செய்முறைகளை,

"சூடம் கொளுத்தி, பத்தி பொருத்தி, சாம்பிராணி போட்டு, குங்குமம் சந்தனம் மல்லிகப்பூ வாங்கித் தரையில படைச்சு, தேங்கா பழத்தோட

தனக்கு ஒண்ணேகால் ரூவா தட்சணையும் வாங்கிக்கிட்டு பிள்ளையக் கூட்டிட்டு வாங்காத்தா”[14]

என்கிறார். கிராம மக்கள் தெய்வத்திற்கோ, அல்லது பூசாரி, கோடாங்கி போன்றவர்களுக்கோ தட்சணை கொடுத்த பிறகுதான் செயலைத் தொடங்குவார்கள் என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது.

## குழந்தைப் பேற்று நம்பிக்கை

கிராம மக்கள் இயற்கையின் மேல் பக்தியும், ஈடுபாடும் கொண்டவர்கள். வாழ்க்கையில் தவறு இழைத்தால் இறைவன் தண்டிப்பான் என்ற நம்பிக்கை உடையவர்கள். கருவாச்சி காவியத்தில் இவை போன்ற நம்பிக்கைகள் ஏராளம் காண முடிகிறது. பெண்ணிற்குப் பெருமை சேர்க்கும் தாய்மைப் பேற்றின் மீது நிறைய நம்பிக்கைகள் கிராமங்களில் காணப்படுகின்றன. பிள்ளைத்தாய்ச்சி பொம்பளைக்கு வயிற்றில் அரிப்பு அதிகமாக இருந்தால் வயிற்றுப் பிள்ளைக்கு மயிர்க்கட்டு அதிகம் இருக்கும் என்ற நம்பிக்கையை,

“வகுத்துல இருக்கிற பிள்ளைக்கு மயிர்க்கட்டு நெறையா இருந்தாத்தான் பிள்ளைத்தாச்சிக்கு அரிப்பெடுக்கும்மடி மகளே. பொழுதுக்கும் சொரண்டாத; புண்ணாப் போயிரும் வகுறு”[15] என்று எடுத்துக் கூறுகிறார். அதைப்போல் “உக்காந்த ஒரு பிள்ளத்தாச்சி எப்பவும் வலது கைய ஊன்டி எந்திச்சான்னா அவளுக்கு ஆம்பளப்பிள்ள. எடது கைய ஊன்டி எந்திரிச்சான்னாப் பொம்பளைப் பிள்ள”[16] என்ற நம்பிக்கையைக் கூறியுள்ளார்.

குழந்தை பிறந்த பெண்ணுக்குப் பால் அதிகமாக சுரக்கக் கிராமங்களில் கருவாடும், சில மருந்து பொருட்களும் சேர்த்துக் கொடுத்தால் அதிகமாகப் பால் சுரக்கும் என்ற நம்பிக்கையுண்டு. அதனை

> ‘‘தேனிச்சந்தைக்குப் போயி, திருக்கைமீன் கருவாடும், நெத்திலியும் வாங்கிட்டு வரணும். அதுல பச்சப்பூடுபோட்டுக் கொழம்பு வச்சுக் குடுத்தாப் பால்கட்டும் பச்ச ஒடம்புக்காரிக்கு’’[17]

என்கிறார். குழந்தை பிறந்தவுடன் ‘‘தாயும் பிள்ளையும் படுத்திக்கிற பாயச் சுத்தி வட்டமா ஒரு சாம்பல் கோடு போட்டு விடுவாக. அப்பிடிச் செஞ்சாப் பேய், பிசாசு அண்டாதுங்கிறது நம்பிக்கை’’.[18] என்று குறிப்பிடும் ஆசிரியர், ஈ, எறும்பு தாண்டாதுங்கிறது தான் எதார்த்தம் என்று அதற்கான காரணத்தையும் விளக்கியுள்ளார். இவை போன்று கிராம மக்களால் நம்பப்படும் சில செயல்கள் அறிவியல் பூர்வமாகவும் ஒத்துப் போகக் கூடியனவாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## கனவு பற்றிய நம்பிக்கை

உள்ளத்தின் வெளிப்பாடே கனவுகளாகத் தோன்றும் என்பர். அதாவது மனிதர்களின் நிறைவேறாத ஆசைகள் கனவுகளில் வெளிப்படும். உளவியல் அறிஞர்கள், ‘‘அடக்கி வைக்கப்பட்டிருந்த விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே கனவு என்பர். வேறு சிலர் கனவுகள் உளநோயால் தோன்றுகின்றன’’[19] எனச் சுட்டுவர். சங்க இலக்கியமான அகநானூற்றில் கங்குலில் தோன்றும் கனவு உடன் பலன் தரும் என்பதை,

“அம்மவாழி தோழி கைம்மிகக்
கனவுங் கங்குல்தோ றினிய நனவும்
புனைவினை நல்லிற் புள்ளும் பாங்கின”[20]

என்னும் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது. அது போலத்தான் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் நிலத்தை இழந்த பேய்த் தேவர் காய்ச்சலில் படுத்த போது, அவர் கண்ட கனவினை,

“கண்ணு தொறக்க முடியாம நெத்தி கொதிச்சுப் போய்க் கெடந்த நேரத்துல கூட பேய்த்தேவரு கனாவுல கண்டதெல்லாம் - ஊரடித் தோட்டம் - ஒத்தக்கமல – கமலையில தொங்குற சாலு – சாலுல தொங்குற தோலு – அந்தத் தோலுல தொங்குற ஒரு ஆளு, காலவிட்டுத் தோலு கொஞ்சங் கொஞ்சமா…. கொஞ்சங் கொஞ்சமா உருவுது ‘யாத்தே! விழுகப் போறேன்... விழுகப் போறேனேன்னு அந்த ஆளு அலர்றான். அலர்றவன் யார்றான்று கிட்ட... கிட்ட... கிட்ட... கிட்டப் போயிப்பாத்தா – பேய்த்தேவரு சட்டுன்னு தோலு உருவ பொட்டுன்னு, முழிப்பு வந்துருது நெஞ்சுக் கூட்டுக்குள்ள உறங்காமத் துடிக்கிற நெனப்புதான கனா”[21]

என விளக்குகிறார். கனவில் கண்டது நடக்கும் என்ற நம்பிக்கை கிராமங்களில் இன்றும் நடைமுறையில் காணப்படுகிறது.

“வெள்ளாட்டுக் காம்பில்
வெசம்வடியக் கனாக் கண்டேன்
ஓடையெல்லாம் ரத்தம்
ஓடிவரக் கனாக் கண்டேன்
காத்து கறுப்பாச்சே
கண்ட கனாப் பலிச்சிருச்சே”[22]

அதிகாலையில் கண்ட கனவு பலிக்கும் என்ற நம்பிக்கை கிராமத்து மக்களிடையே இன்றளவும் காணப்படும் மிகப் பெரிய நம்பிக்கையாகும்.

## காத்து (பேய்) நம்பிக்கை

கிராமங்களில் மண்வாசனையோடு கலந்து உறவாடுவதில் மனிதர்களின் நம்பிக்கையும் ஒன்று. அதிலும் காத்து, கருப்பு, பேய் பற்றிய நம்பிக்கை கிராமங்களில் அதிகம் உண்டு. கருவாச்சி காவியத்தில் கருவாச்சிக்குப் பேய் பிடித்த பொழுது கிராமத்துக் கோடாங்கியைக் கூட்டி வந்து பேயோட்டிய சம்பவம் இதற்குச் சான்றாகும்.

“மந்தை நிறைந்திட
மனம் நெறைய வா! வா! வா!
ஆணாக இருந்தாலும்
பெண்ணாக இருந்தாலும் - நீ
காத்தாக இருந்தாலும்
கறுப்பாக இருந்தாலும்
மானிட ஜீவன்
மனித நிலையானாலும்…..

இந்த மங்கையைச் சீதைபோல் சிறையெடுக்க வந்திருக்கிற நீ யாரு?”[23]

இதுபோன்ற பல நம்பிக்கைகள் கிராம மக்களிடையே இன்றும் நம்பப்பட்டு வருகின்றதை கவிஞர் வைரமுத்து எடுத்துக் கூறியுள்ளார். காத்து, கறுப்பு எனப்படும் பேய் பிசாசு பற்றிய நம்பிக்கைகள் கிராமங்களில் அதிகம் உண்டு. கிராமத்தில் ஒருவருக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால் காத்து கறுப்பு வேலையாக இருக்குமோ? அல்லது முனி அடிச்சிருக்குமோ? என நினைத்து அதனைப் போக்க முயற்சி செய்வர். இந்த நம்பிக்கையை,

“காத்து கருப்போ
கம்பளத்தார் செய்வினையோ
வேப்ப மரத்துமுனி
வேலையத்தான் காட்டிருச்சோ?”[24]

என்று கிராம மக்கள் நம்பும் நம்பிக்கையினைப் பதிவு செய்கிறார்.

## குறி சொல்லும் கோடாங்கியை நம்புதல்

மனித வாழ்க்கையின் சாராம்சமே நம்பிக்கை தான். காலம் காலமாக மனிதன் நம்பிக்கையை மட்டுமே ஊன்றுகோலாகக் கொண்டு இந்த உலகில் வாழ்ந்து வருகிறான். மனிதர்களுக்கு இந்த நம்பிக்கை மரபுகள் சார்ந்தும், இயற்கை சார்ந்தும், இறைவன் சார்ந்தும் அமைவது உண்டு. பெய்யெனப் பெய்யும் மழை கவிதைத் தொகுப்பில் ‘விதைச்சோளம்’ என்னும் கவிதையில் ஒரு விவசாயியின் புலம்பலாக இத்தகைய நம்பிக்கைகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

“ஆடி முடிஞ்சிருச்சு
ஆவணியும் கழிஞ்சிருச்சி
சொக்கிகொளம் கோடாங்கி
சொன்ன கெடு கடந்திருச்சு”[25]

என்ற கவிதை வரிகளில் கோடாங்கியின் சொல் மீதான நம்பிக்கையும்,

“தெய்வமெல்லாம் கும்பிட்டுத்
தெசையெல்லாம் தெண்டனிட்டு
நீட்டிப் படுக்கையில
நெத்தியில ஒத்த மழை”[26]

என்ற வரிகளில் இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும், இயற்கையின் மீது கிராம மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையையும் வெளிப்படுத்துகிறார் கவிஞர்.

## குலமகள் கண்ணீர் விடக் கூடாது

பெண்களுக்குத் திருமணமாகி இல்லறத்தில் நல்லறம் காணும்போது, வாழ்வில் திடீரென்று எதிர்ப்படும் துன்பங்களால் கண்ணீர் சிந்தக் கூடாது. கணவன் வீட்டில் துன்பங்கள், வருத்தங்கள், பிரச்சனைகள் எவ்வளவு இருந்தாலும் பொறுத்துக் கொள்ள வேண்டும். குலமகள் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருந்தால் புகுந்த வீட்டிற்குக் கேடுவிளையும் என்று நம்புகின்றனர். கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் செல்லத்தாயி தன் மகன் மொக்கராசு திரும்பிப் பார்க்காததை நினைத்து அழுவதை,

> ‘‘நிறைமாதக்காரி அழக்கூடாது என்பார்கள். புகையேறிய லாந்தர் வெளிச்சத்தில் முழுசாய்த் தெரியவில்லை என்றாலும் அவள் குமுறிக் குலுங்குகிறாள் என்பதை – சுவரில் நீண்டு விழுந்த நிழல் சொல்லியது’’[27]

என்கிறார். குலமகளுடைய கண்ணீர் வீட்டிலுள்ளவர்களுக்கும், குழந்தைகளுக்கும், பொருள் தேடுதல் காரணமாக வெளியே சென்றவர்களுக்கும், கால்நடைகளுக்கும் தீங்கு விளைவிக்கும் என்ற நம்பிக்கைகள் இன்றும் காணப்படுகின்றன.

## விதி பற்றிய நம்பிக்கை

கிராமப்புற மக்களிடையே தலைவிதி பற்றிய நம்பிக்கை வேரூன்றிக் கிடக்கிறது. ‘விதியை வெல்ல முடியாது’ என்பதை உறுதியாக நம்புகின்றனர். விதியினை ஊழ், பொறி, பால், தெய்வம் என்ற பல்வேறு பெயர்களில் அழைத்தனர். விதி பற்றிய நம்பிக்கை சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகிறது. சங்க நூலான புறநானூறு,

“நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம்”[28]

என்கிறது. மலைகளில் பொழிகின்ற நீரானது வெள்ளமாக ஓடும் போது, அதில் சிக்கிக் கொண்ட மரக்கட்டைகள் போன்று ஆருயிர்கள் அனைத்தும் விதியின் வழியே செல்லும் என்னும் நம்பிக்கை தொன்றுதொட்டு நடைமுறையில் இருந்து வருகிறது. வள்ளுவப் பெருந்தகை ‘ஊழிற் பெருவலியாவுள’ என்றும், இளங்கோவடிகள் சிலப்பதிகார சிறப்புப் பாயிரத்தில்,

‘ஊழ்வினை உருத்துவந் தூட்டும்’ என்றும் பாடுகின்றனர். கிராமப்புற மக்கள் விதியை ‘தலையெழுத்து’ என்கின்றனர். தாயின் வயிற்றில் கரு உருவாகும் போதே இறைவன் தலையெழுத்தை எழுதிவிடுகிறான் என்றும், அவ்வெழுத்தின் படியே வாழ்க்கை அமையும் என்றும் நம்புகின்றனர்.

அந்த நம்பிக்கை கிராமங்களில் காலம் காலமாகத் தொடர்ந்து மக்கள் மனதில் நின்று வருகிறது. கருவாச்சி காவியத்தில் சொர்ணக் கிளியின் பிறப்பைச் சொல்லும் போது விதி பற்றி எடுத்துச் சொல்கிறார் கவிஞர் வைரமுத்து.

“என்ன விதியோ .... என்ன தலையெழுத்தோ - இல்ல மூதாக்கமாரு செஞ்ச பாவமோன்னு ஏழு குடும்பமும் மனசுக்குள்ள வெந்து வெதும்பிக் கூட்டம் கும்மலுக்குக் கூட வரமுடியாமச் சங்கடப்பட்டு ஊர் வாயில விழுந்து கெடக்கிற நாளையில மாறுகண்ணுத் தேவருக்கு மகளா வந்து பெறந்தா சொர்ணக்கிளி”[29]

விதியின் காரணமாகவே ஏழு குடும்பத்திற்கும் ஒரே மகளாக வந்து பிறந்த நிகழ்வை எடுத்துக் கூறுகிறார். ஒரு செயலைச் செய்து வெற்றி பெற்றாலும், தோல்வி அடைந்தாலும் விதியின் பயன் என்றே இன்றும் நம்பிக்கை கொள்கின்றனர். ஒவ்வொரு மனிதனும் பிறக்கும் போதே அவன் இறப்பு வரை உள்ள வாழ்க்கை நிகழ்ச்சிகள் வகுக்கப்பட்டுவிட்டன என்று நம்புகின்றனர். இதனைத் தலையெழுத்து என்றும் கூறுகின்றனர். நாம் என்னதான் முயற்சி செய்தாலும் விதியே இறுதியில் வெல்லும் என்று உறுதியாக நம்புகின்றனர். இதன் பயனாக வாழ்வில் உண்டாகும் மேடு பள்ளங்களைச் சமமாக ஏற்றுக் கொள்ளும் பண்புடையவர்களாக மாறிவிடுகின்றனர்.

**பசுமாட்டை அடித்தல் பாவம்**

உயிரினங்களில் பெரிதும் வழிபடக் கூடியது பசுவாகும். இறைவனுக்கு அடுத்து பசுவினை வழிபடும் மரபு காலம் காலமாகத் தமிழகக் கிராமங்களில் பின்பற்றப்பட்டு வருகிறது. இத்தகைய பசுமாட்டை அடிப்பது பாவமாகும் என்னும் நம்பிக்கை கிராமப்புற மக்களிடம் இருந்து வருகிறது. கிராமங்களில் வெள்ளிக் கிழமைகளில் பசுவைக் குளிப்பாட்டி, அதன் நெற்றி, முதுகு, வால் எல்லாவற்றிற்கும் குங்குமம் இட்டு வலம் வரும் முறை இன்று வரை பின்பற்றப்பட்டு வருகிறது. இதற்குக் காரணம் பசு தெய்வத் தன்மையுடைய உயிரினமாகக் கருதப்படுவதே ஆகும். ‘கோமாதா எங்கள் குலமாதா’ எனக் கும்பிடும் வழக்கம் கிராமங்களில் காணப்படுகிறது. பசுவின் உருவமே தெய்வத் தன்மையுடையதாக இருக்கும். தெய்வத் தன்மையுடைய பசுவின் சாணமும், சிறுநீரும் புனிதமானதாகக் கருதப்படுகின்றன. இதனால் பசுவினை அடிப்பவர்கள் நரகத்திற்குச் செல்வர் என்னும் நம்பிக்கை இன்றும் காணப்படுகிறது.

‘பெண்ணுக்கும் பசுவுக்கும் ஒரே நேரத்தில் பிரசவ வலியெடுத்தால் பெண்ணைவிடவும் மகிழ்ச்சி தருவது பசுதான். காரணம் - ஒரு பெண், பெண் சிசுவைப் பிரசவித்தால் இடிவிழுந்த வீடாகி விடுகிறது குடியானவன் வீடு. அவர்களின் சமூக வாழ்வில் ஆண் வரவு; பெண் செலவு. பசு அப்படியில்லை. அது காளங்கன்று ஈன்றாலும், கிடரிக்கன்று ஈன்றாலும் வறுமையின் வாசலுக்கு அது வரவுதான். ஒரு மாடு குடும்பங்காக்கும்; ஒன்பது மாடு குலங்காக்கும் என்பது விவசாய வாழ்வில் வேரோடிய நம்பிக்கை’’[30]

என்கிறார். அதோடு பாம்புக் கடிக்கு நாட்டு மருந்தோடு மாட்டுச் சிறுநீர் சேர்ப்பது வழக்கம். அதனையும் பதிவு செய்துள்ளார் கவிஞர்.

## மரம் பற்றிய நம்பிக்கை

மரத்தினை இறைவன் உறையும் இடங்களாகக் கருதித் தமிழர்கள் வழிபட்டனர். மரத்தினை அடிப்படையாகக் கொண்டு பலவிதமான நம்பிக்கைகள் தமிழகத்தில் காணப்படுகின்றன. அரசர்கள் காவல் மரங்களைப் பாதுகாத்து வந்ததையும், தமிழகக் கோயில்களில் தலவிருட்சகமாக மரங்கள் காணப்படுவதையும், மரங்களை உடன்பிறப்பாகக் கருதிய மனப்பாங்கும் தமிழர்களின் பண்பாட்டுச் சிறப்பினை உலகிற்குப் புலப்படுத்தும். சங்க இலக்கியமான நற்றிணையில் வரும்,

‘‘நும்மினும் சிறந்தது நுவ்வையாகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே’’[31]

என்னும் பாடல் வரிகள் மரத்தினை சகோதர உறவாகப் பார்க்கும் மரபை எடுத்துக் கூறுகின்றன. கிராமங்களிலும் இந்த மரபு இன்று வரை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. அதோடு மரத்தினைத் தெய்வமாகக் கருதி வழிபடும் மரபும் இன்று வரை பின்பற்றப்பட்டு வருகிறது.

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் பேய்த் தேவரின் ஊரடித் தோட்டத்தில் நின்ற புளிய மரத்தினைக் குல தெய்வமாக வழிபட்டதை,

> ‘‘சாலையை ஒட்டித் தோட்டத்தோடு சேர்ந்திருப்பதால் பேய்த்தேவர் அந்த மரத்தைக் குலதெய்வமாய்க் கும்பிட்டு வந்தார். தோட்டத்தில் பொங்கல் வைக்கும் போது மீதப்பட்ட குங்குமம் சந்தனத்தைப் புளியமரத்துக்கும் பூசுவதுண்டு’’[32]

என்று எடுத்துக் காட்டியுள்ளார். கிராமங்களில் இன்றும் சாலையோரங்களில் தனிமையில் நிற்கும் மரங்களை இறைவனாகக் கருதிச் சந்தனம் பூசி, மாலையிட்டு வழிபடும் மரபு காணப்படுகிறது.

## மழை வேண்டி பிரார்த்தனை

உழவுத் தொழிலுக்கு அடிப்படைத் தேவையாக விளங்குவது மழைநீராகும். உழவர்கள் காலத்தால் பெய்யும் மழையை ஞாலத்தினும் பெரிதாகக் கொள்வர். மழையைக் குறித்துப் பலவிதமான நம்பிக்கைகள் காணப் பெறுகின்றன.

கணவனைத் தெய்வமாக நினைத்து வணங்கும் கற்புடைய மகளிர் மழை பெய்யச் சொன்னால், மழை பொழியும் என்பது இலக்கியம் வழி அறியும் தமிழர் நம்பிக்கையாகும். பருவ மழை பெய்யாது வறண்டு போகும் போது வருணனிடம் வேண்டுதலும் வழிபாடும் செய்வர். கிராமப்புற மக்கள் மழை பெய்யக் கழுதைக்கும் கழுதைக்கும் கல்யாணம் பண்ணி வைத்தால் மழை பெய்யும்

என்ற நம்பிக்கையும் காணப்படுகிறது. இந்த நம்பிக்கையை ‘‘கருவாச்சி காவியம்’’ என்ற நாவலில்,

> ‘‘கழுதைக்கும் கழுதைக்கும் கல்யாணம் பண்ணி வச்சா எப்பவும் மழை வரும்ங்கிறாக ஏடு பிடிச்சவுகா பெரும்போக்கா ஒரு பேச்சுப் பேசிப்புட்டா வைத்தியச்சி’’[33]

என்று பதிவு செய்துள்ளார். கிராமங்களில் தொன்று தொட்டு வரும் நம்பிக்கையையும், அந்த நம்பிக்கைக்குப் பகுத்தறிவு வழியில் கருவாச்சி வாயிலாகப் பதிலும் சொல்கிறார்.

‘கழுதைக்கும், கழுதைக்கும் கல்யாணம் பண்ணிவச்சா மழை வராது. இன்னொரு கழுதக் குட்டிதான் வரும். பேசாம இரு ஆத்தா என்று பதிலும் கூறி பழைய நம்பிக்கைகளுக்குப் புதிய வழியில் தீர்வும் சுட்டுகிறார் கவிஞர்.

## விலங்குகள் பற்றிய நம்பிக்கை

விலங்குகளில் பசு, கழுதை, நரி ஆகியவைகளின் சப்தங்களும், புதிய இடங்களுக்குப் புறப்பட்டுப் போகும்போது இந்த விலங்குகளைப் பார்த்து விட்டுச் சென்றால் நினைத்துப் போகும் காரியம் நன்றாக முடியும் என்ற நம்பிக்கையும் காணப்படுகின்றது.

கருவாச்சியின் மகன் அழகு சிங்கம், தாயிடம் கோபித்து விட்டு வெளியேறினான் அப்போது

‘‘நேரா சலவைக்காரி வீட்டுக்குப் போனான். கழுதைக் கத்துனா நல்லசகுனம்ன்னு நெனச்சானோ என்னமோ அத ஓங்கி ஒரு எத்து எத்திக் கத்தவிட்டான்’’[34] என்றும்,

“நரி முகத்துல முழிச்சா நல்லதாம்![35]

என்றும் விலங்குகள் பற்றிய நம்பிக்கையைத் தன் படைப்புகளில் பதிவு செய்துள்ளார் கவிஞர்.

## நிமித்தங்கள் பற்றிய நம்பிக்கை

“நிமித்தம்” என்ற சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி ‘காரணம், நிமித்தம், சகுனம், அடையாளம், பொருட்டு என்ற ஐந்து பொருள்களைச் சுட்டுகிறது”.[36] நிமித்தம் என்பது மனிதர்களின் வாழ்க்கையில் பின் நிகழ இருக்கும் செயல்களையோ, நன்மை, தீமைகளையோ சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். பின்னால் நடக்க இருக்கும் செயல்களை முன்னறிவிக்கும் அறிகுறியாகவே தமிழ் மக்கள் மிகப் பழமையான காலம் முதல் இன்று வரை நம்பி வருகின்றனர். நிமித்தங்கள் நம்பிக்கையின் பாற்பட்டது. தொல்காப்பியர்,

“அச்சமும் உவகையும் எச்சம் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்”[37]

என்று தொல்காப்பியத்தில் நிமித்தம் பற்றிக் கூறுகிறார். ‘புள்’ என்றால் பறவை. சங்க இலக்கியத்திலிருந்து இன்று வரை நிமித்தத்தைக் குறிக்கப் பறவைகள், விலங்குகள், நல்லோர் சொல் போன்றவற்றையே மக்கள் நம்பினர். காகம் கரைந்தால் வீட்டிற்கு விருந்து வரும் என்னும் நம்பிக்கை மிகப் பழமையான காலம் முதல் இன்றுவரை வழக்கத்தில் உள்ளது. சங்க இலக்கியமான குறுந்தொகையில்,

“விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே”[38]

என்ற பாடலில் காகம் வீட்டிற்கு விருந்து வருவதைத் தெரியப்படுத்திய நிகழ்வைச் சுட்டுகிறது. காக்கை கரைவதைத் தமிழர்கள் நன்னிமித்தமாகவே கருதி வந்துள்ளனர். கவிஞர் வைரமுத்துவும் கருவாச்சி காவியத்தில் தன் மகன் அழகு சிங்கத்தைப் பார்க்க அம்புலிப்புத்தூருக்குப் போகும் போது,

> ‘‘ஒரு புது விருந்தாளு வருது கரகரகரன்னு கத்தி
> ஊருக்குள்ள தகவல் சொல்லுது வாகை மரத்துக் காக்கா’’[39]

என்றும், வறுமையில் வாடும் கருவாச்சி, மழை பெய்யாமல் வறட்சியில் இருக்கும் ஊருக்கு காகம் கூட வராது. விருந்தாளு எப்போது வரும்? என்பதை,

> ‘‘காக்கா கத்துனா அந்த வீட்டுக்கு விருந்தாளு
> வரும்ங்கிறது ஐதீகம்’’[40]

என்று கருவாச்சி காவியம் வழியாகப் பழந்தமிழர்கள் கடைப்பிடித்து வந்த நம்பிக்கைகளைத் தனது படைப்புகளில் எடுத்தாண்டுள்ளார். இன்றும் தமிழகக் கிராமங்களில் வீட்டிற்கு முன்னோ, பின்னோ காகம் கரைந்தால் வீட்டிற்கு விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.

> நிறை குடம் எதுக்க வந்தா நல்ல சகுனமாம், சம்பந்தம்
> கூடிவருமாம் அதுக்கு’’[41]

என்பதில், தண்ணீர்ப் பானையைக் கொண்டு எதிரே வந்தால் போகும் காரியம் நல்லபடியாக முடியும் என்னும் தமிழர்களின் வேரோடிய நம்பிக்கை பளிச்சிடுகிறது.

## நாளும் கோளும் பற்றிய நம்பிக்கை

தமிழர்கள் நல்ல நாள் நட்சத்திரம் பார்த்துச் செயல்களில் ஈடுபடும் வழக்கம் பழங்காலந் தொட்டே மக்களிடம் பரவலாகக் காணப்படுகிறது.

நாட்களை விண்கோள்களின் நிலைகள் கொண்டு நிச்சயித்த நிலையில் நாட்களுக்கும் விண்கோள்களுக்கும் தொடர்பு கற்பிக்கப்பட்டது. அந்த நிலையில் கோள்களின் இயல்புகளுக்கேற்ப நாட்களின் நன்மை தீமைகள் நிச்சயிக்கப்பட்டு நல்லநாள், தீயநாள் என்ற கருத்தேற்றம் உருவாகத் தொடங்கியது. மனித சமூகம் தாங்கள் செய்யும் செயல்களில் நன்மையும், வெற்றியும் கிடைக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதால், நல்ல நாட்களையும், காலங்களையும் தேர்ந்தெடுத்து செயல்களைத் தொடங்குகின்றனர்.

'நாள் செய்வதை நல்லோர் செய்யார்' என்னும் முதுமொழியின் மூலமாக நாளும், பொழுதும் பார்த்துத் தமிழர்கள் செயலாற்றியமையை இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

> "சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
> பிறந்த நாள்வயின் பெருமங் காலமும்"[42]

என்று தொல்காப்பியமும்,

> "மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
> கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
> கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கட்
> கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்ததென"[43]

என அகநானூறும் நாளும், நேரமும் பார்த்து செயல்களைத் தொடங்கியதை அறிவிக்கின்றன. கருவாச்சி காவியத்தில் இந்த நம்பிக்கையைப் பதிவு செய்கிறார் ஆசிரியர். வளவிக்காரச் சுப்பஞ் செட்டியாரின் மகள் கனகாம்பரம் திருமணச் செய்தியை சொல்லப்போன இடத்தில் ஒரு வயதானக் கிழவி யோசனை கூறும் இடத்தில்,

"... நாளும் கோளும் நாலுஞ் செய்யும்ன்னு சும்மாவா சொன்னாக. மக பேறுகாலத்துக்குப் போறவ நல்லநாளு பாத்துப் போக வேணாமா? சொல்றேன் கேட்டுக்க. திங்கக் கெழமை திரும்பாப் பயணம், அன்னைக்குப் போகாத. செவ்வாயோ வெறும் வாயோன்னு சொல்லுவாக; செவ்வாயும் வேணாம். பொன்னு கெடைச்சாலும் புதன் கெடைக்காதும்பாக; புதன் கெழமை போ"[44]

என்று சொல்கிறாள். கிராமங்களில் வாழும் மனிதர்கள் நல்ல செயல்களை செய்யத் தொடங்கும் போது நல்ல நாள், பார்த்து செய்யத் தொடங்கியதை அறிய முடிகிறது.

முத்துகாமு தன் மாமனாரிடம் இரண்டாவது திருமணம் முடிக்கச் சொல்லும் போது, நல்ல நாள் பார்த்துத் திருமணம் முடிக்கச் சொல்லுகிறான்.

"ஆனி இருவத்தேழு நாளு நல்லாருக்கு. அதுதான் கடைசி
முகூர்த்தம். அதவிட்டா ஆடி வந்துரும்..."[45]

என்பதன் வாயிலாகத் தமிழர்கள் திருமணத்தை நல்லநேரம், நல்லநாள் பார்த்து நடத்திய செய்தியும் தெரிய வருகிறது.

## வீட்டிற்கு வெளியே தரக் கூடாத பொருள்கள்

கிராமங்களில் விளக்கு வைத்த பிறகு வீட்டிற்கு வெளியே தரக் கூடாத பொருள்கள் என்று ஒரு பட்டியல் வைத்திருப்பர். அப்படி அந்தப் பொருள்களைக் கொடுத்தால் வீட்டிலுள்ள செல்வம் போய்விடும் என்ற நம்பிக்கையும் அல்லது வீட்டிலுள்ளவர்களுக்குக் கெடுதல் வரும் என்ற நம்பிக்கையும் இன்று

வரைதொன்று தொட்டு மரபு வழியாக தொடர்ந்து வந்து கொண்டே இருக்கிறது. அதனைக் கள்ளிக்காட்டு இதிகாச நாவலில்,

> “விளக்கு வைத்த பிறகு வீட்டுக்கு வெளியே தரக்கூடாத பொருள்கள் என்று ஒரு பட்டியல் உண்டு கிராமத்தில். எது கொடுத்தாலும் கொடுக்கலாமாம். ஆனால் உப்பும் சுண்ணாம்பும் ஆகவே ஆகாதாம்”[46]

என்று கூறுகிறார். வீடுகளில் காணப்படும் செல்வம் போய்விடும் என்ற நம்பிக்கையில் சில பொருள்களைக் கிராமத்தினர் விளக்கு வைத்த பிறகு கொடுப்பதில்லை.

## சகுனம் பார்த்தல்

‘சகுனம்’ என்னும் வடசொல் ‘பறவை’யைக் குறிப்பதாகச் சுட்டுவர். தமிழில் ‘புள்’ என்னும் சொல் சகுனத்தைக் குறிக்கும். தமிழகக் கிராமங்களில் சகுனம் பார்க்கும் மரபு மிகப்பழமையான காலத்தே காணப்படுகிறது.

நிமித்தம் என்னும் சொல்லுக்குப் பேரகராதி காரணம், நிமித்தம், சகுனம், அடையாளம், பொருட்டு என்னும் பொருள் தருகிறது. சகுனங்கள் ஐந்து நிலைகளில் ஏற்படுவனவாக ஆங்கிலக் கலைக் களஞ்சியம் குறிப்பிடுகிறது. “விண்ணிலுள்ள இடி, மின்னல், நட்சத்திரங்கள் மூலமாகவும், பறவைகள் ஒலி, பறக்கும் திசைகள் மூலமாகவும், மிருகங்கள் மற்றும் வாலுள்ள, ஊர்வனவற்றின் ஓசை மூலமாகவும், பறவைகள் உணவு எடுக்கும் முறையிலும், இயற்கைக்கு மாறுபட்ட நிகழ்ச்சிகள் மூலமாகவும் சகுனங்கள் வெளிப்படுகின்றன”[47]

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேய்த் தேவர் தன் மகன் சின்னுவுக்கு தொழில் பழகிக் கொடுக்கும் போது,

''சாமி கும்பிட்டுச் சகுனம் பார்த்து அவன் கையில்
மண்வெட்டி கொடுத்தார்''[48]

என்கிறார். முதன் முதலில் தொழில் கற்றுக் கொடுக்கும் போது இறைவனை வழிபட்டு, சகுனம் பார்த்துச் சொல்லிக் கொடுக்கும் மரபு தமிழகக் கிராமங்களில் இன்றும் காணலாம். எந்தப் பணியின் தொடக்கத்திற்கும் சகுனம் பார்ப்பது நிலைத்து நின்றுவிட்ட மரபாகக் காணப்படுகிறது.

## சாபமிடுதல்

இதிகாசங்கள், புராணங்களில் சாபங்களும், சாப விமோசனங்களும் காணப்படுகின்றன. கடவுளின் சாபம், முனிவர்களின் சாபம், பத்தினிப் பெண்டிரின் சாபம், இவற்றினால் பாதிக்கப்பட்டவர்கள் குறித்த செய்திகளை இதிகாசங்களில் காணலாம். சாபமிடுதல் என்பது ஒருவர் நீதிநெறிகளுக்கு மாறாக நடக்கும் போது அவரால் பாதிக்கப்பட்டவர்கள் வயிறு எறிந்து, மனம் நொந்து சொல்லும் வார்த்தைகளாகும். அவ்வாறு சாபமிடும் போது அந்த வார்த்தைகள் துன்புறுத்தியவர்களிடம் போய்ச் சேரும் என்னும் நம்பிக்கை நிலவுகிறது. கள்ளிக் காட்டு இதிகாசத்தில் கருத்தக்கண்ணனின் கண் பார்வையில்லாத தாய், வட்டிக்கு விடும் சூத்தப்பல்லன் அன்னக் கொடியின் திருமணத்தை நிறுத்த முயற்சிக்கும் போது சாபமிடுகிறாள்.

''ஏலே சூத்தப்பல்லா! எடுபட்ட நாயி! நல்லநாளும்
பொழுதுமா வந்து நரி நாட்டாமையா பண்ற? தூக்கிப்
போட ஆளில்லாமச் சாவடா'' கிழவி சாபம் கொடுத்தாள்''[49]

கிராமங்களில் பெரியவர்கள் இடும் சாபம் பலிக்கும் என்று நம்புகின்றனர்.

## சத்தியம் செய்தல்

கிராம மக்களிடம் சத்தியம் செய்து கொடுக்கும் பழக்கம் இருந்து வருகிறது. கிராமங்களில் அடிக்கடி சத்தியம் செய்பவரைப் பார்த்து ‘‘சத்தியம் இவனுக்குச் சக்கரைப் பொங்கலடா’’ என்ற பழமொழியை உருவாகிவிட்டது. சத்தியம் செய்து கொடுத்து விட்டால் அதை மீறுவது கடவுள் தண்டனைக்குரியது என்னும் நம்பிக்கை இருந்து வருகிறது. கிராமங்களில் பெரிய காரியத்திலிருந்து சிறிய காரியம் வரை சத்தியம் செய்வார்கள். பெரியவர் முதல் சிறியவர் வரை இவ்வழக்கம் காணப்படுகிறது. தெய்வத்தின் பெயரால், தாய் தந்தையரின் பெயரால், உணவின் பெயரால், உடையின் பெயரால், வீட்டின் பெயரால், பூமியின் பெயரால், குழந்தைகளின் பெயரால் சத்தியம் செய்து கொடுக்கின்றனர். இவற்றின் மீது சத்தியம் செய்து அவற்றிலிருந்து தவறிவிட்டால் சத்தியம் செய்தவன் அவற்றை இழந்துவிடுவான் என்னும் நம்பிக்கை காணப்படுகிறது. கருவாச்சி காவியத்தில் இந்த சத்தியத்தை திம்சுக்கு மருத்துவம் பார்த்த கிழவி மூலம் வெளிப்படுத்துகிறாா் ஆசிரியர்.

> ‘‘பொய்யா சொல்றேன். அவளுக்குக் கருக் கலச்சவ நானு. கர்ப்பப்பை எரிஞ்சு போச்சுன்னு சொன்னவ நானு; நான் கும்புடுற முனுசாமி மேலே சத்தியம்’’[50]

என்கிறாள். அதோடு அழகு சிங்கம் தன் தாத்தா சடையத் தேவனைப் பழிவாங்குவதாகத் தன் தாய் கருவாச்சியிடம் சத்தியம் செய்வதையும் பதிவு செய்கிறார்.

"சடையத் தேவனச் சந்திக்கு இழுத்துக் கட்டையத் தேவன அவன் ஆத்தா குடுத்த பாலக் கக்க வைக்கல .... நான் எங்க ஆத்தாளுக்குப் பெறந்தவன் இல்ல. இது இந்தத் தீ மேலே சத்தியம்"[51]

என்கிறார். இவை போன்ற சத்தியங்களைத் தவிர தலையில் அடித்தும், கையில் அடித்தும், பூமியில் அடித்தும், ஏதேனும் ஒரு பொருளை போட்டுத் தாண்டியும் சத்தியம் செய்யும் வழக்கம் காணப்படுகிறது. நாட்டுப்புற மக்கள் சத்தியத்தின் மீது கொண்டிருக்கும் நம்பிக்கை இதன் மூலம் வெளிப்படுகிறது.

## விளைச்சல் பற்றிய நம்பிக்கை

கிராமங்களில் விளைச்சல் அதிகமாக இருப்பதற்கு ஒரு மூட நம்பிக்கை இன்று வரை நம்பப்பட்டு வருகிறது. இறந்தவர்களின் வீட்டிலுள்ள வயல்களில் விளைச்சல் அதிகமிருக்கும் என்று நம்பப்பட்டு வருகிறது; அல்லது வயல்களில் விளைச்சல் அதிகமிருந்தால் அந்த வீட்டில் இறப்பு இருக்கும் என்ற நம்பிக்கை கிராம மக்களால் இன்றும் நம்பப்பட்டு வருகிறது. அந்த வெள்ளாமைக்குச் சாவு வெள்ளாமை என்று சொல்வதும் உண்டு. உண்மையில் இந்த இரண்டிற்கும் தொடர்பில்லை. இருப்பினும் இந்த நம்பிக்கை காலங்காலமாக கிராமங்களில் உலா வருகின்றது என்பதை பேய்த் தேவர் கதாபாத்திரம் மூலம் கவிஞர் விளக்குகிறார். பேய்த் தேவரின் மனைவி அழகம்மா இறந்த போது பேய்த் தேவரின் வெள்ளாமக் காட்டில் அதிகம் விளைச்சல் இருந்ததைக் கவிஞர்,

"ஆள் செத்தா வெள்ளாம நல்லா வெளையும், வெள்ளாம நல்லா வெளைஞ்சா ஆள் செத்தாலும் சாகுமுன்னு சொல்லுவாக ஊர்ல. அழகம்மா செத்த தாலயோ என்னமோ அந்த வருச வெள்ளாம பெரும்போடு போட்டிருந்தது"[52]

என்கிறார்.

## பூப்போட்டுப் பார்த்தல்

கிராமங்களில் வாழ்கின்ற மனிதர்கள் தங்கள் வீட்டில் ஏதேனும் ஒரு சுபநிகழ்வைத் தொடங்கலாமா? இல்லை வேண்டாமா? என்பதைப் பார்க்க கோவிலுக்குச் சென்று பூப்போட்டு பார்ப்பது வழக்கம். மனதிற்குள் ஒரு பூவினை நினைத்துக் கொண்டு அதோடு சேர்த்து இன்னொரு பூவினையும் சேர்த்து இறைவன் சன்னதியில் போட்டு, அருகாமையில் உள்ள மனிதர்களை வைத்து ஏதேனும் ஒரு பூவினை எடுக்கச் சொல்வர். தங்கள், மனதில் நினைத்த பூவினை எடுத்தால் அந்த செயல் சுபமாக முடியும் என்பது அவர்களது நம்பிக்கை.

கருவாச்சியின் திருமணத்தின் போது முடிவெடுக்க முடியாமல் திணறிய பெரியமூக்கி இறுதியில் பூப்போட்டுப் பார்த்து முடிவெடுத்ததைக் கவிஞர் கருவாச்சி காவியத்தில் பதிவு செய்துள்ளார்.

“சூடம் சாம்பிராணி கொளுத்தி, சாமிகளயெல்லாம் கும்புட்டுக் கூப்பிட்டு, நான் பெத்த மக நல்லகதிக்கு வரணும்னா மஞ்சப் பூவக்குடு”ன்னு வெள்ளப்பூவு மஞ்சப்பூவு ரெண்டு பூவையும் கட்டிப்போட்டா. கருவாச்சியக் கூப்பிட்டு ‘ரெண்டுல ஒண்ண எடுடீ’ன்னா. அவ காலுக்கு விழுகிறேன் சாமின்னு கதவுல ஒரு முட்டுமுட்டித் தட்டுத்தடுமாறி ஒரு பூவ எடுத்தா.

பிரிச்சுப் பார்த்தா
மஞ்சப்பூவு
சாமி வழி விட்ருச்சு
கல்யாணமும் முடிஞ்சுபோச்சு”[53]

என்னும் பகுதி,

கிராமங்களில் பூப்போட்டுப் பார்த்து முடிவெடுக்கும் நிகழ்வு இன்றும் நடைமுறையில் இருந்து வருவதைக் காட்டுகிறது.

## கைராசி பார்த்தல்

கிராமங்களில் வாழ்கின்ற மக்கள், தங்களின் இல்லங்களில் எந்த ஒரு நல்ல நிகழ்ச்சியினை நடத்தினாலும் கைராசி பார்க்கின்ற பழக்கம் உண்டு. கிராமங்களில் சிலரின் கைகள் தொட்டதைத் துலங்கிடச் செய்யும் கையுடையவர்கள் என்றும், சிலரை ராசியில்லாதவர்கள் என்றும் சொல்லும் வழக்கம் நடை முறையில் காணப்படுகிறது. தொட்டால் துலங்கிடும் ராசியுடையவர்கள் தொட்டு, சில நிகழ்ச்சியினைத் தொடங்கி வைத்தால், அந்த செயல் சிறப்பாக நடைபெறும்; வெற்றி பெறும் என்ற நம்பிக்கையைக் கொண்டுள்ளனர். கை ராசியில்லாதவர்கள் தொடங்கி வைத்தால், அந்த நிகழ்வுகள் பாதியிலேயே நின்றுவிடும் என்றும் நம்புகின்றனர். பெண்கள் பருவமடையும் பொழுது தலையில் நீருற்றுவதற்கும், வளையல்கள் அணிவிப்பதற்கும், ஆபரணங்கள் செய்வதற்கும், திருமணத்தின் போது தாலி செய்வதற்கும் பெரும்பாலும் கைராசி பார்ப்பர். திருமண நிகழ்வின் போது தாலி செய்யும் தட்டானிடம் ராசி பார்ப்பர். தட்டான் செய்து கொடுத்த தாலிச்சரடு அணிந்த பெண்கள் நோய்நொடியின்றி நீடூழி வாழ்கின்றனரா என அறிந்த பின்னரே அவனிடம் தாலி செய்யக் கூறுவர். கருவாச்சி காவியத்தில் சுப்பஞ்செட்டியார் தன் மருமகனுக்கு வைர மோதிரம் செய்ய நிலக்கோட்டைக்குச் சென்றபோது தங்கஆசாரி, செட்டியாரைப் பார்த்துக் கூறுகிறார்.

“அய்யா செட்டியாரய்யா, இந்தப் பையன் என் புதுமாப்ள. பரம்பரையாப் பொன்னாசாரிக இவுக குடும்பம். திருமல நாயக்கருக்கு செவப்புக் கடுக்கன் செஞ்சுக் குடுத்த வகையறா. மோதிரம் செய்யறதுல மன்னன்”[54]

தொழில் செய்வதில் கைதேர்ந்தவன் என்றும், பரம்பரை பரம்பரையாக நகை செய்து கொடுக்கும் பரம்பரை என்று கூறியதோடு மன்னர் பரம்பரைக்கே நகை செய்து கொடுத்தவர் என்று சொல்வதில் இருந்து கைராசி பார்க்கும் பழக்கம் கிராமங்களில் இருப்பது தெரிய வருகிறது.

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் முத்துக் கண்ணியின் வரலாற்றை பேய்த் தேவர் தன் பேரன் மொக்கராசுவிடம் எடுத்துச் சொல்லும் போது இப்பழக்கத்தினை,

“கருதறுக்கப் போற பொம்பளைக பண்ணருவாள அவகிட்டக் குடுத்துத் தொட்டு வாங்கிட்டுப் போவாளுக. வெத மரக்கால அவகிட்டக் குடுத்து வாங்கிட்டுப் போவாக. அவபுடி கயிற்றத் தொட்டுக் குடுத்தாப் போதுமாம். ஈனாத பசுவும் ஈனுமாம்”[55]

என்று எடுத்துக்காட்டுகிறார். திருமணக் காலங்களில் தாலியோ, பிற ஆபரணங்களோ செய்வதற்குத் தட்டானின் ராசி பார்ப்பது கிராமங்களில் இன்றும் வழக்கில் இருந்து வருகிறது.

## கண்படுதல்

கிராமங்களில் வாழ்கின்ற மக்களிடம் மிகப் பழமையான காலந்தொட்டே கண்படுதல் பற்றிய நம்பிக்கை காணப்படுகிறது சிறு குழந்தைகளுக்குக் கண்பட்டுவிடக்கூடாது என்று கன்னங்களில் மைவைக்கும் பழக்கமும், கண்ணேறு

பட்டு விட்டாலோ முச்சந்தியிலோ அல்லது நாற்சந்தியிலோ இருந்து மண்ணெடுத்து வந்து, அதோடு உப்பு, புளி, மிளகுவத்தல், வைத்து சுற்றி அடுப்பில் போடுவது, முட்டையைத் தலை சுற்றி வீசியெறிவது போன்ற பழக்கங்கள் உண்டு. புதிதாக வீடு கட்டினால், வீட்டின் முன்புறத்தில் பூசணிக்காயைக் கட்டித் தொங்க விடுவது, தங்களின் விவசாய நிலத்தில் அதிகமான விளைச்சல் பெருகும்போது, துணியால் பொம்மை செய்து நிற்க வைப்பர். இந்த செயல்களுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் என்னவெனில், பிறரின் கண்பட்டுவிட்டால் தொடங்கிய செயல் முழுமை பெறாமல், வெற்றி பெறாமல் வீணாகிப் போய்விடும் என்ற கிராம மக்களின் நம்பிக்கையை வைரமுத்து தன் படைப்புகளில் சுட்டியுள்ளார்.

கருவாச்சி காவியத்தில் அம்புலிப்புத்தூருக்குள்ள அழகு சிங்கம் நுழைந்து மூன்றாம் தெரு வீட்டில போய் முழித்துக் கொண்டிருந்த போது, வயதான கிழவி

> “கிட்ட வந்தா, ரெண்டு கையிலயும் அவன் ரெண்டு கன்னத்தையும் தொட்டு வழிச்சு, தன் நெத்திப் பொட்டுல வெரல்கள மடக்கி நெட்டி முறிச்சா. சடசடசடன்னு வெடிச்சுச் சத்தம் போடுது வெரலு யாத்தே! கண்ணுபட்ருக்கே என் கன்னுக்குட்டிக்கு”[56]

என்று கண்ணேறு கழித்தாள். கைவிரலில் எவ்வளவு சப்தம் வருகிறதோ அவ்வளவு கண்ணேறு இருப்பதாகக் கிராமங்களில் இன்று வரை நம்பப்பட்டு வருகிறது.

## சனிச்சாவு குறித்த நம்பிக்கை

கிராமங்களில் இறந்த உடலைக் குறிப்பதற்குப் பொணம் (பிணம்) சடலம், பிரேதம் என்ற சொற்களைப் பயன்படுத்துகின்றனர். உயிர் உடலைவிட்டுப் பிரிந்த

நேரம் நல்ல நேரமா, கெட்ட நேரமா என்பதை நாள்காட்டி மூலம் கணக்கிட்டு இறப்பை வகைப்படுத்துகின்றனர். வார நாட்களில் சனிக்கிழமை அன்று ஒருவர் இறந்துவிட்டால் அதனை, 'கெட்ட சாவு' என்று கூறுகின்றனர். இதற்கெனச் சில சடங்குமுறைகள் தனியாக இன்றும் கிராமத்தில் மேற்கொள்கின்றனர். இறந்தவர்களின் இறப்புச் சடங்கில் கலந்து கொள்ள வந்த வெளியூர் உறவினர்கள் இரவு வேளையில் இறந்தவர் வீட்டில் தங்கக் கூடாது என்னும் நம்பிக்கை நடைமுறையில் இருக்கின்றது. இதற்குக் காரணம் 'சனிப் பிணம் துணை தேடும்'' என்ற நம்பிக்கை இன்றும் உள்ளது. இந்தப் பழக்கவழக்கத்தினை தன் படைப்பில் அப்படியே எடுத்தாள்கிறார் கவிஞர் வைரமுத்து. கருவாச்சி காவியத்தில் கருவாச்சியின் தாய் இறந்த நாளைக் குறிக்கும் போது,

> ''அன்னைக்குச் சனிக்கிழமை. சனிப்பொணம் தனியாகப் போகாதாம், ஒரு கோழிக் குஞ்ச அடிச்சுப் பாடையில் கட்டித் தொங்க விட்டாக. தகரம் கொன்டுபுடுச்சு பெரிய மூக்கிய; சாஸ்திரம் கொன்டு புடிச்சு கோழிக்குஞ்ச''[57] என்கிறார்.

சனிக்கிழமை இறந்தவருடன் அவரது உடலை அடக்கம் செய்யவோ, எரியூட்டவோ கொண்டு செல்லும் போது உயிருள்ள கோழியைக் கொன்று பாடையுடன் சேர்த்து கட்டிக் கொண்டு செல்வர். அந்தக் கோழியை அதே குழியில் இட்டுப் புதைப்பர் அல்லது எரியூட்டுவர்.

## பொரி வீசுதல்

இறந்தவரின் உடலை வீட்டிலிருந்து வெளியே தூக்கி வரும் போது பூக்களையும், வீட்டிலிருந்து வறுத்து எடுக்கப்பட்ட சிறு தானியங்களையும் வழிநெடுக வீசுவது வழக்கம். சிறு தானிங்களையும், பூக்களையும் மொத்தமாக ஒருவர் ஓலைப் பெட்டியில் வைத்து, ஒவ்வொரு தெரு முனையிலும், பிணம் போகிற பாதை என்பதை காட்டும் வகையில் தூவிவிட்டுச் செல்வர். இறந்தவர்கள் இரவில் மீண்டும் வீட்டை நோக்கி ஆவி வடிவில் வருவர் என்றும், அப்படி வரும் வழியில் சிதறிக் கிடக்கும் பொரியைத் தின்று கொண்டு வருவதற்குள் விடிந்துவிடும் என்றும் அதனால் மீண்டும் சுடுகாட்டிற்கே சென்று விடுவர் என்றும் நம்புகின்றனர். பொரி தூவவில்லையெனில் இரவில் பசியுடன் வரும் ஆவி நடமாடும் மனிதர்களையும் தொற்றிக் கொள்ளும் என்றும் நம்புகின்றனர். அந்த நம்பிக்கையையும், சுடுகாடு வரை பொரியையும், பூவினையும் தூவிக் கொண்டு செல்வதையும் கருவாச்சி காவியத்தில்,

> “கொட்டுக்காரன் முன்னுக்கக் கொட்டடிச்சுப் போக - மாட்டுச் செவந்தியையும், அரளிப்பூவையும் பூக்காரன் ரெண்டு பக்கமும் பிச்சு ஒதறிவர – கடுகும் பொரியும் அள்ளித் தெளிச்சுக்கிட்டே தோட்டி பின்னுக்கத் தொடர்ந்து வர – போகுது பெரிய மூக்கி பொணம் கடைசிக்காடு தேடி”[58]

என்று எடுத்துக் கூறுகிறார் கவிஞர். கிராமப் பகுதிகளில் விலைகுறைவாகக் கிடைக்கும் அரளிப் பூ, மாட்டுச் செவந்திப்பூவும், வசதி படைத்தவர்கள் மல்லிகை, ரோஜா, கிரேந்தி போன்ற பூவினையும் வீசிச் செல்லும் பழக்கத்தினைப் பதிவு செய்கிறார் கவிஞர்.

## மாலை நேர மழை பற்றிய நம்பிக்கை

பழமையில் ஊறிய கிராமத்து மக்கள் பல நம்பிக்கைகளை இன்றும் காப்பாற்றி வருகின்றனர். உழவுத் தொழிலுக்கும், மக்கள் உயிர்வாழ்வதற்கும் அடிப்படைத் தேவையாக விளங்குவது மழை. உழவர்கள் தங்களின் பயிர் வளர, விளைச்சல் அதிகரிக்க மழையைப் பெரிதும் நம்புகின்றனர். மழையைக் குறித்து பலவிதமான நம்பிக்கைகள் கிராமங்களில் இன்றும் காணப்படுகின்றன. கிராமப்புற மக்களிடம் புரட்டாசி மாதம் மழை பெய்யும் என்ற நம்பிக்கை குடியிருப்பது போல, மாலை நேரத்தில் பெய்யும் மழை பற்றியும் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

> ‘‘பேய் மழை பிடாரி மழை; சாயங்காலம் வந்த விருந்தும் மழையும் போகாதுங்கற மாதிரி அடிஅடின்னு அடிக்குது’’[59]

என்னும் பகுதியில் பொழுது சாயும் மாலை நேரத்தில் வந்த மழையும், விருந்தும் உடனே போகாது என்ற நம்பிக்கை கிராம மக்களிடம் இருப்பதைக் காண முடிகிறது. தமிழகத்தில் உள்ள எல்லாக் கிராமங்களிலும் இத்தகைய நம்பிக்கை இருக்கிறது.

## தொகுப்புரை

நம்பிக்கை பற்றிய கருத்துக்களும், நம்பிக்கையின் வரையறையையும், நம்பிக்கையின் தன்மைகளும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

நம்பிக்கை பற்றிய தெய்வ வழிபாடும், தெய்வங்களுக்குப் பலியிடுதல். காணிக்கை செலுத்துதல் பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

குழந்தைப் பேறுகாலத்திற்குத் தாய் வீடு செல்லுதல், குழந்தைப் பேறு பற்றிய நம்பிக்கை, கனவு, காத்து கருப்பு, குறிசொல்லும் கோடாங்கியை நம்புவது பற்றியும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

குலமகள் கண்ணீர் விடுவது, விதியின் பால் நம்பிக்கை வைப்பது. பசுமாட்டைத் தெய்வமாக வழிபடுவது, மரங்களைத் தெய்வங்களாகக் கருதுவது, மழை வேண்டிப் பிரார்த்தனை செய்வது பற்றியும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

விலங்குகள் பற்றிய நம்பிக்கை, நிமித்தங்கள், நாள் பற்றிய நம்பிக்கைகளும் ஆராயப்பட்டுள்ளன.

வீட்டிற்கு வெளியே தரக்கூடாத பொருள்கள், சகுனம் பார்ப்பது, சாபமிடுவது, சத்தியம் செய்வது, விளைச்சல் பற்றிய நம்பிக்கை, பூப்போட்டுப் பார்த்தல், கைராசி பார்ப்பது, கண்ணேறு பற்றிய கருத்துக்களும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. மாலை நேரத்து மழை பற்றிய நம்பிக்கையும் ஆய்வின் வழி வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1) நற்., 175.

2) மேலது., 321.

3) க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.104.

4) மேலது., ப.105.

5) தொல்., பொருளதிகாரம், நூ.85.

6) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.32.

7) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.26.

8) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.34.

9) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.291.

10) மேலது., ப.323.

11) அகம்., 309.

12) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.195.

13) சிறுபாணாற்றுப்படை, பா.வரி. 9.

14) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.32.

15) மேலது., ப.125.

16) மேலது., ப.127.

17) மேலது., ப.138.

18) மேலது., பக்.139-140.

19) ராபர்ட், டி. டவுன்ஸ், உலகத்தை மாற்றிய புத்தகங்கள், பக்.257-258.

20) அகம்., 141.

21) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.278.

22) வைரமுத்து, தமிழுக்கும் நிறமுண்டு, ப.99.

23) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.33.

24) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.175.

25) மேலது., ப.22.

26) மேலது., ப.23.

27) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.36.

28) புறம்., 192.

29) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.38.

30) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.27.

31) நற்., 172.

32) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.122.

33) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.311.

34) மேலது., ப.273.

35) மேலது., ப.273.

36) Tamil Lexicon, Vol.IV, Part.I, p.2254.

37) தொல்., பொருளதிகாரம், நூ.88.

38) குறுந்., 210.

39) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.305.

40) மேலது., ப.310.

41) மேலது., ப.93.

42) தொல்., பொருளதிகாரம், நூ.88.

43) அகம்., 86.

44) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.85.

45) மேலது., ப.201.

46) வைரமுத்து, கள்ளிக்காட்டுஇதிகாசம், ப.34.

47) Encyclopedia Britannica, Vol.2, p.751.

48) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.71.

49) மேலது., ப.211.

50) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.276.

51) மேலது., ப.228.

52) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.198.

53) வைரமுத்து, கருவாச்சி காவியம், பக்.25-26.

54) மேலது., ப.206.

55) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.148.

56) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.258.

57) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.117.

58) மேலது., ப.118.

59) மேலது., ப.177.

# இயல் 5

# கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் வட்டார வழக்காறுகள்

## முன்னுரை

ஒரு குறிப்பிட்ட இன, வட்டார மக்களின் பழக்கவழக்கங்கள், பேச்சுவழக்குகள், நடையுடை பாவனைகள், செயல்பாடுகள் ஆகியவற்றை மையமாகக் கொண்டு இலக்கியங்கள் எழுதப்படும் போக்கு இன்றைய நவீன இலக்கிய உலகில் அதிகம் காணப்படுகிறது. கிராமியப் பண்பாட்டுச் சூழலில் பிறந்து, வளர்ந்து வரும் கவிஞர், இன்னொரு இடத்திற்குப் புலம்பெயர்ந்து சென்றாலும், அவர் பிறந்த மண்ணின் சாயல், பேச்சுவழக்குகள் அவர் அறிந்தோ, அறியாமலோ அவரின் படைப்புகளில் இடம் பெறுவது தவிர்க்க முடியாதது. ஒரேமொழி பேசும் மக்கள் பல்வேறு இடங்களில் வாழ்வதால் மனிதர்களுக்கு மத்தியில் இடைவெளிகள் தோன்றுகின்றன. இந்த இடைவெளி வேறுபாடே வட்டார வழக்காறுகள் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணமாகும். அந்த அடிப்படையில் கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் காணப்படும் வட்டார வழக்குகளை ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## வட்டார வழக்குகள்

ஓர் எழுத்தாளன் பிற மனிதர்களின் உணர்ச்சியைத் தெளிவாகப் புலப்படுத்தும் மொழியைக் கையாளும் திறத்தாலே அவரின் படைப்புகள் சமூகத்தில் வெற்றி பெறுகின்றது. அனைவரும் அறிந்திருக்கின்ற அழகான சொற்களால், இனிமையாகவும், எளிமையாகவும், நுட்பமாகவும் கருத்தினை

உணர்த்துவதே நல்ல நடையாகும். ஒரு படைப்பாளியின் உள்ளத்திற்கும் நடைக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு.

“ஒரு ஆசிரியரின் தனித்தன்மையை அழகுற வெளிப்படுத்த வல்லது நடை”[1] எனப்படும்.

அந்த அடிப்படையில் கவிஞர் வைரமுத்து தன்னுடைய படைப்புகளில் கிராமப்புற மக்கள் பேசும் வட்டார வழக்காறுகளை அழகுற பயன்படுத்தியிருக்கிறார். கிராமப்புற மக்கள் பேசும் பேச்சு வழக்கினை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை

1. வட்டார வழக்குகள்
2. சமுதாயம் சார்ந்த கிளை வழக்குகள்

மேலும் வட்டார வழக்கினை

“1. வடக்குக் கிளைமொழி
2. கிழக்குக் கிளைமொழி
3. மேற்குக் கிளைமொழி
4. தென்கிளை மொழி

என நான்கு வகையாக மொழியியலார் பகுத்துக் காண்பர்”.[2]

## தென் தமிழக வழக்கு

மதுரை, தேனி, இராமநாதபுரம், சிவகங்கை, விருதுநகர், திருநெல்வேலி, தூத்துக்குடி, கன்னியாகுமரி ஆகிய எட்டு மாவட்டங்களில் உள்ள மக்களின் பேச்சு வழக்குத் தன்மைகள் பெரும்பாலும் ஒத்துக் காணப்படுவதாலும், தமிழ்நாட்டின் தெற்குப் பகுதியில் அமைந்திருப்பதாலும் இந்த

எட்டுமாவட்டங்களையும் தென் தமிழகம் என அழைக்கிறோம். இந்த எட்டு மாவட்டங்களிலும் நன்செய் நிலமும், புன்செய் நிலமும், வானம் பார்த்த பூமியும் சேர்ந்து காணப்படுவதால் விவசாயமும், அவை சார்ந்த தொழில்களும் நடைபெறுகின்றன. அதிலும் மதுரை, தேனி, சிவகங்கை மாவட்டத்து மக்கள் பேசும் பேச்சுமொழிகள் அனைவருக்கும் புரியும் படி அமைந்த பேச்சு வழக்காகும். கவிஞர் தான் பிறந்து வளர்ந்த தேனி மாவட்ட மக்களின் பேச்சு வழக்குகளை தன் படைப்புகளில் எங்ஙனம் பயன்படுத்தியுள்ளார் என்பதை இவ்வியல் ஆராய்கிறது.

## தேனி மாவட்ட மக்களின் பேச்சு வழக்கு

தேனி மாவட்ட மக்களின் பேச்சு வழக்குகள் பெரும்பாலும் நாட்டுப்புறப் பேச்சு வழக்காக இருந்தாலும் பெரும்பாலும் இலக்கியச் சாயல் உடையதாகவே இருக்கிறது. ஒருசில இடங்களில் மக்கள் பேசும் சொற்கள், தொடர் பேச்சு வழக்கிலும் சேராமல், இலக்கிய வழக்கிலும் சேராமல் தனித்து நிற்கும். சான்றாக,

| | | | | |
|---|---|---|---|---|
| மரியாதை | - | மரியாதி | - | மருவாதை |
| சாம்ராணி | - | சாம்பிராணி | - | சாம்புராணி |
| அப்புறம் | - | அப்பிறம் | - | அப்பறம் |
| அதாகப்பட்டது | - | அதுவாகப்பட்டது | - | அதுவானப்பட்டது |
| சேர்த்து | - | சேர்ந்து | - | சேந்து |

முதலான சொற்களைக் குறிப்பிடலாம். சொல் வகையிலும், தொடர்வகையிலும், பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் மிகுதியான மாற்றங்கள்

கிராமப்புறங்களில் உண்டு. இருந்தாலும் ஒலியின் வகையில் தான் அதிகளவு மாற்றங்கள் உள்ளன.

எழுத்து வழக்கு, இகரமும் - பேச்சு வழக்கு உகரமும் (இ→2)

(எ.கா) பிள்ளை - புள்ளைய (கருவாச்சி காவியம், ப.38)

பிறந்தேன் - பொறந்தேன் (மேலது, ப.59)

பிழைக்க - புழைக்க (மேலது, ப.59)

பிரட்டி - புரட்டி (மேலது, ப.61)

பிள்ளைதாச்சி - புள்ளதாச்சி (மேலது, ப.62)

**எழுத்து வழக்கு இகரமும் - பேச்சு வழக்கு எகரமும் (இ→எ)**

(எ.கா) கிடந்த - கெடந்த - (கருவாச்சி காவியம், ப.329)

இலவம்பஞ்சு - எலவம் பஞ்சு (மேலது, ப.318)

இடத்துல - எடத்துல (மேலது, ப.318)

இரண்டு - ரெண்டு (மேலது, ப.318)

கிடைக்கிற - கெடக்கிற (மேலது, ப.318)

கிடைக்குது - கெடைக்குது (பாற்கடல், ப.7)

**எழுத்து வழக்கு உகரமும் பேச்சு வழக்கு ஒகரமும் (உ→ஒ)**

(எ.கா) குடலை - கொடலை (பாற்கடல், ப.41)

சுமந்து - சொமந்து (மேலது, ப.27)

துறைக்கு - தொறைக்கு (மேலது, ப.27)

உதறி - ஒதறி (மேலது, ப.20)

உரசணும் - ஒரசணும் (மேலது, ப.41)

முதல் - மொதல் (மேலது, ப.27)

**எழுத்து வழக்கு எகரமும் பேச்சு வழக்கு ஒகரமும் (எ→ஓ)**

பெண் - பொண்ணு (கள்ளிக்காட்டு இதிகாசம், ப.34)

மேழியில் - மோழியில் (மேலது, ப.17)

மேற்கண்ட மாற்றங்களை நன்கு கூர்ந்து நோக்கினால் பேச்சு வழக்குச் சொற்களில் வலஇடமாற்றமோ, கீழ்மேல் மாற்றமோ. குறுக்கு மாற்றமோ நிகழவில்லை. மேல் கீழ் மாற்றமும், இடவல மாற்றமும் மட்டுமே நிகழ்ந்துள்ளன.

இ → உ<br>
↓ ↓<br>
எ → ஓ

இடம் → எடம் (கருவாச்சி காவியம், ப.318)

பிள்ளை → புள்ளை (மேலது, ப.62)

உயர → ஒசக்க (கள்ளிக்காட்டு இதிகாசம், ப.356)

**எழுத்து வழக்கிலுள்ள ஈற்றுமெய் ஒலி பேச்சு வழக்கில் மறைந்து வரும் தன்மை.**

கிராமப்புற மக்கள் பேசும் வட்டார வழக்குச் சொற்களில் ஈரசைச் சொற்களில் பலவும், பல அசைச் சொற்களில் சிலவும், மெய்யெழுத்துக்களில் முடியும் போது அந்த ஈற்று மெய்கள் ஒலியிழக்கும். அப்படி ஒலியிழந்து உச்சரிக்கும் சொற்களைக் கவிஞர் வைரமுத்து தன் படைப்புகளில் அப்படியே

பயன்படுத்தி அந்த வட்டார மக்களின் வாழ்க்கையோடு படிக்கும் வாசகர்களையும் இரண்டறக் கலக்கச் செய்கிறார்.

(எ.கா) பாம்புகள் - பாம்புக (கருவாச்சி காவியம், ப.14)

ஆடுமாடுகள் - ஆடுமாடுக (மேலது, ப.14)

வீடுகள் - வீடுக (மேலது, ப.14)

இதுகள் - இதுக (மேலது, ப.14)

**மகர னகர ஈறுகள்**

ஈரசைச் சொற்களும், பலஅசைச் சொற்களும் மகர, னகரத்தில் முடியுமாயின் அந்த மகர னகரங்கள் அயலில் உள்ள உயிரை மூக்கொலி பெறச் செய்யும். அதோடு சில இடங்களில் மகர, னகரங்கள் மறைந்து வரும்.

(எ.கா) வரலாம் - வரல (கள்ளிக்காட்டு இதிகாசம், ப.33)

சொன்னாள் - சொன்னா (மேலது)

**ர் + மெய் + மெய் = மெய் + மெய்**

எழுத்து வழக்கில் ர் + மெய் + மெய் என்ற எழுத்து வரிசை முறை பேச்சு வழக்கில் மெய் + மெய் ஆக ஒலிக்கும். அதைப்போல நகர ஒற்றிற்குப் பின்னால் இரண்டு ஒற்றெழுத்துக்கள் வந்தாலும் ரகரம் மறைந்து உச்சரிக்கப்படும். இப்படிப்பட்ட உச்சரிப்புமுறைகளையும் கவிஞர் தன் படைப்புகளில் அங்ஙனமே கையாண்டுள்ளார்.

(எ.கா) சேர்த்தா - சேத்தா (கருவாச்சி காவியம், ப.14)
சேர்த்து - சேத்து (மேலது, ப.14)
தீர்த்து - தீத்து (மேலது, ப.17)
பார்க்கும் - பாக்கும் (மேலது, ப.16)

எழுத்து வழக்கில் வரும் ககரம் பேச்சு வழக்கில் உச்சரிக்கப்படும் போது வகரமாக மாறி ஒலிக்கும்.

(எ.கா) மகள் → மவ (பெய்யெனப் பெய்யும் மழை, ப.160)

மகன் → மவன் (கருவாச்சி காவியம், ப.154)

## ஒலி இடம் பெயர்ந்த சொற்கள்

கிராமங்களில் வாழும் மக்கள் பேசும் பேச்சு வழக்குச் சொற்களில் ஏராளமான ஒலி இடம் பெயர்ந்த சொற்கள் காணப்படும். அந்தச் சொற்களையும் கவிஞர் அழகுற தன் படைப்புகளில் கையாண்டுள்ளார்.

(எ.கா) இதயம் - இருதயம் (கருவாச்சி காவியம், ப.318)

மதுரை - மருதை (மேலது, ப.167)

வகிசி - வசிகி (மேலது, ப.17)

## எதிரொலிச் சொற்கள்

கிராமப்புற மக்கள் பேச்சு வழக்கில் அன்றாடம் பயன்படுத்தும் எதிரொலிச் சொற்களையும் இடம் கண்டு கவிஞர் தம் படைப்புகளில் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார். இதனால் படைப்பின் நோக்கம் முழுமையடைவதோடு படைப்பாளியும் வெற்றி பெறுகிறான்.

(எ.கா) வார்த்த - கீர்த்த (கருவாச்சி காவியம், ப.19)

பொரந்து - கிரந்து (மேலது, ப.19)

தண்ணி - மண்ணி (மேலது, ப.14)

நண்டான் - சுண்டான் (மேலது, ப.16)

கப்பு - சிப்பு (மேலது, ப.20)

சர்ரு - புர்ரு (மேலது, ப.18)

எச்சா - மிச்சா (மேலது, ப.15)

அதிரி - புதிரி (மேலது, ப.26)

செத்து - கித்து (பெய்யெனப் பெய்யும் மழை, ப.177)

## ஒலி மாற்றங்கள்

கிராமப்புற மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்யும் இலக்கியங்களில் ஒலி மாற்றச் சொற்கள் அதிகமாகக் காணப்படும். அந்த ஒலிமாற்றத்திற்கு அடிப்படை அந்தந்த வட்டாரத்து மக்களின் பேச்சு வழக்கே அதற்கு முதன்மைக் காரணமாக அமைகிறது. அந்த ஒலி மாற்றங்கள் மூன்று வகைப்படும். அவை

1. "முதல் நிலையில் ஒலி மாற்றம்
2. இடை நிலையில் ஒலி மாற்றம்
3. கடை நிலையில் ஒலி மாற்றம்"[3]

## 1. முதல் நிலையில் ஒலி மாற்றம்

கிராமப்புற மக்கள் பேசும் பேச்சு வழக்கிலுள்ள சில சொற்களில் முதலெழுத்துக்கள் மட்டும் மாறி உச்சரிக்கப்படும். இங்ஙனம் முதல் நிலையில் மாற்றம் பெறும் சொற்களை முதல் நிலையில் மாற்றமடைந்த சொற்கள் என்பர். கவிஞர் பெய்யெனப் பெய்யும் மழை என்ற கவிதை நூலில் கிராமப்புற மக்களின் துன்பமான வாழ்வைப் பதிவு செய்யும் போது,

"காடு காஞ்சிருச்சு
கத்தாளை கருகிருச்சு

எலந்த முள்ளெல்லாம்
எலையோட உதிந்திருச்சு”[4]

என்கிறார். இப்பாடலில்

இலந்தை → எலந்த
இலை → எலை } என்றும் உச்சரிக்கப்படுகிறது

‘இ’ என்ற எழுத்து ‘எ’ என்று மாற்றி உச்சரிக்கப்படுகிறது. இதைப்போன்று ஏராளமான சொற்களைத் தன் படைப்பில் கையாளுகின்றார் கவிஞர்

குமரி கொமரி (கள்ளிக்காட்டு இதிகாசம், ப.119)

நிஜம் நெசம் (மேலது, ப.149)

நிலை நெலய (மேலது, ப.367)

முதலான சொற்களைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

## இடைநிலையில் ஒலி மாற்றம்

பேச்சு வழக்கில் பயன்படுத்தும் சொற்களிலுள்ள சில எழுத்துக்களின் இடையிலுள்ள சொற்கள் மாற்றமடைவது இடைநிலையில் ஒலிமாற்றம் அடையும் சொற்கள் என்பர். கிராமப்புற மக்களின் உடை உடுத்துதல் பற்றிக் குறிப்பிடும் கவிஞர்,

“சிறுக்கிமவ பாவாட
சீக்கிரமா அவுருதுன்னு
இறுக்கி முடிபோட்டு
எங்காத்தா கட்டிவிட”[5]

என்ற கவிதையில், இடைப்பகுதியில் உள்ள ‘அவுருதுன்னு’ என்ற சொல் ஒலிமாற்றமடைந்துள்ளது.

"அவிழ்கின்ற - அவுருதுன்னு

ஆற்றோரம் - ஆத்தோரம் (பெய்யெனப் பெய்யும் மழை, ப.160)

காப்பாற்று - காப்பாத்து (கள்ளிக்காட்டு இதிகாசம், ப.28)

சாணக்கியர் - சாணவாக்கியரு (மேலது, ப.20)

மறுமாற்றம் - மறுமாத்தம் (மேலது, ப.20)

போன்ற ஏராளமான சொற்களைத் தன் படைப்புகளில் பயன்படுத்தியுள்ளார்.

## கடைசி நிலையில் ஒலி மாற்றம்

பேச்சு வழக்கில் சில சொற்களிலுள்ள இறுதி மெய்யெழுத்து முயற்சிச் சுருக்கம் கருதி ஒலிக்காமலே இறுதியில் மறைந்து வருவதைக் கடைசி நிலையில் ஒலிமாற்றமடைந்த சொல் என்பர். வாழ்வில் தினசரி பயன்படுத்தும் பயன்பாட்டுச் சொற்களைக் குறிப்பிடும் இடத்தில் வரும்,

"ஆச நோய் வந்தமக
அரநிமிசம் தூங்கலையே"[6]

என்னும் கவிதையில் இறுதியில் உள்ள 'மக' என்ற சொல் ஒலிமாற்றமடைந்துள்ளது.

(எ.கா) மகள் - மக

தண்ணீர் - தண்ணி (கள்ளிக்காட்டு இதிகாசம், ப.90)

அலை - அல (மேலது, ப.370)

விலை - வெல (மேலது, ப.91)

ஒரு சொல் இன்னொரு சொல்லாக மாற்றம் பெற்றுள்ளதை நோக்கும் பொழுது அதில் ஒரு மாற்றமோ அல்லது பல மாற்றங்களோ ஏற்பட்டுள்ளதைக் காணலாம். இந்த வகையான மாற்றங்களை,

1. ஒரு விதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல்
2. இருவிதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல்
3. மூன்று விதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல்
4. நான்குவிதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல் என்றும் பகுத்துக் காணலாம்.

## 1. ஒரு விதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல்

கருவாச்சி காவியத்தில் வரும் ‘‘நெஞ்சுல சொமந்து கொண்டாந்த செம்பிலி’’[7] என்ற சொற்றொடரிலுள்ள ‘சொமந்து’ என்ற சொல் ‘சுமந்து’ என்ற சொல்லின் மாற்றுவடிவமாகக் காணப்படுகிறது. ‘ஒ, உ’வாகும் என்ற விதிப்படி ‘சுமந்து’ என்பது ‘சொமந்து’ என்று மாறிப்பயன்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதுபோன்ற ஒருவிதி மாற்றத்திற்கு உட்பட்ட ஏராளமான சொற்களைக் கவிஞர் வைரமுத்து தன் படைப்புகளில் பயன்படுத்தியுள்ளார்.

(எ.கா) காற்று → காத்து (கருவாச்சி காவியம், ப.318)
(ற்ற - த்த)

தெற்கே → தெக்க (மேலது, ப.318)
(ற்க - க்க)

தேங்காய் → தேங்கா (பாற்கடல், ப.48)
(ஈறு போதல்)

## இருவிதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல்

கருவாச்சி காவியத்தில் வரும் "அகத்திக் கொழ அந்தக் கொழ இந்தக் கொழன்னு"[8] என்ற சொற்றொடரிலுள்ள 'கொழ' என்ற சொல் 'குழை' என்ற சொல்லின் மாற்றம் பெற்ற சொல்லாகும். இச்சொல் இரண்டு வகை மாற்றம் பெற்று இடம் பெற்றுள்ளது.

உ→ஓ என்ற விதிப்படி 'குழை' என்பது 'கொழை' என்று மாற்றம் பெறுகிறது.

ஐ→எ என்ற விதிப்படி 'கொழை' என்பது 'கொழ' என்று மாற்றம் பெற்றுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும். இதுபோன்று இருவகை மாற்றத்துக்கு உட்பட்ட சொற்களை இருவிதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல் எனலாம். இதைப் போல் ஏராளமான இருவிதிமாற்றத்திற்கு உட்பட்ட சொல்லைக் கவிஞர் வைரமுத்து தன்னுடைய படைப்புகளில் கையாண்டுள்ளார்.

(எ.கா) உங்கள் → உங்க (ஈறுபோதல்)

உங்க → ஒங்க (உ-ஓ)

## மூன்றுவிதி மாற்றத்துக்கு உட்பட்ட சொல்

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் வரும் 'ஒரு அஞ்சு பவுன் சங்கிலி வேணும்'[9] என்ற சொற்றொடரிலுள்ள 'அஞ்சு' என்ற சொல் 'ஐந்து' என்பதன் மூன்று வகை மாற்றத்தின் பின் தோன்றிய சொல் ஆகும்.

(எ.கா) ஐந்து → அய்ந்து

அய்ந்து → அய்ஞ்சு

அய்ஞ்சு → அஞ்சு

## நான்கு விதிமாற்றத்துக்கு உட்பட்ட சொல்

கருவாச்சி காவியத்தில் வரும் ‘‘பொழச்சுக்கடி ஆத்தான்னு அனுப்பிவச்சா இன்னைக்கிப் புத்திமாறி வந்திருக்கு’’[10] என்ற சொற்றொடரிலுள்ள ‘பொழச்சுக்கோ’ என்ற சொல் ‘பிழைத்துக்கொள்’ என்ற சொல்லின் நான்கு வகை மாற்றத்திற்குப் பின் தோன்றிய சொல் ஆகும்.

(எ.கா) பிழைத்துக்கொள் - பிழைச்சுக்கோ (ஈறுபோதல்)

பிழைச்சுக்கோ - புழைத்துக்கோ (ச்ச் → த்த்)

புழைத்துக்கோ - பொழைத்துக்கோ (உ → ஒ)

பொழைத்துக்கோ - பொழச்சுக்கோ (ஐ → அ)

## வேற்றுமொழிச் சொற்களைப் பயன்படுத்துதல்

நாட்டுப்புற மக்கள் தங்களுடைய பேச்சு வழக்கில் வட்டாரமொழிச் சொற்களைப் பயன்படுத்துவது போல வேற்றுமொழிச் சொற்களையும் பயன்படுத்துவர். அப்படி அவர்கள் பயன்படுத்திய சொற்களைக் கவிஞர் வைரமுத்து அப்படியே தம் படைப்புகளில் பயன்படுத்தியுள்ளார். ஆங்கில மொழிச் சொற்கள் இலக்கியங்களில் கல்கியின் காலத்திலே இடம் பெறத் தொடங்கியது. காலம் செல்லச் செல்ல ஆங்கில மொழிச்சொற்கள் கவிதைகளில் அதிகமாக இடம்பெறத்தொடங்கின. இன்று முழுக்க முழுக்க ஓர் ஆங்கிலக் கவிதையோ என்று ஐயப்படும் அளவிற்கு ஆங்கில மொழிச் சொற்கள் தமிழ்க் கவிதைகளில் இடம் பெற்றுள்ளன.

இலக்கியங்கள் சமுதாயத்தை உள்ளபடி காட்டும் இயல்புடையன. அதனால் சமுதாயத்தின் முக்கிய அங்கமான மனிதர்களின் பேச்சும்

இலக்கியங்களில் அவ்வாறே இடம் பெறுவது தவிர்க்க இயலாதது ஆகிறது. இன்றோ தெருவோரங்களில், வீதிகளில் நடக்கும் எல்லா மனிதர்களுடைய பேச்சிலும் ஆங்கிலச் சொற்கள் என்று தெரியாமலேயே அவர்கள் அதைப் பயன்படுத்தி வருகின்றனர். இந்த நடை குறித்து,

‘‘ஆங்கிலம் இன்றையப் பேச்சு வழக்கில் பெரிதும் பயன்படுத்துவதைப் போன்று படைப்பிலக்கியங்களிலும் இடம் பெற்றுவிடுகின்றது. பல ஆங்கிலத் தொடர்களும் சொற்களும் இயல்பாகக் கையாளப்படுகின்றன’’[11] என்னும் கருத்து குறிக்கத்தக்கது. பேச்சு வழக்கிலே பிறமொழிச் சொற்களை மக்கள் அதிகமாகப் பயன்படுத்தப்படுவதால், இன்றைய படைப்பிலக்கியங்களில் பிறமொழிச் சொற்கள் இடம் பெறுவது தவிர்க்க இயலாமல் போயிற்று.

பெய்யெனப் பெய்யும் மழை என்ற கவிதை நூலில் ஆங்காங்கே ஆங்கில மொழிச் சொற்கள் இடம் பெறுவதைக் காணலாம்.

‘‘வக்கணையா ஒக்காந்து
மார்க்கெழுதும் வாத்தியாரு
சிக்கனமா இல்லாட்டிச்
செத்திருக்க மாட்டானே
பெயிலாகிப் போனா
பீடைவிட்டுப் போனதுன்னு’’[12]

என்றும்,

‘‘வெல்வெட் உடம்பில்
விரல் கோதுவார்’’[13]

என்றும், கள்ளிக்காட்டு இதிகாசம் என்ற நாவலில்,

‘எங்க ரெவின்யூ டிபார்ட்மெண்ட்டு ஒங்களுக்கெல்லாம்
எடம் பாத்து வச்சிருக்கு’’[14]

என்றும்,

''லாரி வார பாதையில சும்மா தார் டின்னையும்,
தகர டின்னையும் உருட்டிவிடுது ஒரு கூட்டம்''[15]

என்றும் கூறுகிறார். தண்ணீர் தேசம் என்ற நூலில்,

''ஆக்டொபஸ் அலைகள் என்னை அள்ளிக் கொண்டோடிவிட்டால்''[16]

என்பன போன்ற பிறமொழிச் சொற்களை தன் படைப்புகளில் பயன்படுத்தியுள்ளார் கவிஞர் வைரமுத்து. மேற்கூறிய சொற்கள் மட்டுமின்றி, டீ, சைக்கிள், போலீஸ், ஜீப், கலெக்டர், மேன், என்ஜினியர் போன்ற ஏராளமான ஆங்கிலச் சொற்களை மக்கள் பயன்படுத்துவதைத் தன் படைப்புகளில் கையாண்டுள்ளார். ஆசிரியர் கையாண்டுள்ள பிறமொழிச் சொற்கள் நாவலுக்கு அழகு சேர்க்கிறதே ஒழிய மக்களின் வழக்கு நடையினைச் சிதைக்கவில்லை. படைப்புகளுக்கு அழகு சேர்க்கவே இந்தச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இன்றைய சூழலில் கிராமங்களில் கூடப் பிறமொழிச் சொற் கலப்பு இன்றியமையாத ஒன்றாகிவிட்டது.

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் நிலத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

''அது அரசாங்க பாரஸ்ட்டுக்குப் பாத்தியப் பட்ட நெலம்''[17]

என்றே பிறமொழிச் சொற்களால் குறிப்பிடுகிறார் கவிஞர் வைரமுத்து.

## பேச்சு மொழிச் சொற்கள்

கிராமப்புற மக்கள் அதிகளவு கல்வியறிவில்லாதவர்கள். இதனால் அன்றாட வாழ்க்கையில் சில சொற்களை மக்கள் விரைவு கருதி ஓசையினை சுருக்கிப்பேச ஆரம்பித்தனர். பேச்சு மொழிச் சொற்கள், படிக்காத பாமரர்களுக்கும் எளிதில் புரிந்து கொள்ளும்படி இருக்கும். பேச்சு வழக்குச்

சொற்களைக் கொச்சைச் சொற்கள் என்று ஒதுக்கிவிட முடியாது என்கிறார் எம்.ஏ.பழநியப்பன்.

“பேச்சு வழக்கு மொழியைக் கொச்சை என்ற முடிவுக்குத் தாவி விட வேண்டாம். அதாவது பேச்சுக்கு ஒத்திசைக்கு இழைந்து இருக்கும் வாக்கிய அமைதி என்று எடுத்துக் கொள்ள வேண்டியது தான் முறை”[18] என்கிறார்.

பேச்சு வழக்குச் சொற்கள் கொண்ட மொழி நடையானது கதை நிகழும் இடங்களையும், கதாபாத்திரங்களின் செயலையும் மனிதர்களின் உள்ளங்களில் பிரதிபலிக்கச் செய்யும். கள்ளிக்காட்டு இதிகாசம் என்ற நாவலில், அரசாங்கம் ஆற்றில் அணைகட்ட முடிவு எடுக்கிறது. அணைகட்டப்படுவதால் என்னென்ன? நன்மை தீமைகள் மக்களுக்கு ஏற்படப் போகிறது என்பதை மக்கள் பேசும் பேச்சு வழக்கினை, சைக்கிள் தேவர் மூலமாக எடுத்துக் கூறுகிறார்.

“ஏம்ப்பா! பேய்பயகளாச் சேந்து பேசுறீகளேப்பா!

யப்பா செவத்த வீரா! காடுகர இருந்தாத்தான

வெளையும்? ஏலே! செம்பட்ட! மாடுகன்டு இருந்தாத்தானடா தண்ணி குடிக்கும்? ஏலே! பித்துக்காலு பெருமாளு! கெணறே முங்கிப் போச்சுன்னா ஊத்து எதுக்கு ஊத்து? பேசுறாய்ங்க பாரு பேச்சு...படிக்காத பட்டிக் காட்டுப் பயலுக”[19] என்று மக்கள் பேசும் வழக்குச் சொற்களை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர் வைரமுத்து.

பள்ளிக்கூடத் தேர்வு முடிவுகள் வரும் போதெல்லாம் தோல்வியைச் சந்தித்த மாணவ – மாணவியர்களில் சிலர் தங்களைத் தாங்களே மாய்த்துக்

கொள்வர். அப்படி தன் உயிரை மாய்த்துக் கொண்ட ஒரு இளைஞரின் குடும்பச் சூழலை, ‘‘பெய்யெனப் பெய்யும் மழை’’ என்ற படைப்பில்,

‘‘கூட்டிவச்ச மீங்கொழம்பு
கொதிச்சு அடங்குமின்ன
வேல முடிஞ்சிருச்சே
வெள்ளமுழி வந்திருச்சே
ஈயெறும்பு அண்டாம
எளங்காத்து தாக்காம
நோன்பிருந்து பெத்தமகன்
நொரதள்ளி முடிஞ்சானே’’[20]

என்று பதிவு செய்கிறார் கவிஞர். கள்ளிக்காட்டு இதிகாசம், கருவாச்சி காவியம் போன்ற நாவல் முழுவதும் பேச்சுவழக்கையே பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

ஒரு படைப்பு வெற்றிபெறப் பல்வேறு அடிப்படை இயல்புகள் உள்ளன. அவற்றுள் மிக முக்கியமான ஒன்று நடைச்சிறப்பு. அனைவரும் அறிந்திருக்கின்ற எளிமையான சொற்களால் இனிமையாகவும், எளிமையாகவும் எல்லோருக்கும் புரியும் வண்ணம் கருத்தினை நுட்பமாக உணர்த்துவதே நடையாகும். நடையை வைத்துதான் ஒரு படைப்பாளியை இனம் கண்டு கொள்ள முடியும். படைப்பாளியின் உள்ளத்திற்கும், நடைக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு.

ஆய்வு மேற்கொண்டுள்ள கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் அமையும் நடையினை,

1. வருணனை வழக்காற்றுநடை
2. கதைக்கூற்று வழக்காற்று நடை
3. உரையாடல் வழக்காற்று நடை
4. பழமொழிகள், விடுகதைகள் கலந்த நடை

5. உவமைகள் சொல்லும் நடை

6. உருவக நடை

7. குறியீட்டு நடை

8. அடுக்குச் மொழிச் சொல் நடை

9. ஒலிக் குறிப்புச் சொற்கள் கலந்த நடை

10. பேச்சு மொழிச் சொற்கள் கலந்த நடை

11. பிறமொழிச் சொற்கள் கலந்த நடை

12. விளக்க நடை

எனப் பகுக்கலாம்.

## வருணனை வழக்காற்று நடை

வருணனை என்பது ஒரு இடத்தையோ, ஒரு நிகழ்ச்சியையோ அல்லது ஒரு கதாபாத்திரத்தையோ அல்லது இயற்கையையோ சிறப்பித்துக் கூறும் கலை வருணனையாகும். ஒரு பொருளைப் பற்றி வருணிக்கும் போது, அந்தப் பொருளைப் பார்க்காதவருக்கும் அதன் உண்மையான இயல்பினைத் தெரிந்து கொள்ள இந்த வருணணைகள் பயன்படுகின்றன.

“புலன்களால் உணர்வனவற்றை அல்லது புலன்களின் வாயிலாக உணரும் புறக்காட்சிகளைச் சொற்களால் மொழிபெயர்த்துக் காட்டுவதே வருணனை ஆகும்”[21] புலன் உணர்வு மூலம் ஏற்படும் அனுபவங்களைப் பிறருக்கும் புரியும் வண்ணம் வருணித்துக் காட்டுவது வருணனைகள் ஆகும். ஒரு ஆசிரியரின் தனித்தன்மையை அழகுற வெளிப்படுத்தவல்லது அவரின் நடைச் சிறப்பாகும். கிராமப்புற மக்கள் ஒரு பொருளின் தன்மையை வருணிக்கும் போது அதனை

நம் கண்முன் அப்படியே கொண்டு வருவர். அந்த நடையினைக் கவிஞர் வைரமுத்துவும் தன் படைப்புகளில் கையாண்டுள்ளார். கள்ளிக் காட்டில் எரிந்து கொண்டிருக்கும் பிணம் திடீரென்று எழுகிறது. அப்படி எழும் சூழலை வருணிக்கும் பொழுது,

> "கறீச்..............கெக்கெக்கேன்னு எந்திரிச்சதய்யா எரிஞ்ச பொணம். எரிஞ்ச வைக்கலையும் எரியாத வைக்கலையும் ஒடம்புல சுத்தினபடிக்கு வறட்டியத் தட்டிவிட்டு நாலாபக்கமும் கங்கு சிதற, குத்துச் சண்டைக்காரன் சண்டைக்குத் தயாராகி ரெண்டு கையும் மடக்கி 'எவண்டா என்ன எரிக்கிறவன்னு' கேக்கிற மாதிரி பொணம் எந்திரிக்கவும், 'யாத்தே! என்று சுடுகாடு கிழியக் கத்தியலறினான் மொக்கராசு"[22]

என்ற வருணனையால் சுடுகாட்டில் எரியும் பிணம் எழுந்திரிக்கும் சூழலையும், அதனைக் கண்ட மொக்கராசுவின் அச்ச உணர்வையும் வருணித்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

## கதைக் கூற்று வழக்காற்று நடை

கதை கூறுவதும், கதை கேட்பதும் கிராம மக்களின் இயல்பாகும். இத்தகைய நடையைக் கவிஞர் தன் படைப்புகளில் கையாண்டுள்ளார். கதையை, அல்லது ஒரு நிகழ்ச்சியைத் தொடர்ச்சியாகக் கூறிச் செல்லும் முறையே கதைக் கூற்று எனப்படும். இந்த முறையில் ஆசிரியர் கதை கூறுவதாகவோ அல்லது கதாபாத்திரங்கள் கதை கூறுவதாகவோ அமையும். கள்ளிக்காட்டு மக்களின் இடத்தையும், மக்களின் நிலையினையும், அவர்களின் வாழ்க்கையையும் பற்றி ஆசிரியரே கதை கூறும் முறையில் அமைத்துள்ளார்.

“அது வேறு உலகம், பூமிப் பரப்பில் இன்னொரு கிரகம், மேகங்களால் நிராகரிக்கப்பட்டு, இயற்கையால் சபிக்கப்பட்டு கடக்கும் போது, தேவதைகள் கண்மூடிக் கொள்ளும் வறண்ட நிலம் ................................ கரும்பாறையிலும் - சரளையிலும் - சுக்கான் கல்லிலும் முள் மண்டிய நிலங்களிலும் தொலைந்துபோன வாழ்வை மீட்டெடுக்கும் போராட்டம் தான் அவர்களின் பொழப்பு”[23]

என்று கள்ளிக்காட்டு மக்களின் வாழ்க்கையை ஆசிரியர் கூற்றிலே அமைத்துள்ளார்.

**உரையாடல் வழக்காற்றுநடை**

உரையாடல் என்பது பேச்சு வழக்கினைக் குறிக்கும். கதாபாத்திரங்களின் பேச்சு உரையாடல் எனப்படும். படைப்பாசிரியரின் தனிப்பட்ட விவரிப்பால்தான் உரையாடல் சிறக்கும்; அதிகமான வாசகரையும் கவர முடியும். உரையாடல், புதினத்தில் தோன்றும் பல பாத்திரங்களினுடைய மனம், பண்பு, குறிக்கோள் உணர்ச்சிகள் முதலியவற்றை நமக்கு எடுத்துக் காட்டும் கண்ணாடி என்று அ.ச.ஞானசம்பந்தன் கூறுகிறார். கள்ளிக்காட்டு இதிகாசம் என்னும் நாவலில் பேய்த்தேவருக்கும், அவர் மகள் மின்னலுக்கும் இடையே,

“யம்மா மின்னலு! அப்பன் ஒண்ணு கேப்பேன் தப்பா நினைக்க மாட்டியே ‘கேளுப்பே”[24] என்று தொடங்கிய உரையாடல் பேச்சு வழக்கு

“கெணத்துல பாறை விழுந்து போச்சு. வேட்டு வைக்காம வெட்ட முடியாது போலிருக்கு’

தன் மடியில உக்காந்திருந்த பேத்தியத் தலயத் தடவிக்கிட்டே பேசுனாரு பேய்த்தேவர்

“அதுக்கு என்னிய என்ன பண்ணச் சொல்ற?

நீ ஒண்ணும் பண்ண வேணாம். ஒம் பிள்ள காதுலகெடக்குற கடுக்கானக் கழத்திக்குடுத்தீன்னா கெணத்துல தண்ணி உண்டாக்கிருவேன் தண்ணி வந்திட்டா ரெண்டுக்கு நாளா செஞ்சு போட்ருவேன்”[25] என்ற உரையாடல் வழி பேய்த்தேவரின் ஏழ்மையையும் தன் மகளிடம் இரவலுக்குத் தங்க நகையினை எப்படிக் கடன் கேட்பது என்று தயங்கும் மனப்பான்மையினையும் காணவியலுகிறது.

## பழமொழிகள் கலந்த நடை

கிராமப்புற மக்கள் உணர்வுகளைப் பாடல்களாகவோ, கதைகளாகவோ வெளிப்படுத்தும்பொழுது, அந்தந்த நேரத்தில் ஏற்படும் உணர்ச்சிகளுக்கும், மனநிலைக்கும் ஏற்ப அவை பலவடிவங்கள் பெறும். அதில் ஒருவகையே பழமொழிகள். பழமொழியைத் தொல்காப்பியர் யாப்பின் வகைகளில் ஒன்று என்கிறார்.

“நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப”[26]

என நுட்பம், சுருக்கம், ஒளியுடைமை, மென்மை ஆகிய தன்மைகளைக் கொண்டிருப்பதோடு, மக்கள் மனதில் ஆழமாகப் பதிந்து, குறிப்பிட்ட ஒன்றைச் செய்யத் தூண்டும் ஆற்றல் வாய்ந்தது என்பார் தொல்காப்பியர்.

“மக்களின் பேச்சிலே கலந்து பழகி வரும் செறிவுமிக்க அறிவு வாக்கியமே பழமொழி”[27] என ஆர்ச்சர் டெய்லர் குறிப்பிடுகிறார்.

“வாழ்க்கையை உற்று நோக்கி அதில் உணர்ந்த உண்மைகளின் சுருக்கமே பழமொழி”[28] என ஆக்ஸ்போர்டு அகராதி விளக்கம் தருகிறது.

மகிழ்ச்சி, சோர்வு, இழப்பு, ஏமாற்றம், நகையாடல், கிண்டல், கேலி போன்ற பல்வேறு நிலைகளிலும் மனிதன் தன் உணர்வுகளைப் புலப்படுத்த பழமொழியைப் பயன்படுத்துகிறான். கிராம மக்களின் அனுபவங்கள் பழமொழி வாயிலாக வெளிப்படுகின்றன.

நாட்டுப்புற மக்களின் நுண்மையான அறிவின் வெளிப்பாடே பழமொழி. பழமொழிகள் வாழ்வின் அனைத்துத் துறைகளையும் குறிப்பிடும் தன்மையை உடையன. பழமொழிகள் புலவர்களின் சொற்சேர்க்கையில்லை. அனுபவங்களின் அணிவகுப்பு. உழைப்பவன் முதல் உழைப்பின் பயனை அடைபவன் வரை அவரவர் தொழில்களில் ஈடுபடும்போது உருவான பழக்கவழக்கங்களே பழமொழியாக உருமாற்றம் பெற்றுள்ளது.

## பழமொழிகளை இலக்கியத்தில் கையாளுதல்

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் ஏராளமான பழமொழிகள் பயன்பட்டிருப்பதைக் காணலாம். பழமொழிக்கென்று சில தனிப் பண்புகள் உண்டு. சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் பழமொழிக்குள்ள தனிப்பண்பாகும். கிராமப்புற மக்களின் மனதில் ஆழப்பதிந்து கிடக்கும் பழமொழிகள். பொதுவாக மனித சமூகத்திற்கு நற்செயலைச் செய்யத் தூண்டும்; தனித்தன்மை வாய்ந்ததாகவே இருக்கும். கிராமப்புற மக்களின்

அனுபவ அறிவால் தோன்றிய பழமொழியில் எளிமையும், இனிமையும் இரண்டறக் கலந்திருக்கும். கிராமப்புற மக்களின் கருத்துக்களை எளிமையாகப் புரிந்து கொள்ளப் பழமொழிகள் பெரிதும் பயன்படுகின்றன. பழமொழிக்கு அடிப்படையாக இரண்டு சொற்கள் கண்டிப்பாக இருத்தல் வேண்டும் என்கிறார் மேலை நாட்டு அறிஞர் ஆலன்டாண்டிஸ். அவை

1. தலைப்பு (Topic)
2. முடிவுரை (Comment)

| | |
|---|---|
| தலைப்பு | முடிவுரை |
| தாய்க்குப்பின் | தாரம் |
| அழுதபிள்ளை | பால் குடிக்கும் |

பழமொழிகளை உலகிலுள்ள அனைத்துச் சமுதாய மக்களும் இன்றும் பயன்படுத்தி வருகின்றனர். பழமொழிகள் எக்காலத்திற்கும் பொருந்துவனவாய் காணப்படுகின்றன.

## 1. உழவு பற்றிய பழமொழி

உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்றார் வள்ளுவர். கிராமப்புற மக்கள் விவசாயத்தைப் பொதுவாக ஆடி மாதத்தில் தான் தொடங்குவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். ‘ஆடிப்பட்டம் தேடி விதை’ என்பதை இன்றுவரையில் நடைமுறையில் செயல்படுத்தி வருகின்றனர். கவிஞர் வைரமுத்துவும் கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில்

“தை ஒழவு அய்யாட்டுக் கெ(ை)டடா…..”[29]

என்று எடுத்துக் கூறுவதோடு, அதற்கான விளக்கத்தையும் தெளிவாகக் கொடுக்கிறார். ஆட்டுபுழுக்கையும், கோமியமும் சேர்ந்தா பொட்டக்காடு பொன்விளையுமிடா. அப்படி அஞ்சு ஆட்டுக் கெட வச்சா என்ன ஊட்டமோ அப்படி ஒரு ஊட்டமடா தைமாச உழவு என்று கூறுகிறார். கிராமப்புறங்களில் விவசாய நிலத்தை அறுவடை முடிந்ததும் சிறிது காலம் பயிர் செய்யாமல் தரிசாகப் போடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அந்த தரிசு நிலத்தைச் செழிப்படையச் செய்ய இன்றுவரை ''ஆட்டுக்கெட'' போடுவது வழக்கம். ஆடுகளின் புழுக்கைகளையும், கோமியமும் சிறந்த உரமாக இன்றுவரை கிராம மக்கள் பயன்படுத்தி வருகின்றனர். இவ்வாறு தரிசு நிலத்தில் ஐந்துமுறை ஆட்டுக்கெட போடுவதற்கு சமமான ஒன்று தைமாதத்தில் மேற்கொள்ளும் உழவு என்கிறார். கவிஞர் சிறுவனாக இருந்தபொழுது தன்குலத் தொழிலில் தான் பார்த்து பெற்ற அனுபவங்களை எளிமையான பழமொழி மூலம் அழகுற எடுத்துக் கூறுகிறார்.

## சொல் குறித்த பழமொழி

மனிதர்களாகப் பிறந்தவர்கள் சொற்களைக் கையாளும் பொழுது மிகவும் கவனமாகக் கையாள வேண்டும். இல்லை என்றால் மனித உறவுகள் சிதைந்து போய்விடும். மனதில் ஆறாத வடுவாக மாறிவிடும் என்பதை வள்ளுவர்,

''தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு''[30] என்று குறிப்பிட்டுள்ளார்.

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேய்த்தேவரின் மகன் சின்னுவின் செயல்களால் தான் வளர்த்த மாடுகளை இழக்கிறார். அன்றிரவே சின்னு

வாங்கிய கடன் தொகைக்கு ஈடாக எடுத்துக் கொண்ட மாடுகள் கயிறுகளை அறுத்துக் கொண்டு பேய்த்தேவர் வீட்டிற்கு வருகின்றன. திரும்பி வந்த மாடுகளை ஊர் அம்பலக் கல்லில் கட்டி வைக்கின்றார் பேய்த்தேவர். ஆனால் அங்கு நடந்த பஞ்சாயத்தில் ஒருவன் பேய்த்தேவர் மாடுகளைத் திருடியதாகக் கூறுகிறான். அப்பொழுது கள்ளிப்பட்டியிலுள்ள ஒரு மனிதனின் வாக்கு மூலமாக,

"நெல்லு சிந்தினா அள்ளலாம் - சொல்லு

சிந்தினா அள்ள முடியாது"[31] என்ற பழமொழியை எடுத்துக் கூறுகிறார் கவிஞர் வைரமுத்து. நாவினை அடக்கிப் பேசவில்லை என்றால் மிகப்பெரிய குற்றத்திற்கு ஆளாக நேரிடும் என்பதையே மேற்கூறிய பழமொழி எடுத்துக் காட்டுகிறது.

## நோய் குறித்த பழமொழி

மனிதர்களாகப் பிறந்தால் அவர்களுக்கு நோய் வருவது இயற்கை. அந்த நோய் வராமல் காத்துக் கொள்வது உடல் நலத்திற்கு நன்மையானதாகும். ஆயினும் வயது அதிகரித்துக் கொண்டே போகும் போது உடல் தளர்ந்து நோய் வருவதும், நோய் தாக்கியவர்களைச் சென்று பார்ப்பதும் கிராமியப் பண்பாடு. கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் நோயில் படுத்திருக்கும் வண்டிநாயக்கரைச் சென்று பார்த்து ஆறுதல் மொழி கூறும் பேய்த்தேவர்,

"சிக்கு இல்லாத குடும்பி உண்டா?

சீக்கு இல்லாத மனுசன் உண்டா?[32]

என்று பேசுவதில் நோய் குறித்த பழமொழி இடம் பெற்றுள்ளது.

## சாதி பற்றிய பழமொழி

தமிழ் மக்களைப் பீடித்திருக்கும் கொடிய நோய் சாதி. சங்கம் வைத்து தமிழை வளர்த்த தமிழகத்தில் இன்று சங்கம் வைத்து சாதியை வளர்க்கின்றனர். இந்த அவல நிலையைக் கள்ளிக்காட்டு இதிகாச நாவல் வாயிலாகக் கூறுகிறார். சாதி பற்றிக் கூற வந்த கவிஞர்,

"ஓட்டையா இருக்கிறதெல்லாம் நாதசுரம் ஆகாது...

ஒட்டடையா இருக்கிற தெல்லாம் துணியாகாது"[33]

என்கிறார். சாதி தமிழகத்தில் இருந்து விரட்டப்பட வேண்டும் என்ற ஆதங்கம் இதன்மூலம் வெளிப்படுகிறது.

## ஆடுமாடு பற்றிய பழமொழி

கிராமப்புறங்களில் ஆடுகளும் மாடுகளும் குடும்பத்தில் ஓர் அங்கமாகும். குழந்தைகளைப் போலவே ஆடுமாடுகளை வளர்ப்பர். அதற்கென்று தனியாகப் பெயர் சூட்டியும் மகிழ்வர். மனிதர்கள் பசியோடு இருந்தாலும் ஆடு, மாடுகளைப் பட்டினிபோட மாட்டார்கள். கிராமங்களில் பெண்ணிற்கும், மாட்டிற்கும் ஒரே நேரத்தில் பிரசவ வலியெடுத்து, அவ்வீட்டில் பெண் குழந்தை பிறந்தால் அது இழவு விழுந்த வீடாகிவிடும். ஆனால் பசு அப்படியில்லை. அது காளைக் கன்று ஈன்றாலும், கிடாரிக் (பெண்) கன்று ஈன்றாலும் வரவு தான். செலவு இல்லை. அதனால் தான் கிராமப்புற மக்கள் மாடுகளைத் தெய்வமாகக் கருதுவர். இதனையே கவிஞர் வைரமுத்து,

"ஒரு மாடு குடும்பங் காக்கும்
ஒன்பது மாடு குலங்காக்கும்"[34]

என்கிறார். கால்நடைகளை நம்பியே கிராமியப் பொருளாதாரம் அமைந்துள்ளதை இப்பழமொழி மூலம் அறிந்து கொள்ளலாம்.

## வட்டி குறித்த பழமொழி

கிராம மக்களுக்கு, பொருளாதார நிதி நெருக்கடிகள் வரும் போது, அதனைப் போக்குவதற்கு ஊரில் உள்ள செல்வந்தர்களிடமோ, அல்லது ஜமீன்தார்களிடமோ வட்டிக்குக் கடன் வாங்குவது இயல்பு. அந்த சாதாரண நிகழ்வுகளை, பாமரருக்கும் புரியும் வண்ணம் எளிமையாகத் தக்க இடத்தில் பயன்படுத்திப் புரிய வைத்துள்ளார். கிராமங்களில் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான பொருளாதார வசதிகள் இல்லாத போதும், திருவிழாக்கள், திருமணங்கள் போன்ற வைபவங்களின் போதும் வட்டிக்குக் கடன் வாங்குவதும் வாடிக்கையான ஒன்று. கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் வட்டி வாங்கி வாழ்க்கை நடத்தும் சூத்தப்பல்லனது பேச்சின் மூலமாக,

''துட்டு வாங்கித் தொழில் பண்றவன் அவத்தன்
துட்டையே தொழிலாப் பண்றவன் தாண்டா சமத்தன்''[35]

என்று வட்டித் தொழிலின் மூலதனமே பணம் தான் என்பதைத் தெளிவாக உணர்த்துகிறார் ஆசிரியர்.

## பிணம் பற்றிய பழமொழி

கிராமப்புறங்களில் இறந்து போனவர்களைப் 'பிணம்' என்றும் 'சவம்' என்றும் அழைப்பது வழக்கம். அந்தப் பிணம் பற்றிய பழமொழியையும் தமது படைப்பினில் எடுத்துக் காட்டியுள்ளார் கவிஞர் வைரமுத்து. பேய்த்தேவரின் மனைவி அழகம்மாள் இறந்து விடுகின்றாள். அவளின் நினைவுகளில் மூழ்கிப் போன பேய்த்தேவர், தன் மனைவியின் இயல்பான செயலினைக் எடுத்துக்

காட்டுகிறார். மீன் வாங்கி வரும்போது, அந்த மீன் உயிருடன் இருந்தால் எடுத்துப் பார்ப்பாள். உயிர் இல்லாத மீன்களை,

''செத்த கழுதைக்குச் சிங்காரம் எதுக்குன்னு''[36]

தூக்கிப் போட்டுவிடுவாள் என்கிறார். இதிலிருந்து இறந்து போனபின் வாழ்க்கையில் சிறப்புகள் எதுவுமில்லை என்கிறார் கவிஞர் வைரமுத்து.

## மரம் குறித்த பழமொழி

கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில் பேய்த் தேவரின் வீட்டுத் தோட்டத்திலுள்ள தென்னம்பிள்ளை முறையாக வளராமல் உள்ளது. அந்த மரம் ஏன் வளர வில்லை என்பதைப் பரிசோதனை செய்யும் இடத்தில்,

''பனமரம் வச்சவன் பாத்துக்கிட்டே சாவானாம்
தென்னமரம் வச்சவன் தின்னுட்டுச் சாவானாம்''[37]

என்று பேய்த் தேவர் வாயிலாக கவிஞர் கூறுகிறார். பனைமரம் வைத்தால் அதன் பயன் ஒருவனுக்குக் கிடைப்பதற்குள் அவன் இறந்து போய்விடுவான் என்பதைத் தான் 'பனமரம் வச்சவன் பார்த்துக்கிட்டே சாவானாம்' என்கிறார். ஆனால் தென்னை மரம் வைத்தால் அதன் பலன்கள் ஒருவனது ஆயுள் முடிவதற்குள் கிடைத்துவிடும் என்பதைத்தான் 'தென்னமரம் வச்சவன் தின்னுக்கிட்டுச் சாவானாம்' என்று கூறுகிறார் கவிஞர்.

## சின்னவீடு குறித்த பழமொழி

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் வரும் வண்டி நாயக்கர் கதாபாத்திரத்திற்கு ஒரு சின்ன வீடு உண்டு. அதைப் பெருமையுடன் பேசிக்

கொண்டு இருப்பார் வண்டி நாயக்கர். அவரது பேச்சையும் செயலையும் பிடிக்காத ஊர் மக்கள்,

‘‘மழைக்கு ஒதுங்கப் போய்க் கிணற்றில் விழுந்த கதை’’[38]

என வண்டி நாயக்கரின் நடத்தை கெட்ட செயலை மேற்கூறிய பழமொழி வாயிலாகக் கூறுவதைப் பதிவு செய்துள்ளார் கவிஞர்.

## புதிர் பொருந்திய பழமொழிகள்

இலக்கணத்தில் உள்ளுறை என்று கூறப்படுவதைப் பேச்சு வழக்கில் ‘புதிர் என்று கூறுவதுண்டு. ஒரு கருத்தைப் பிறரிடம் பேசும் போது, புரிவதைப் போலவும், புரியாதது போலவும் பேசப்படுவதையே புதிர் என்கிறோம். கவிஞர் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் புதிர் பொருந்திய பழமொழிகள் சிலவற்றைப் பேய்த்தேவர் கதாபாத்திரம் மூலம் எடுத்தாள்கிறார். வயல்காட்டில் ஏர் உழுது கொண்டிருக்கும் மொக்கராசுவிடம் பேய்த்தேவர்,

‘‘தை ஒழவு அய்யாட்டுக் கெ(ை)டடா’’[39]

என்றும், மொக்கராசு கஞ்சிக்குத் தொட்டுக் கொள்ளும் துவையலை, தூக்குச் சட்டி மூடியின் உள்புறத்தில் ஒட்டி எடுத்து வைத்துக் கொண்டு வருகிறான். உழுது முடித்த பேய்த்தேவர் தூக்குச் சட்டியைத் திறந்து பார்க்கும் போது கஞ்சியுடன் கலந்து துவையல் காணாமல் போய்விட்டது. அப்பொழுது பேய்த் தேவர் மொக்கராசுவிடம்,

‘‘உள்ளதும் போச்சுடா நொள்ளக் கண்ணா’’[40]

என்று கூறுகிறார். மிகப் பழமையான காலம் தொட்டே தமிழக மக்களின் பழக்கத்தில் இருந்து வருகின்ற பழமொழிகளை நிகழ்ச்சிகளுக்கேற்ப அழகுற அமைத்திருக்கும் ஆசிரியரின் நடை சிறப்பாகச் சுட்டத்தக்கது.

## விடுகதைகள்

‘‘வாழ்க்கையின் உயிர்ப்பண்புகளாகிய உணர்வுப்பண்புகள் இலக்கியங்களின் கருவாக அமைகின்றபொழுது, அவை படைப்போனின் உணர்ச்சிக்குத் தக்க உருவம் பெற்றுச் சாவா, மூவாப் பேற்றினைப் பெறுவதுண்டு’’[41] இத்தகைய பழமை வாய்ந்தவை விடுகதைகளாகும். மனித சமூகத்தின் அறிவின் ஆழத்தினை ஊடுருவிக் காட்டும் சிறப்புமிக்கவை விடுகதைகளாகும்.

‘‘விடுகதைகள் ஒரு நாட்டிற்கோ, ஒரு மொழிக்கோ, சிறப்பானவை அல்ல. இனிய பொழுதுபோக்கிற்காகவும், சிந்தனையைத் தூண்டி மகிழ்ச்சியளிக்கவும், அவை எங்கும் பயன்படுகின்றன’’.[42] மனித இனத்தின் பழமையான இலக்கிய வகைகளுள் விடுகதையும் ஒன்று.

‘‘விடுகதைகள் உரையாடல் நிலையில் அமைந்திருக்கின்றன. இவ்வுரையாடல்கள் சங்கேதமாகக் குறிப்புப் பொருட்களுடன் சிந்தனையைத் தூண்டுவனவாக அமைந்திருக்கும். மிகவும் சிக்கலான செய்திகளையுடைய இந்தச் சங்கேத உரையாடல்கள் சிந்திக்கச் சிந்திக்க உற்சாகத்தையும் விடை கண்டுபிடித்தவுடன் மகிழ்ச்சியையும் உண்டாக்கும் திறன் கொண்டவை’’.[43]

இந்தியாவில் விடுகதைகள் வேதகாலம் தொடங்கி இன்றுவரை இருந்து வருகின்றன. ‘‘விடுகதைகள் என்ற சொல் மகாபாரத்தில் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது’’.[44]

“விடுகதை என்னும் சொல்லுக்குப் புதிர்மைப் பண்புடையது என்றும், விடுவிக்கப்பட வேண்டிய பொருள் கதையாக அமைந்திருக்கும் எனவும் வரையறை செய்யப்படுகிறது”.[45]

தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் இது “பிசி” என்று குறிக்கப்பட்டுள்ளது.

“நொடியோடு புணர்ந்த பிசியினான”[46] என்பது நூற்பா.

தொல்காப்பியர் ‘பிசி’க்கான இலக்கணத்தைக் கூறும்பொழுது,

“ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசி வகை நிலையே”[47]

என உவமையாக வருவனபற்றிக் கூறிப் பொருளை மறைமுகமாகக் காட்டுவதும், பொருளைத் தெளிவுபடக் காட்டுவதும் விடுகதையாகும் என்கிறார்.

“மலையிடையிட்ட நாட்டரும் அல்லர்
மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்”[47]

என்ற சங்க இலக்கிய குறுந்தொகைப் பாட்டொன்றில் முழுமையான விடுகதைக் கூறுகள் அமைந்துள்ளதைக் காண முடிகிறது. விடுகதைகள், வட்டார வழக்குப் பேச்சுமொழிகளில் பழமொழிகளைப் போன்று அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றன. வைரமுத்து அவர்கள் தன்னுடைய கள்ளிக்காட்டு இதிகாசத்தில் தேவை கருதி பல இடங்களில் விடுகதைகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## மரம் பற்றிய விடுகதை

கிராமங்களில் வாழும் மக்களுக்குரிய பொழுதுபோக்கு அம்சங்களில் ஒன்று விடுகதைகள் போடுவது. வேலை செய்து கொண்டிருக்கும் போதே வேலைகளின் பணிப்பளு தெரியாமல் இருக்க ஒருவரிடம் மற்றொருவர் விடுகதைகள் கேட்டுப் பதிலைப் பெறுவது உண்டு. இந்த விளையாட்டில் தோல்வியுற்றவர் வெற்றி பெற்றவர்களுக்கு ஏதாவது ஒரு பரிசில் பொருள் கொடுக்க வேண்டும். இந்த வழக்கம் இன்றும் கிராமங்களில் நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற நிகழ்ச்சியாகவே இருக்கிறது. இந்த நிகழ்வுகளைத் தன் இளமைப் பருவத்தில் கண்டு, கேட்டு அனுபவித்த கவிஞர் தன் படைப்புகளில் அப்படியே எடுத்தாண்டுள்ளார். கருவாச்சி காவியத்தில் அன்னஞ்சி கிராமத்தில் காளையன் கிழவனுக்கு ஒப்பாரிப் பாடல் பாட செல்லும் போது வழியில்,

> ‘‘கத்தி போல எலையிருக்கும்
> கவரிமான் பூப்பூக்கும்
> திங்கப் பழம் பழுக்கும்
> திங்காத காய் காய்க்கும்
> அது என்னா?’’[49]

என்று கேள்வியைக் கேட்டுப் பதில் தெரியாதவரிடம் ‘‘வேப்பமரம்’’ என்று சொல்லி விடுகதைக்கான விடையும் சொல்லப்படுகிறது.

## தாவரம் பற்றிய விடுகதை

கள்ளிக்காட்டு இதிகாச நாவலில் வயல் காட்டில் நன்றாக விளைந்திருக்கும் பயிர்களைப் பார்த்த பேய்த் தேவர்,

> ‘‘அத்துவானக் காட்டுக் கிறுக்கி
> தானாப் பேசித் தானாச் சிரிப்பா
> அவ யாரு?’’[50]

என்று பேய்த்தேவர் இவ்விடுகதையை கள்ளிப்பட்டியின் தலைநகரமான நாச்சியார்புரத்திற்கு வண்டிநாயக்கரைப் பார்க்க மொச்சைக் காட்டினைக் கடந்து செல்லும் போது கூறுகிறார். அடர்ந்த மொச்சைக் காட்டில் நாற்றுகள் வாதம் செய்து கொண்டிருந்தன. இதைக் கண்ட பேய்த் தேவருக்கு விடுகதை ஞாபகம் வந்ததாகக் கூறி தனக்குத் தானே சிரித்துக் கொண்டார். இவ்விடுகதைக்கு விடை மொச்சைக்காட்டு நாற்றுகள்.

## சொல் - விடுகதை

கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில்,

"ஒலகத்துல இளமையான பாட்டி யாரு?"[51]

இவ்விடுகதையைப் பேய்த்தேவரிடம் வண்டி நாயக்கர் கேட்கிறார். இருவரும் வீதி வழியே நாயக்கரின் வீட்டிற்குச் செல்லும் போது வண்டி நாயக்கரே இவ்விடுகதையைப் பேய்த்தேவரிடம் கேட்கிறார். இதற்கு விடை "வப்பாட்டி" என்று பேய்த்தேவருக்குப் பதில் தெரியாததால் தானே விடையைக் கூறுகிறார். இதன் மூலம் வண்டி நாயக்கருக்கு 'வப்பாட்டி' உண்டு என்பதை அறிந்து கொள்ளலாம்.

## கடவுள் பற்றிய விடுகதை

கருவாச்சி காவியத்தில் மாடுமேய்க்கும் கொண்ணவாயனுக்கும், சாணி பொறுக்கும் அய்யக்காவுக்கும் காதல். காதல் விளையாட்டில் விடுகதையும் வந்துவிட்டது.

"பொட்டு வைக்காத சாமி ஒரு சாமி
பொச்சுக் கழுவாத சாமி ஒரு சாமி

ஒட்டுத்துணிகட்டாத சாமி ஒரு சாமி
மொத்தம் மூணுசாமி என்ன சாமி?"[52]

என்று அய்யக்கா கேட்ட விடுகதைக்கு விடை தெரியாமல் கொண்ணவாயன் திகைத்த போது,

"வருண பகவான்னு கும்புடுறமா இல்லையா தண்ணிய…….., அதுல பொட்டு வச்சா நிக்குமா? அதான் பொட்டு வைக்காத சாமி; கோமாதான்னு கும்புடறமா இல்லையா, பசுவ.... அது சாணி போட்டாக் கால் கழுவுதா? அதான் பொச்சுக் கழுவாத சாமி, அக்கினி பகவான்னு கும்புடறமா இல்லையா தீய... அது துணிகட்டுமா? அதான் ஒட்டுத் துணி கட்டாத சாமி..."[53]

என்று அவளே பதில் கூறுகிறாள். கதையின் ஓட்டத்திற்கு விடுகதையினையும் பயன்படுத்திக் கதையை சிறப்படையச் செய்கிறார் கவிஞர்.

## உவமைகள் சொல்லும் நடை

இலக்கியம் படைப்பவர்கள் தான் படைத்த இலக்கியத்தின் முழுமையான கருத்து எல்லாத் தரப்பு வாசகனையும் சென்று சேர வேண்டும் என விரும்புவர். தான் கூற வந்த கருத்தினை நேரடியாகக் கூறுவதை விட உவமைகள் மூலம் கூறும்போது, அது படிப்பவர்களின் மனதில் நன்கு பதியும் என உணர்ந்து ஏராளமான உவமைகளைப் பயன்படுத்துவதுண்டு. உவமைகள் குறித்து இரா. சீனிவாசனின் கருத்து இங்கு குறிப்பிடத் தக்கது.

"தொல்காப்பியர் உவமம், உவமை ஆகிய இரண்டு சொற்களைக் கையாண்டுள்ளார். உவமம் என்பது கவிஞரின் அனுபவப் பொருளாகும். அவன்

ஏற்கனவே கண்டு வைத்த பொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருத்தி வைத்து அப்பொருளின் உயர்வு தாழ்வுகளைக் கலந்து அறிவிக்கிறான் எனக் கூறலாம்''[54] என்ற கருத்தின் மூலம் உவமையின் சிறப்பையும், முக்கியத்துவத்தையும் அறிய முடிகிறது. கவிஞர் வைரமுத்து அவர்களும் தன் படைப்புகளில் ஏராளமான உவமைகளைக் கையாண்டுள்ளார். கள்ளிக் காட்டு இதிகாசம் நாவலில் வரும் கிராமத்து மக்கள், தினசரி பயன்படுத்தும் சொல்லாட்சிகளை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார் கவிஞர்.

வண்டி நாயக்கரின் குரலைப் பற்றிப் பதிவு செய்யுமிடத்தில்

''உரலில் உலக்கை போட்டது மாதிரி தடிச்சகுரல்''[55]

என்றும், அவரின் சிரிப்பைப் பதிவு செய்யுமிடத்தில்,

''தகரடப்பாவில் கூழாங்கல் போட்டுக் குலுக்கியது போல் குலுங்கிக் குலுங்கிச் சிரிப்பார்''[56] என்ற உவமை மூலம் பாமர மக்கள் பயன்படுத்தும் பொருள்களையே குரலுக்கும் சிரிப்புக்கும் பதிவு செய்துள்ளார்.

பேய்த்தேவரின் மகள் செல்லத்தாயின் இரண்டாம் திருமணத்தின் போது, பேய்த்தேவர் உடுத்தியிருந்த ஆடையை

''உழவுக் காட்டு உழவனைப் போல முழுவேட்டியில்
முக்கால் கோவணம் கட்டிக்கொண்டு''[57]

என்ற உவமை ஏழை உழவனின் வறுமையையும் கிராமத்தில் விவசாயம் மூலம் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு உழவனை நம் கண்முன்னே கொண்டு வந்து நிலை நிறுத்துகிறது.

திருத்தி எழுதிய தீர்ப்புகள் என்ற நூலில் காதல் நிறைவேறாமல் போய்விடுமோ என்ற அச்சத்தில் அழும் காதலிக்கு ஆறுதல் கூறும் கவிதையொன்றில்,

"இந்திய தேசப்படத்தில் தொங்கும்
இலங்கையைப் போல் ....
தேங்கும் உன் கண்ணீர்த் துளி
தெரியுதடி"[58]

என்று இலங்கையின் வரைபடம் கண்ணீர்த்துளிக்கு உவமையாகின்றது. இந்த உவமையின் மூலம் எடுத்துரைக்கும் செய்திக்கு அழகும், அழுத்தமும் சேர்க்கின்றது.

பருவமடைந்த கன்னிப்பெண் ஒருத்தி தனக்குக் குறிப்பிட்ட வயது கடந்தும் திருமணமாகாமல் முதிர் கன்னியாகவே இருக்கிறாள். அந்த ஏக்கம் மிகுதியால் புலம்பும் கவிதையொன்றில்,

"பருத்திச் சொள போல
பாவி மக நான் சிரிக்க
வருஷம் எட்டாச்சு
வந்ததெல்லாம் நோயாச்சு"[59]

என எழுதிய கவிஞர் பருத்திச் சொளையுடன் சிரிப்பை ஒப்புமைப் படுத்துகிறார். முன்பெல்லாம் சிரித்து மகிழ்ந்தவள் மனதிற்குள் சோக இருள் குடியேறியமையால் சிரித்துப் பல ஆண்டுகள் ஆகிறது என்ற பொருளில் அழகும், அழுத்தமும் நன்கு புலப்படுகின்றது

"தெருவில் காகிதங்கள்
கசங்கிக் கிடப்பதைப் போல
இங்கே மனிதர்களும்
கசங்கிக்கிடக்கிறார்கள்"[60]

என்ற கவிதையில் கிராமப்புற மக்கள் பட்டினியால் துன்பப்பட்டுக் கொண்டிருப்பதை தெருக்களில் வீசி எறியும் காகிதம் என்ற உவமையால் விளக்குகிறார்.

**உருவக நடை**

இலக்கியத்தின் தன்மை அதிகரிக்க எல்லாக் கவிஞர்களும் உருவகங்களைப் பயன்படுத்துவது இயற்கை. இதன் மூலம் படைப்பின் ஆழம் மிகுதியாகிறது. படிப்பவர்களின் உள்ளம் பரவசம் அடையும், உருவகத்தின் மூலம், தமது படைப்புகளை பல்வேறு பட்ட சிந்தனைச் செல்வாக்குடன் ஏராளமான கருத்துக்களை உலகிற்குப் பிரதிபலிக்கச் செய்கின்றார் கவிஞர்,

"ஆயிரம் அட்சரங்கள் கற்று
ஆவதென்ன?
வாழ்க்கைப் புத்தகத்தை
வாசிக்க முடியவில்லையே"[61]

வாழ்க்கையைப் புத்தகமாகக் கூறுவது பழங்காலம் முதல் இன்று வரை வழக்கத்தில் உள்ளது. அதனை இடங்கண்டு பொருத்தமுறக் கூறுகின்றார். இதில் வாழ்க்கையைப் புத்தகத்துடன் உருவகப்படுத்துகிறார்.

கவிஞர், திருத்தி எழுதிய தீர்ப்பு என்ற கவிதை நூலில்,

"உன்
இதழ் கிண்ணங்களில்
நீ நிரப்பி வைத்திருப்பதோ
வெறும் மௌனம்"[62]

என்கிறார். இதழ்களைக் கிண்ணமாக உருவகப்படுத்துவதன் மூலம் அதன் பொருள் பொருத்தமுற அமைகிறது.

## குறியீட்டு நடை

குறியீடு என்பது ஒன்றைப் பிறிதொன்றால் குறிப்பிட்டுப் படைப்பதாகும். இலக்கியங்களை அழகுபடுத்தும் முறைகளில் ஒன்று குறியீடாகும். சிவப்பு முக்கோணம் குடும்பக் கட்டுப்பாட்டினைக் குறிக்கிறது. சிலுவைக்குறி கிறித்துவத்தையும், பிறைநிலா இசுலாத்தையும் சுட்டுகின்றன. அரிவாள் சுத்தி அடையாளம் கம்யூனியசத்தை உணர்த்துகிறது. எனவே ஏதாவது ஒரு பொருள் அல்லது கருத்துக்கு அடையாளமாக நிற்பது குறியீடு எனப்படுகிறது.

திருமண வயது நெருங்கியும் திருமணமாகாமல் இருக்கும் பெண்ணொருத்திக்கு தடைக்கல்லாக இருப்பது செவ்வாய் தோஷம். அந்த தோஷத்தையே குறியீடாக்கிக் கூறுகிறார் கவிஞர்,

"இளமையின் கிளைகளை
ஜாதகம் தின்றது
இளமையின் தளிர்களை
செவ்வாய் தோஷம் தின்று முடித்தது"[63]

எனப் பாடும் போது செவ்வாய் தோஷம் குறியீடாகப் பயன்படுகிறது.

இதைப் போல் குறிப்பிட்ட வயதில் திருமணம் ஆகாமல் வயது பல கடந்து நிற்கும் முதிர்கன்னியைக் கற்பு மணம் மாறாக் கருவாடு எனக் கூறுவது மிகச் சிறந்த குறியீடாகும்.

"தூண்டிலில் சிக்கவில்லை
ஆனால்
இது
கற்புள்ள கருவாடு"[64]

என்ற கவிதையில் முதிர் கன்னி நிலையைக் குறியீடாக்கியுள்ளார் கவிஞர்.

## அடுக்கு மொழிச் சொல் நடை

ஒரு சொல் இரண்டு முறை வருமானால் அதனை அடுக்கு மொழி என்பர். இத்தகைய சொற்கள் பொருளின் செயல்பாட்டையும், கருத்துக்களின் சிறப்பினையும் விளக்கும்.

கிராமப்புற மக்களில் பெரும்பாலானோர் சொன்ன சொல்லையே பலமுறை திரும்பத் திரும்பக் கூறுவர். இந்தப் பண்புகள் பெரும்பாலும் நாட்டுப்புறப் பாடல்களில் வரும். இந்தப் பண்பினையே கவிஞர் வைரமுத்து அவர்களும் தன்னுடைய படைப்புகளில் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார். இதன் மூலம் தான் சொல்ல வந்த கருத்தினை அழுத்தம் திருத்தமாகப் பதிவு செய்ய முடியும்.

‘பாவி மக்கா! பாவி மக்கா
பள்ளி கூடப் பிள்ளைகளா’’[65]

என்பதில் அமையும் அடுக்குச் சொற்கள் மக்களின் பேச்சில் இயல்பாகவே அமைந்து விடக் கூடியவை என்பதை அறிய முடிகிறது. ஒரு செய்தியை அல்லது கருத்தினை அழுத்தமாகப் பதிவு செய்யவும், அழகிற்கு வலுச் சேர்க்கவும் படைப்புகளில் அடுக்குச் சொற்களைக் கையாளுவதுண்டு. கவிஞர் வைரமுத்துவும் தன்னுடைய படைப்புகளில் பல இடங்களில் இச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

‘‘மண்பானைகளும் மண்பானைகளும்
மல்லுக்கு நிற்பதுவோ - இங்கே’’[66]

என்ற பகுதியைச் சான்றாகக் குறிப்பிடலாம். பூக்களில் உள்ள தேனைப் பருகுவதற்காக தேனீக்கள் பூக்களை மொய்ப்பது போல, மனிதனைப் பாதித்த நினைவுகள் திரும்பத் திரும்ப வருவதனைப் பதிவு செய்கிறார் கவிஞர்.

‘‘ஆத்தா அடி ஆத்தா! என்

அடிமனசு கருகுதல்லொ!”
என்றும்,
‘வெட்கப்பட்டு
வெட்கப்பட்டு
அந்த
சின்ன வானவில்
சிகப்பாகிவிட்டதாம்!”[67]

என்று கிராமப்புற மக்கள் திரும்பத் திரும்பப் பயன்படுத்தும் சொல்லாடல்களை எடுத்துக் கூறுகிறார்.

## ஒலிக் குறிப்புச் சொற்கள் கலந்த நடை

கவிஞர் ஒரு நிகழ்வை அல்லது சம்பவத்தினை சாதாரணமாகச் சொல்வதைவிட, அதனின்று தோன்றும் ஒலிகளுடன் இரண்டறக் கலந்து சொல்லும்போது, படிப்பவர்களுக்கு இன்பம் பயப்பதுடன் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் வழிவகுக்கும். கவிஞர் வைரமுத்து தன்னுடைய படைப்புகளில் கிராமப்புற மக்கள் பயன்படுத்தும் ஒலிக்குறிப்புச் சொற்களை அப்படியே பயன்படுத்துவதன் மூலம் கிராமப்புற மக்களின் பேச்சுச் சாயலை, அவர்களின் உணர்வுகளோடு அப்படியே புரிந்து கொள்ள முடிகிறது.

கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் ஏராளமான ஒலிக்குறிப்புச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. ஒலிக்குறிப்புச் சொற்கள் இடம்பெறுவதால் படைப்பின் இயல்புத் தன்மை அதிகரிக்கிறது. சாதாரணமாகச் சொல்வதைக் காட்டிலும், ஒலிக்குறிப்புச் சொற்களைப் பயன்படுத்திச் சொல்வதால், படைப்பவனின் எண்ணங்களையும், அனுபவங்களையும், படைப்பின் முழுத்தன்மையினையும் படிப்பவர்கள் உணர்ந்து கொள்ளுதல் எளிமையாகும். அதோடு சொல்லப்படும் செய்திகளுக்குச் சுவையும் கூடுகின்றது. அவ்வகையில்

கவிஞர்தான் இளமைப் பருவத்தில் வாழ்ந்த ஊரில் மக்கள் பயன்படுத்தும் ஒலிக்குறிப்புச் சொற்களைத் தன் படைப்புகளில் அப்படியே பயன்படுத்துகிறார்.

“ஒலிக் குறிப்புச் சொற்களைப் பயன்படுத்துவதும் ஒரு நடையியல் உத்தியாகும். பொதுவாக இவை படிக்கின்றவர்களை நிகழ்ச்சி நடந்த இடத்திற்கே அழைத்துச் செல்கின்றன. சூழலோடு ஒன்ற வைக்கின்றன”[68] என்கிறார் ஜெ.நீதிவாணன்.

“கீச்சு கீச் என்றது - என்னைக்
கிட்ட வா வென்றது”[69]

என்கிறார்

கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில் மொக்கராசுவின் வேலையைப் பற்றிக் கூறும் பொழுது,

“கொட்டத்தில் மாடுகட்டி, வெட்டுக்கட்டையில் சோளத்தட்டை நறுக்கி, காடி நிரப்பி, பஞ்சாரம் சேராமல் ஓட்டுக்கூரை இருட்டில் ஒதுங்கிப் போன சேவலை,

‘வா வா வா வக் .... வக் வக் என்று கோழி ஒலி செய்து
அதை இறக்கி இனஞ் சேர்த்து....”[70]

என்று சொல்வதில் சேவல் ஒலியெழுப்பும் சப்தத்தைப் போலவே ஒலிக்குறிப்புச் சொற்களைப் பயன்படுத்துகிறார்.

சின்னு ஆடுகளைத் திருடும் போது,

‘ம்மே!....ம்மே.....மம்மமே! ஆடுகளின் சங்கீதம்
ஆரம்பித்து விட்டது”[71]

என்று குறிப்பிடும் கவிஞர், வெள்ளையன் முடி வெட்டுவதை

‘‘முடிவெட்டுறபோது அதுபோடுகிற ‘‘கிறீச் கிறீச்’’ சத்தம்தான் அவருக்குச் சங்கீதம். அந்தக் கிறீச்! கிறீச் வெள்ளையன் காதில் மட்டும் சசசச ரிரிரிரி மமமா

என்று சுரஞ் சொல்லும்’’[72]

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## விளக்க நடை

ஒரு பொருளைப் பற்றிப் படிக்கும் வாசகனின் மனதில் நன்றாகப் பதியும் பொருட்டு விரிவாகவும், விளக்கமாகவும் ஒன்றை விளக்கிக் காட்டுவது போல் அமைவது விளக்க நடை என்பர். விளக்கநடை என்பது ஒரு பொருளைப் பற்றி மேலும் மேலும் விளக்கிச் சொல்லுவதாகும்.

‘ஒன்றை விளக்கிக் காட்டுவது போல் எழுதப்படும்
அனைத்துமே விளக்க உரைநடைதான்’’[73]

என்கிறார் மா. இராமலிங்கம். கள்ளிக்காட்டு இதிகாசம் நாவலில் விளக்க நடையைப் பல்வேறு இடங்களில் கையாண்டுள்ளார் ஆசிரியர்.

கிராமங்களில் கஞ்சிக்குத் தொட்டுக் கொள்வதற்கு ‘துவையல்’ என்ற தொடுகறியைச் செய்வதுண்டு. அந்த துவையலைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது

‘‘கானப் பயிறு மணக்க வறுத்து – அம்மியில வச்சு வலப்பக்கம் தட்டி இடப்பக்கம் தட்டி – லேசாகத் தண்ணி தெளிச்சு – ஒரே பதத்துக்கு ஒண்ணா நசுக்கி – ரெண்டு காஞ்ச மொளகா, இத்துனூண்டு புளி – ஒரு பல்லோ ரெண்டு பல்லோ பூண்டு எல்லாஞ் சேத்து இழுத்தரைச்சு’’[74]

என்று விளக்கமாகச் சொல்வதைப் படித்தவுடனேயே நாமும் செய்து பார்க்கக் கூடிய அளவிற்குத் தெளிவான விளக்கத்தைத் தருகிறார் கவிஞர்.

## தொகுப்புரை

எழுத்தாளனின் நடை பற்றிய கருத்துக்களும், நல்லநடையின் சிறப்பும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தென்தமிழக வழக்கு, தேனி மாவட்ட வட்டார வழக்கின் தன்மையும், எழுத்து வழக்கின் தன்மையும், அது பேச்சு வழக்கில் மாறுபட்டு வருவது பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

ஒலிமாற்றத்தின் தன்மைகள் குறித்தும், அவை எந்தெந்த இடங்களில் மாறி வருகின்றது என்பதைப் பற்றியும் ஆய்வில் புலப்படுத்தப் பெற்றுள்ளது.

கிராமப்புற மக்கள் வேற்றுமொழிச் சொற்களைப் பயன்படுத்தும் நடை பற்றி ஆய்வுப் படைப்புகளின் வழி சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

பேச்சு வழக்குச் சொற்கள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.

வருணனை, கதைக்கூற்று, உரையாடல், பழமொழி, விடுகதைகள் கலந்து பேசப்படும் நடை குறித்தும் சான்றுகளுடன் ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

உவமைகள், உருவகம், குறியீடு, அடுக்குச் சொல் நடை பற்றியும், ஒலிக் குறிப்புச் சொற்கள் கலந்த நடை குறித்தும் ஆராயப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1) இரா. மோகன், டாக்டர் மு.வ.வின் நாவல்கள், ப.75.

2) Kamil Zevelbil V; 1964, Spoken Language of Tamil Nadu Ar. or 32, 237-264.

3) கோ. சீனிவாச வர்மா, கிளை மொழியியல், ப.III.

4) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.21.

5) மேலது., ப.160.

6) மேலது., ப.53.

7) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.171.

8) மேலது., ப.173.

9) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.91.

10) மேலது., ப.18.

11) ஜெ.நீதிவாணன், நடையியல், ப.146.

12) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, பக்.174-175.

13) மேலது., பக்.217-18.

14) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.328.

15) மேலது., ப.327.

16) வைரமுத்து, தண்ணீர்தேசம், ப.4.

17) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.308.

18) எம்.ஏ. பழனியப்பன், இலக்கிய உலகின் மேதைகளின் உலா, ப.92.

19) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், பக்.311-312.

20) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.176.

21) க. கிருஷ்ணகுமாரி, சூர்ய காந்தனின் மானாவாரி மனிதர்கள் - ஓர் ஆய்வு, பக்.57-58.

22) வைரமுத்து, கள்ளிக் காட்டு இதிகாசம், ப.180.

23) மேலது., பக்.15-16.

24) மேலது., ப.296.

25) மேலது., ப.297.

26) தொல்., செய்யுளியல், நூ. 170.

27) சாலை இளந்திரையன், சமுதாய நோக்கில் பழமொழிகள், ப.122.

28) மேலது., ப.122.

29) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.18.

30) குறள்., 129.

31) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.139.

32) மேலது., ப.262.

33) மேலது., ப.251.

34) மேலது., ப.27.

35) மேலது., ப.205.

36) மேலது., ப.102.

37) மேலது., ப.256.

38) மேலது., ப.89.

39) மேலது., ப.18

40) மேலது., ப.21.

41) நம். சீனிவாசன், வைரமுத்து ஆய்வுக் களஞ்சியம் II, ப.293.

42) ச.வே. சுப்ரமணியன், தமிழில் விடுகதைகள், ப.2.

43) கலைக் களஞ்சியம், தொகுதி 9, ப.319.

44) ச.வே. சுப்ரமணியன், தமிழில் விடுகதைகள், ப.48.

45) மேலது., ப.36.

46) ஆறு. இராமநாதன், தமிழில் விடுகதைகள், ப.55.

47) தொல்., செய்யுளியல், நூ.169.

48) குறுந்., .203.

49) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.109.

50) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.87.

51) மேலது., ப.93.

52) வைரமுத்து, கருவாச்சி காவியம், ப.167.

53) மேலது., ப.168.

54) இரா.சீனிவாசன். சங்க இலக்கியத்தில் உவமைகள் - ஓர் ஆய்வு, ப.1.

55) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.94.

56) மேலது., ப.92.

57) மேலது., ப.45.

58) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.113.

59) வைரமுத்து, இரத்ததானம், ப.38.

60) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப.332.

61) வைரமுத்து, இன்னொரு தேசியகீதம், ப.90.

62) வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.113.

63) வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப.457.

64) வைரமுத்து, இரத்ததானம், ப.75.

65) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.35.

66) வைரமுத்து, இரத்ததானம், ப.26.

67) மேலது., ப.35.

68) ஜெ.நீதிவாணன். நடையியல், ப.146.

69) வைரமுத்து, பெய்யெனப் பெய்யும் மழை, ப.32.

70) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.35.

71) மேலது., ப.157.

72) மேலது., ப.228.

73) மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.90.

74) வைரமுத்து, கள்ளிக்காட்டு இதிகாசம், ப.21.

# ஆய்வு நிறைவுரை

'கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு' என்னும் பொருளில் ஆய்வு செய்ததன் வழியே கீழ்க்கண்ட முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

1. வைகை அணைக்கட்டில் மூழ்கிப் போன 14 சிற்றூர்களுள் ஒன்றான மெட்டூரில் பிறந்த கவிஞர் வைரமுத்து, பதினோறாம் வயதில் கவிதை எழுதத் தொடங்கி இன்று வரை கவிதை, கட்டுரை, நாவல் எனப் பல வகைகளையும் சேர்த்து 40 நூல்கள் வரை எழுதியுள்ளார். ஏழாயிரம் திரையிசைப் பாடல்களை எழுதிய வைரமுத்து, ஆறு முறை திரையிசைப் பாடலுக்காகத் தேசிய விருதும், பத்மஸ்ரீ விருதும், பத்மவிபூசன் விருதும், சாகித்திய அகாதெமி விருதும் பெற்றுள்ளார்.

2. வைரமுத்து விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவரென்பதால், அவருடைய படைப்புகளில் வேளாண்தொழில் சார்ந்த செய்திகள் அதிகமாகக் காணப்பெறுகின்றன என்று துணியலாம்.

3. பாரதியார் கவிதைகளில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்த கவிஞரிடம், பெரியார், அண்ணா, கருணாநிதி ஆகியோரின் எழுத்துக்கள் பகுத்தறிவுச் சிந்தனையை ஊட்டியிருக்கின்றன எனக் கருத முடிகின்றது.

4. வாழ்க்கையில் தான் பெற்ற அனுபவங்களையும், தான் பிறந்த மண்ணையும் நேசித்த மனிதர்களோடு இருந்த உறவையும், கடந்து வந்த பாதையையும் மறவாமல் பாடுபொருளாக்கியிருப்பதில், வைரமுத்துவின் படைப்பிற்கான மூல ஊற்று எதுவென்பதை அறிய முடிகின்றது.

5. பிறந்த மண்ணை நேசிக்கத் தெரியாத இன்றைய தலைமுறையினரிடம் மண்ணை நேசிக்கத் தூண்டி, அறிவியல் யுகத்தின் தாக்கம் ஊடுருவாததால் தலை சிறந்த பண்பாட்டைக் கொண்டிருக்கும் கிராமங்கள் இன்று நகரமயமாதலால் சிதிலமடைந்துள்ளன என்பதும், கிராமங்களைப் பாதுகாத்துத் துதிக்க வேண்டும் என்பதும் ஆய்வுப் படைப்புகளின் வழியே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

6. மனிதனிடமிருக்கும் நற்பண்புகள் பிற உயிர்களிடத்தில் வெளிப்படும்போது மனிதநேயமாக அமைகிறது. பிறர் கண்ணீரைத் துடைத்தல், முதியோரிடம் அன்பு காட்டுதல், கண்தானம் செய்தல், அ∴றிணை மீதும் நேசம் காட்டுதல் முதலான மனித நேயச் செயல்கள் ஆய்வில் புலப்படுத்தப் பெற்றுள்ளன.

7. கிராமப்புறத்தில் கணவன் - மனைவி இருவர்க்கிடையே இழையோடும் அன்பு, பிடிக்காதவர்களிடத்தும் அன்பு செலுத்தும் தன்மை, காதல், உண்மையான நட்பு, சக மனிதர் துன்பப்படும் போது மனம் வருந்தும் இரக்கம், ஒற்றுமையுணர்வு முதலான வாழ்வியல் நெறிகளைக் கொண்டிருந்தமை புலப்படுகிறது.

8. விவசாயப் பயிரிடும் முறை, உரமிடுதல், உழைப்பு, உயிரோடு இருக்கும்போதே புதைந்து போய்விடும் வாழ்க்கை நிலை கொண்ட உழவனின் வறுமை நிலை, உயிருக்கு நிகராகப் பூமியை மதிக்கும் கிராம மக்களின் மனநிலை, பயிரை உயிராக மதித்தல், விவசாயத் தொழிலைக் கற்றல், கிராமப்புற மனிதர்கள் ஒருவரையொருவர் செல்லப் பெயரிட்டு

அழைத்தல், ஒருவருக்கொருவர் மனம் நோகாதபடி நையாண்டி செய்தல் முதலானவற்றை நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் நெறிகளாக எண்ண முடிகின்றது.

9. விவசாயம் மற்றும் அதோடு தொடர்புடைய கால்நடை மேய்த்தல், எரு தயாரித்து விற்றல், புல் அறுத்தல், வயல் வெளிகளில் கிடை போடுதல் முதலான துணைத் தொழில்கள், மீன் பிடித்தல், சவரத்தொழில், சலவைத் தொழில் ஆகியவற்றைச் செய்து பொருளாதாரத் தேவையினைப் பூர்த்தி செய்து கொள்ளும் கிராமப் பொருளாதாரச் சிந்தனை எண்ணத்தக்கது.

10. உற்பத்திப் பொருட்களை விற்கவும், தேவைப்படும் பொருட்களை வாங்கவும் சந்தைப்படுத்தும் முறை இருந்தமை, பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கப் பெண்களும் வேலைக்குச் செல்லுதல், சிக்கனம், விவாசயக் கடன் பெறுதல், சிறுசேமிப்பு முதலான சிந்தனைகள், மக்களைப் பொருளாதார நெருக்கடியிலிருந்து மீட்டெடுத்து முன்னேற்றமான நிலைக்கு அழைத்துச் செல்லும் சிந்தனைகள் என்று கருதலாம்.

11. பண்பாடு என்பது சமூக மரபுரிமை என்றும், பண்பாட்டை ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்கு மக்கள் கடத்துகின்றனர் என்றும், பண்பாடு என்ற வட்டத்திற்குள்ளேயே இலக்கியம் இயங்குகின்றது என்றும் கருதலாம்.

12. சமுதாயத்தின் உறுப்பினர் என்ற முறையில் மக்களால் பின்பற்றப்படும் அனைத்தும் பண்பாடுகள் எனக்கொள்ளலாம். இவ்வகையில் கிராமப்புறச்

சமுதாயத்தில் காணப்பெறும் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், மதிப்புகள், ஒழுக்கங்கள், தொழில் நுட்பங்கள், கலைகள், விளையாட்டுகள் அனைத்தும் பண்பாட்டின் கூறுகளாக அமைகின்றன.

13. கிராம மக்களின் நன்றியுணர்ச்சி, கொடை, கால்நடைகளைக் குடும்ப உறுப்பினராகக் கருதும் பண்பு, மகண் மறுத்தல், திருமண மரபு, மறுமணம், தாலியின் மகத்துவம், கிராமத்துப் பெண்கள் கணவரின் பெயர் சொல்லாத பண்பு முதலான கிராமப்புற மக்களின் பண்பாடுகள் ஆய்வின் வழி புலப்படுத்தப்பட்டுள்ளன.

14. கிராமத்து மக்களின் உணவு, உடை, உறைவிடம், விருந்தோம்பல் பண்பு, உலக உயிர்களிடம் அன்பு காட்டும் தனிப்பண்பு, மார்க்கத் திருமணம், காதுகுத்து விழா, தாய்மாமன் சீர், மொய் விருந்து முதலான பண்பாடுகள் ஆய்வில் வெளிப்படுத்தப் பெற்றுள்ளன.

15. வயதான முதியோர் பற்றிய எண்ணங்கள், தீட்டுணர்வு, கிராமியப் பழக்கம், பகுத்தறிவுச் சிந்தனை, கிராம மருத்துவ முறைகள் முதலான பண்பாடுகள் ஆய்வில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இத்தகைய பண்பாடுகளை அடிப்படையாக் கொண்டு வாழ்ந்த நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை நிலை பல வகைகளில் மேம்பட்டே காணப் பெற்றது என்பது சுட்டுவதற்குரியதாகும்.

16. நம்பிக்கையின் துணை கொண்டே மனித வாழ்க்கை பயணிக்கிறது. உள உருவாக்கம் என்றும், அதற்கு அடிப்படையாக அமையும் நிலைப்பாட்டுக்

கொள்கை என்றும் விளக்கம் பெறும் நம்பிக்கை குறித்து வரையறுக்கப்பட்டுள்ளது.

17. சமயத் துறைகளில் மேற்கொள்ளப் பெற்ற நம்பிக்கைகளைத் தெய்வ வழிபாடு, பலியிடுதல், காணிக்கை செலுத்துதல், விலங்குகள் பற்றிய நம்பிக்கை, நிமித்தங்கள், நாள் பற்றிய நம்பிக்கைகள் முதலானவை ஆய்வுப் படைப்புகளின் வழியே எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

18. குழந்தைப் பேறுகாலத்திற்குத் தாய்வீடு செல்லுதல், குழந்தைப்பேறு பற்றிய நம்பிக்கை, கனவு, காத்து கருப்பு, கோடாங்கி பற்றிய நம்பிக்கை, குலமகள் கண்ணீர் விடுதல், விதி, பசுமாட்டைத் தெய்வமாக நினைத்தல், மழை வேண்டிப் பிரார்த்தனை முதலானவை கிராமப்புற மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கைகளாக ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

19. வீட்டிற்கு வெளியே தரக்கூடாத பொருள்கள், சகுனம் பார்த்தல், சாபமிடுதல், சத்தியம் செய்தல், விளைச்சல் குறித்த நம்பிக்கை, பூப்போட்டுப் பார்த்தல், கைராசி பார்த்தல், கண்ணேறு படுதல், மாலை நேரத்து மழை பற்றிய நம்பிக்கை முதலானவையும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளன.

20. ஒரு குறிப்பிட்ட இன, வட்டார மக்களின் பழக்க வழக்கங்கள், பேச்சு வழக்குகள், நடையுடை பாவனைகள், செயல்பாடுகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அமையும் வட்டார வழக்குகள் இன்றைய நவீன இலக்கிய உலகில் பெரிதும் காணப்படுவது எண்ணத்தக்கதாகும்.

21. தென் தமிழக வழக்கு, தேனி மாவட்ட வட்டார வழக்கின் தன்மையும், எழுத்து வழக்கின் தன்மையும், அது பேச்சு வழக்கில் மாறுபட்டு வருவது பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

22. ஒலி மாற்றத்தின் தன்மைகள் குறித்தும், அவை எந்தெந்த இடங்களில் மாறி வருகின்றது என்பது பற்றியும், கிராமப்புற மக்கள் வேற்றுமொழிச் சொற்களைப் பயன்படுத்துவது பற்றியும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

23. படைப்பாசிரியர் வைரமுத்து மேற்கொண்ட நடை வகைகளாக, வருணனை நடை, கதைக்கூற்று நடை, உரையாடல் நடை, பழமொழிகள், விடுகதைகள் கலந்த நடை, உவமைகள் சொல்லும் நடை, உருவக நடை, குறியீட்டு நடை, அடுக்குமொழி நடை, ஒலிக்குறிப்புச் சொற்கள் கலந்த நடை, பேச்சுமொழி நடை, பிறமொழிச் சொல் கலந்த நடை, விளக்க நடை ஆகியன புலனாகின்றன.

24. கிராமப்புற நடப்பியல் மற்றும் பொழுது போக்குவது குறித்த செய்திகளைக் கூறும் போது, வருணனை நடை, பழமொழிகள், விடுகதை கலந்த நடை, உவமை நடை, உருவக நடை, அடுக்குமொழி நடை, ஒலிக்குறிப்புச் சொல் நடை, பேச்சு மொழி நடை, பிறமொழிச்சொல் கலப்புநடை, விளக்கநடை முதலான நடைகளைக் கையாண்டுள்ளமையைக் காண முடிகின்றது.

25. சமூகத்தைப் பிரதிபலிப்பதற்கும், சாடுவதற்கும், அறிவுறுத்துவதற்கும், குறியீட்டு நடை, கதைக்கூற்று நடை, உரையாடல் நடை ஆகியவற்றைக் கையாண்டிருப்பது போற்றுதற்குரியது.

மேலாய்விற்குரிய வழிகள்

“கவிஞர் வைரமுத்துவின் படைப்புகளில் நாட்டுப்புறச் சிந்தனைகள் - ஓர் ஆய்வு” என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, ‘வைரமுத்துவின் படைப்பு ஆளுமை’ என்பது குறித்து ஆய்வு செய்ய வழிவகுக்கும். படைப்பாசிரியரின் படைப்புகளில் வேளாண்மைத் தொழில் குறித்த செய்திகள் பரவலாகக் காணப் பெறுகின்றன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு, ‘வைரமுத்து படைப்புகளில் வேளாண் தொழில் செய்திகள்’ என்பது குறித்துத் தனியான ஆய்வு நிகழ்த்த வாய்ப்பிருக்கிறது.

மனிதன் பிற மனிதன் மீது செலுத்தும் நேயமான மனிதம் குறித்து இன்று பரவலாகப் பேசப்படுகிறது. அத்தகைய சிந்தனைகள் வைரமுத்துவின் படைப்புகளிலும் காணப்பெறுவதால் அவற்றின் அடிப்படையில், ‘கவிஞர் வைரமுத்துவின் படைப்புகள் காட்டும் மனித நேயம்’ என்னும் தலைப்பில் ஆய்வு செய்யலாம்.

இன்றைய சமுதாயத்தில் பல சிக்கல்கள் காணப்படுகின்றன. அவற்றிற்கான தீர்வுகள், படைப்பாசிரியரின் படைப்புகளில் இடம் பெற்றுள்ளன. இவற்றின் அடிப்படையில் ‘வைரமுத்து படைப்புகளில் சமுதாயச் சிக்கல்கள்’ என்பது குறித்துத் தனியே ஆய்வு செய்யவும் இவ்வாய்வு வழிகாட்டுகிறது.

உளவியல் அடிப்படையில் ஆய்வு செய்யும் போக்கு பெருகி வருவதால், ‘வைரமுத்து படைப்புகளில் காணப்படும் உளவியல் கோட்பாடுகள்’ என்பது பற்றி ஆய்வாளர்கள் தொடர்ந்து ஆய்வு செய்யவும், இவ்வாய்வு வழிவகை செய்கிறது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. வைரமுத்து, இதுவரை நான்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
1983.

2. ------------------- கவிராஜன் கதை,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
1983.

3. ------------------- ரத்த தானம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
1984.

4. ------------------ தமிழுக்கும் நிறம் உண்டு,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
1997.

5. ------------------ தண்ணீர் தேசம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
ஒன்பதாம் பதிப்பு,
2003.

6. ------------------ காவிநிறத்தில் ஒரு காதல்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
எட்டாம் பதிப்பு,
2003.

7. ------------------ இன்னொரு தேசிய கீதம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
பனிரெண்டாம் பதிப்பு,
2004.

8. ------------------ திருத்தி எழுதிய தீர்ப்புகள்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,

இருபதாம் பதிப்பு,

2005.

9. ------------------- பெய்யெனப் பெய்யும் மழை,

சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,

22, நான்காம் குறுக்குத் தெரு,

டிரஸ்ட்புரம், சென்னை,

ஒன்பதாம் பதிப்பு,

2006.

10. ------------------- என் பழைய பனை ஓலைகள்,

சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,

22, நான்காம் குறுக்குத் தெரு,

டிரஸ்ட்புரம், சென்னை,

பதினொன்றாம் பதிப்பு,

2006.

11. ------------------- இந்தப்பூக்கள் விற்பனைக்கல்ல,

சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,

22, நான்காம் குறுக்குத் தெரு,

டிரஸ்ட்புரம், சென்னை,

பதினெட்டாம் பதிப்பு,

2007.

12. ------------------- கொடிமரத்தின் வேர்கள்,

சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,

22, நான்காம் குறுக்குத் தெரு,

டிரஸ்ட்புரம், சென்னை,
பதிமூன்றாம் பதிப்பு,
2007.

13 ------------------- கருவாச்சி காவியம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
மூன்றாம் பதிப்பு,
2007.

14. ------------------- கள்ளிக்காட்டு இதிகாசம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
பதினான்காம் பதிப்பு,
2008.

15. ------------------- பாற்கடல்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
ஒன்பதாம் பதிப்பு,
2008.

16. ------------------- வைரமுத்து கவிதைகள்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,

22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை.

17. ------------------- வைகறை மேகங்கள்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
இருபத்தி ஒன்பதாம் பதிப்பு,
2009.


## துணைமைச் சான்றாதாரங்கள்

### தமிழ்


1. அகத்தியலிங்கம், ச., கவிதை உருவாக்கம்,
மணிவாசகர் பதிப்பகம்,
8-7, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை.

2. அப்துல் வஹ்ஹாப், எஸ்., இஸ்லாத்தில் இறை வழிபாடு,
சாஜிதா புக் சென்டர்,
சென்னை.

3. அப்துல் ரகுமான், ஆலாபனை,
கவிக்கோ பதிப்பகம்,
வான்மீகி நகர்,
சென்னை,

| | | |
|---|---|---|
| | | முதற்பதிப்பு, |
| | | 1995. |
| 4. | அரங்கராசு, | தமிழ்ப் புதுக்கவிதை – ஒரு திறானய்வு, |
| | | மூன்றாம் உலகப் பதிப்பகம், |
| | | கோயம்புத்தூர். |
| 5. | அருணன், | வளரும் சிகரம் வைரமுத்து, |
| | | காவ்யா, |
| | | 16, இரண்டாவது குறுக்குத் தெரு, |
| | | டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், |
| | | சென்னை, |
| | | 2012. |
| 6. | அறிவுமதி, எஸ்., | பிருந்தாவனத்து பிரமீடுகள், |
| | | அருணோதயம் பதிப்பகம், |
| | | சென்னை, |
| | | 1979. |
| 7. | ஆனைமுத்து, வே. (பதி.ஆ)., | பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள், |
| | | I & II-ஆம் தொகுதி, |
| | | சிந்தனையாளர் கழகம், |
| | | திருச்சி, |
| | | 1974. |
| 8. | இராமநாதன், ஆறு., | தமிழில் விடுகதைகள், |
| | | மெய்யப்பன் பதிப்பகம், |

சிதம்பரம்,
2003.

9. இராமலிங்கம், மா., நாவல் இலக்கியம்,
நியு செஞ்சுரி புக்ஹவுஸ் வெளியீடு,
41பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை 600 098.

10. --------------------------------- இருபதாம் நூற்றாண்டு தமிழ் இலக்கியம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
1973.

11. இளம் பூரணர், (உ.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
7-அம் மறு அச்சு,
சென்னை,
1974.

12. கந்தசாமி, இல.செ., காதல் வாழ்வில் கால்நடைகள்,
கழக வெளியீடு,
சென்னை,
1978.

13. ------------------------------ புதுக்கவிதை ஒரு பார்வை,
கலைச் செல்வம் பதிப்பகம்,

கோவை,
1981.

14. கௌமாரீஸ்வரி. எஸ்., (பதி.ஆ), திருக்குறள்,
சாரதா பதிப்பகம்,
ராயப்பேட்டை,
சென்னை,
2004.

15. காந்தி, க., தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாவது முதன்மைச் சாலை,
சி.ஐ.டி வளாகம்,
சென்னை.

16. சக்திவேல், சு., நாட்டுப்புற இயல் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.

17. சண்முக சுந்தரம், வைரமுத்து இலக்கியத் தடம்,
காவ்யா,
14, முதல் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை.

18. சாலை இளந்திரையன், சமுதாய நோக்கில் பழமொழிகள்,
பாரிநிலையம்,
சென்னை.

19. ---------------------- புதிய தமிழ்க்கவிதை,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை
1969.

20. சித்தீக் அலி, இ.அ., இப்ராஹிம், ப., தமிழ் இலக்கிய வரலாறு,
சங்கம் வெளியீடு,
கோ. புதூர்,
மதுரை,
2009.

21. சிபிச் செல்வன், (தொ.பா)., காலச்சுவடு கவிதைகள்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு,
2004.

22. சிவத்தம்பி, கா., இலக்கியத்தில் முற்போக்கு வாதம்,
பாட்டாளிகள் வெளியீடு,
சென்னை
1978.

23. சீனிவாசன், ரா., சங்க இலக்கியத்தில் உவமைகள்,
அணியகம்,

சென்னை,
முதல் பதிப்பு,
1973.

24. சீனிவாசன், நம்., (தொ.பா), வைரமுத்து ஆய்வுக் களஞ்சியம்,
தொகுதி I & II & III,
காவ்யா வெளியீடு,
16, இரண்டாம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை.

25. சீனிவாச வர்மா, கோ., கிளை மொழியியல் - III,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
இறுதி பதிப்பு,
1986.

26. சீனிவாசராகவன், அ., ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை,
மெர்க்குரி புத்தகம் கம்பெனி,
கோயம்புத்தூர்,
1970.

27. சுப்பிரமணியன், ச.வே., தமிழில் விடுகதைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை.

28. சுப்பிரமணியன், ச.வே., மெய்யப்பன் தமிழகராதி,
மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை,
சென்னை.

29. செகந்நாதன், ஆ., புதுக்கவிதை ஒரு திறனாய்வு,
திலகன் பதிப்பகம்,
மேலையூர்,
சீர்காழி.

30. செயராமன், ந.வீ., புதுக்கவிதையில்,
இலக்கியப் பதிப்பகம்,
சென்னை,
1980.

31. சேனாவரையர், (உ.ஆ)., தொல்காப்பியம்,
சொல்லதிகாரம் கழக வெளியீடு,
திருநெல்வேலி சைவ சித்தாந்த,
நூற் பதிப்பகம் லிமிடெட்,
திருநெல்வேலி,
1970.

32. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பாண்பாடும்,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை,
1999.

33. துரைசாமிபிள்ளை,
ஔவை, சு., (உ.ஆ), வள்ளலார் திருவருட்பா,

அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு,
அண்ணாமலை நகர்,
சிதம்பரம்,
முதற் பதிப்பு 1986.

34. தாமரை பாண்டியன், நாட்டார் வழக்காறுகளில் மக்கள் இடம்
பெயர்வும் வரலாறும்,
சேகர் பதிப்பகம்,
66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர் நகர்,
சென்னை,
2005.

35. தேன்மொழி, இசையில்லாத இலையில்லை,
மதிநிலையம்,
சென்னை,
2001.

36. நாகராசன், வி., பத்துப்பாட்டு,
இரண்டாம் பகுதி நியுசெஞ்சுரி புக்,
ஹவுஸ் (பி) லிட்.,
41, பி. சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.

37. --------------------------- சங்க இலக்கியம் - குறுந்தொகை,
நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.

38. நீதிவாணன், ஜெ., நடையியல்,
தொ.பொ.மீனாட்சி சுந்தரனார்
அறக்கட்டளை,
மதுரை,
மூன்றாம் பதிப்பு,
2001.

39. பரிமாணம், அ.மா.,
பாலசுப்பிரமணியன், கு.வே., சங்க இலக்கியம் - புறநானூறு,
நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை.

40. பழனியப்பன், எம்.ஏ., இலக்கிய உலகின் மேதைகளின் உலா,
நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.

41. பாலசுப்பிரமணியன், சிற்பி, சிரித்த முத்துக்கள்,
கவிதா பதிப்பகம்,
தி.நகர், சென்னை,
முதற் பதிப்பு,
2000.

42. பாலசுப்பிரமணியன், கு.வே., சங்க இலக்கியம் - நற்றிணை,
நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,

41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.

43. பாலசுப்பிரமணியன், நா., இக்காலஇலக்கியத்தில் கவிஞர்வைரமுத்து
அருண் புத்தகாலயம்,
55-20, கண்ணகி தெரு,
எம்.ஜி.ஆர் நகர்,
சென்னை,
2008.

44. பாலதண்டாயுதம், கே., இலக்கியத்தில் மனித நேயம்,
நியுசெஞ்சுரிபுக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
சென்னை,
மூன்றாம் அச்சு,
1992.

45. பாரதிதாசன், அழகின் சிரிப்பு,
கங்கை புத்தக நிலையம்,
இரண்டாம் பதிப்பு,
சென்னை,
1996.

46. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள்,
டதி செண்பகா பதிப்பகம் பாண்டி பஜார்,
தியாகராயநகர்,
சென்னை.

| | | |
|---|---|---|
| 47. | பாரதியார், | பாரதியார் கவிதைகள்,<br>மணிவாசகர்,<br>பதிப்பகம்,<br>சென்னை,<br>1992. |
| 48. | பொன்மணி வைரமுத்து, | பொன்மணி வைரமுத்து கவிதைகள்,<br>சூர்யா வெளியீடு,<br>டிரஸ்ட்புரம்,<br>சென்னை. |
| 49. | மகுடேஸ்வரன், | இன்னும் தொலையாத தனிமை,<br>தமிழினி, சென்னை பதிப்பு,<br>2007. |
| 50. | மறைமலை, சி.அ., | இலக்கியமும் சமூகவியலும்,<br>மணிவாசகம் பதிப்பகம்,<br>சென்னை,<br>1991. |
| 51. | மரபின்மைந்தன் முத்தையா, | ஒரு தோப்புக் குயிலாக கவிப் பேரரசு<br>வைரமுத்து அவர்களுடன்,<br>விஜயா பதிப்பகம்,<br>20, இராஜவீதி,<br>கோயம்புத்தூர். |
| 52. | மனோகரன், இரா., | மதுரைச் சீமையிலிருந்து ஒரு<br>மண்வாசனைக் கவிஞர், |

காவ்யா,
இந்திராநகர்,
பெங்களூர்.

53. முருகேசன், க.ஆ., வாழ்க்கை நதியோடு வைரமுத்து,
காவ்யா, இந்திரா நகர்,
பெங்களூர்,
1999.

54. முகிலன், க., (மொ.பெ.), டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் வாழ்க்கைவரலாறு,
மார்க்கீசிய பெரியார் பொதுவுடைமைக்கட்சி,
சென்னை.

55. மோகன், இரா., டாக்டர் மு.வ. வின் நாவல்கள்,
சர்வோதய இலக்கியப் பண்ணை,
மதுரை,
1972.

56. வள்ளலார் (துரைசாமிபிள்ளை
ஒளவை சு., (உ.ஆ), திருவருட்பா,
அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு,
அண்ணாமலைநகர்,
முதற்பதிப்பு,
1986.

57. வானமாமலை, நா., தமிழர், வரலாறும் பண்பாடும்,
நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,

சென்னை,
நான்காம் அச்சு,
1996.

58. ------------------------------ புதுக்கவிதை முற்போக்கும், பிற்போக்கும்,
மக்கள் வெளியீடு,
சென்னை,
1875.

59. வைரமுத்து, வடுகப்பட்டி முதல் வால்கா வரை,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
1989.

60. ------------------ சிகரங்களை நோக்கி,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
1992.

61. ------------------ கொஞ்சம் தேநீர் நிறைய வானம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
2005.

62. ------------------- இந்தக் குளத்தில் கல்லெறிந்தவர்கள்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை.
ஒன்பதாம் பதிப்பு,
2006.

63. ------------------- எல்லா நதியிலும் என் ஓடம்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
பத்தாம் பதிப்பு,
2007.

64. ------------------- இதனால் சகலமானவர்களுக்கும்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிமிடெட்,
22, நான்காம் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை,
ஒன்பதாம் பதிப்பு,
2007.

65. ராசு, த., புதிய நோக்கில் படைப்பிலக்கியம்,
மணிவாசகர் பதிப்பகம்,
12பி, மேல சன்னதி,
சிதம்பரம்,
1985.

66. ராபட் பி. டவுண்ஸ், உலகை மாற்றிய புத்தகங்கள்,
கலைமகள் பதிப்பகம்,
சென்னை.

67. ஜெயப் பிரகாசம், பா., எதிர்காற்று,
தாமரைச் செல்வி பதிப்பகம்,
கே.கே.நகர்,
சென்னை,
முதற் பதிப்பு,
1998.

68. ------------------------------------ அகநானூறு,
உ.வே.சா. உரை,
கழகப் பதிப்பு,
சென்னை,
1958.

69. ------------------------------------ கலித்தொகை,
எஸ். ராஜம் வெளியீடு,
தம்புச் செட்டித் தெரு,
சென்னை,
1957.

70. ------------------------- சுற்று சூழலியல் நோக்கில் சங்கத் தமிழகம்,
தி.பார்க்கர்,
சென்னை,
2003.

71. ------------------------- பாரதியார் கவிதைகள்,
மணிவாசகம் பதிப்பகம்,
சென்னை,
1992.

72. ---------------------------- தொல்காப்பியம்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
முதற் பதிப்பு,
1962.

73. …………………… மாற்றங்கள்,
திருநெல்வேலி சமூகசேவை சங்க வெளியீடு,
திருநெல்வேலி.

## கட்டுரைகள்

1. அறவாணன், க.ப., கம்பராமாயணம் எழுதப் பெற்ற
சமுதாயப் பின்புலம்,
கம்பர் ஆய்வுக் கோவை,
கங்கை புத்தக நிலையம்,
சென்னை,
1995.

2. இராஜமார்த்தாண்டன், தீவிர படைப்பாளிகள் களமிறங்க
வேண்டிய தருணம்,
காலச்சுவடு (இரு மாத இதழ்)

ஜனவரி – பிப்ரவரி,
2002.

| | | |
|---|---|---|
| 3. | சௌரிராஜன், பொன்., | குமுதம் (1993) இதழ்கள் உணர்த்தும் சமுதாய விழிப்புணர்வு, முப்பத்தோராம் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி - மூன்று, இ.ப.த.ம. வெளியீடு 2000. |
| 4. | நீதிவாணன், ஜெ., | பின்புலமும் மொழி நடையும், அகிலன் கருத்தரங்க ஆய்வுரைகள், மதுரைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடு, மதுரை, 1976. |
| 5. | முருகேசுவரி, பா., | ஒரு தொடர்கதை முற்றுப் பெறுகிறது - ஒரு நோக்கு, முப்பத்தோராம் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி – 3 இ.ப.த.ம. வெளியீடு, 2000. |

## ஆங்கில நூற்கள்


1. Heimsath, Charles, H., Indian Nationalism and Hindu Social Reform, Oxford University Press, Bombay, 1964.
2. Jamunanag, Rajaram Mohan Roy, Sterling Publishers (P) Ltd., New Delhi, 1972.
3. John Milton, Complete Poems & Major Prose, Merit Y. Hyghes (Ed), Odyssey Press, New Work, 1958.
4. Kamil Zevelbil, V., Spoken Language of Tamil Nadu, 1964.
5. Mangala Murugesan, N.K., Self Respect Movement in Tamilnadu (1920-1940),

Koodal Publishers,
Madurai.

6. Robert C. Elliot., Princeton Encyclopedia of Poetry and Poetics,
Macmillan,
London,
1979.

## ஆங்கில அகராதிகள்

1. Encyclopaedia Britiannica, Vol.II,
The Encyclopaedia Britannica Company Ltd.,
London,
1956.

2. India, 2003,
Publication Division,
Ministry of Intermation and Broad Coasting,
Government of India,
2003.

3. James Robert Vernam Merchant; Joseph F Charles,
Cassell's Latin Dictionary,
Funk & Wagnalls Co.

London,

1924.

4. Madras University, Lexicon, Vol.IV,

Madras University,

1936.

5. Tamil Lexicon, Vol. IV, Part I,

University of Madras,

1956.

**ஆய்வேடுகள்**

1. கதிரேசன், சு.ப., கண்ணதாசன் கவிதைகளில் சமுதாயக் கூறுகள்,

பா.ப.க., பி.பி.ஆ.,

1990.

2. கிருஷ்ணகுமாரி, கு., சூர்ய காந்தனின் மானாவாரி மனிதர்கள் - ஓர் ஆய்வு

பாரதியார் பல்கலைக் கழக

எம்.ஃ.பில் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு

2004

3. துரைப் பாண்டியன்,க., புதுக்கவிதையில் காதல் பற்றிய கோட்பாடு,

செ.ப.க., பி.ப.ஆ.,

1988.

**இதழ்கள்**

1. ஆனந்த விகடன், வாசன் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட். 757, அண்ணாசாலை, சென்னை, 15.04.2009, 30.11.2011.
2. கல்கண்டு, குமுதம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட். லேனா தமிழ்வாணன் (து.ஆ) சென்னை, 14.12.2000.